வாயில் அணிவதால் உயரும் தோற்றம் ந. 18







வாயில்
உடுத்தி பெருவாழ்வு வாழ்க

கடாவ் மகன்ஜி ஸ்பினிங் & வீவிங் கம்பனி லிமிடெட்

பைகுல்லா பம்பாய், ஆபீஸ் : லக்ஷ்மி பில்டிங், பல்லார்ட் பியர், பம்பாய்.
ரீடேயில் ஸ்டோர் : 216, நேதாஜி சுபாஷ்சந்திர போஸ் ரோட், மதராஸ்-1

SISTA'S-KM(5) 84

# பொருளடக்கம்


விஜய
மலர் 12

ஆடி
இதழ் 12




**குறிப்பு:**



# மால்கோஷ்

மேலே காணுவது ராத்திரி வேளையில் பாடுவதும், கம்பீர புருஷனின் தோற்றமுடையதென்று பாவிக்கப்படுவதுமான 'மால்கோஷ்' ராகத்தின் உருவகப் படம். இந்த பிரபல மனிதனின் சுபாவகுணமான வீரம் சங்கீதப் பிரேமையினால் சாந்தமடைந்திருக்கிறது. இந்த ராகத்தின் முக்கிய ரகசியம் மகிழ்ச்சியில் காதலை எடுத்துக்காட்டுவதேயாகும்.

பருவங்களுடனும் பகல் - இரவின் குறிப்பிட்ட நாழிகைகளுடனும் இசைந்து வருவது இந்திய ராகங்களின் தனிச் சிறப்பு. ஒவ்வொரு ராகமும் அந்தந்த வேளையின் ரஸம் அல்லது பாவத்தை வெளியிடும் சாதனமாகும்.

தினசரி இரவிலும் பகலிலும் அந்தந்த நாழிகைக்கு ஏற்ப ராகங்கள் உருவகப்படுத்தப்படுகின்றன. அகாலத்தில் பாடும் ராகங்களுக்கு ஜீவன் போய்விடுமாம்.

# தேனீர்

இரவு பகல் எந்த வேளையிலும், எந்த நிலையிலும் தேனீர் உற்சாகம் அளிக்கிறது.

# காவேரி

விஜய ஸ்ரீ மலர் 12

''சென்றிடுவீர் எட்டுத்திக்கும்—கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்''—பாரதியார்

ஆடி இதழ் 12


# தவறிய சீடன்


சுஜாதா


சரத்ருது முடிந்து ஹேமந்த ருது ஆரம்பித்து விட்டது. வயல்களில் பச்சைப் பசேல் என்று களங்கமற்றுக் காணப்பட்ட நாற்றுக்கள், தூங்கும் தன் குழந்தையை எழுப்ப மனமில்லாமல் முத்தம் இட விரும்பும் தாயைப்போல, தவழ்ந்து செல்லும் தென்றலில் தலையாட்டிக்கொண்டிருந்தன.

புத்தரும் அவருடைய சீடர்களும் இது நாள் வரை கழுகுக் குன்றத்திலிருந்த மோனத் தவத்திலிருந்து கலைந்து உலகுக்கு உண்மை மொழிகள் பல சொல்வதற்காகக் கிளம்பினார்கள். கூட்டத்தில் இருந்த ஒவ்வொருவரும் தாங்கள் இருந்து பழகிய குன்றைவிட்டுப்போகும் தோற்றம், தாயைப் பிரிந்து செல்லும் சேயைப்போல இருந்தது.

கண்ணைக் கவரும் அந்தப் பசும் புல்வெளியில் நடந்து கொண்டிருந்தனர் அனைவரும். இதே சமயத்தில் பக்கத்து வயலில் ஒரு அந்தணன் தன் முழங்கால் சேற்றில் புதைந்து இருக்கும்படி நின்றுகொண்டு பயிரில் களை பிடுங்கிக்கொண்டு இருந்தான். அவனைக் கண்டதும் புத்தர் கையை நீட்டிப் பிக்ஷை கேட்டார்.

அந்தணனுக்குக் கோபம் நெற்றிக்கேறி விட்டது. அவனுக்கு ஏற்கனவே புத்தர்களைக் கண்டாலே பிடிக்காது. அதுவும் அவரே வந்து பிச்சை கேட்கும்பொழுது கேட்கவா வேண்டும்!

''சீ! சீ!! என்னுடைய நிலத்தில் நான் நாட்கள்முழுவதும் உழைத்துப் பலனைகாணக் பல மாதங்கள் உழைக்க வேண்டியிருக்கிறது. நீங்கள் சோம்பேறிகளாக இருந்து கொண்டு பிக்ஷை எடுக்க வருகிறீர்களே! வெட்கமில்லை! தூ! தூ!! என்று காறித் துப்பினான்.''

புத்தர் சாந்தமாக, ''மகனே! நானும் ஒரு உழவன் தானப்பா,'' என்று சொன்னார்.

இதைக் கேட்ட பிராமணன் கல, கல வென்று நகைக்க ஆரம்பித்தான். ''ஹா! ஹா! நல்லவேலை! கையில் திருவோட்டைத் தவிர வேறொன்றையும் கணோம். உழுகிறார்களாம் உழவர்கள்!'' என்று விடாமல் சிரித்தான்.

புத்தர் மேலும் சாந்தமாக, ''கொள்கை என்னும் ஏரில் முயற்சியாகிய காளைகளைப் பூட்டி, கடுமையான தவமென்கிற நீர்பாய்ச்சிய வயலில் நம்பிக்கையாகிய விதையை விதைத்து மனிதர்களுக்கு அழியாத தன்மை என்னும் உணவைக் கொடுக்கும் உழவனப்பா நான்! இந்த வாழ்விலே நம்பிக்கை கொண்ட மனிதனுக்கு மறுபிறப்பே கிடையாது'' என்றார். அவருடைய குரல் இதைச் சொல்லும் பொழுது தழுதழுத்தது.

ஆனாலும் கன்னெஞ்சனான அந்த அந்தணன் அவர்களைத் தன்னுடைய சுடு சொற்களால் விரட்டிவிட்டான். புத்தரும் அவருடைய சகாக்களும் மேலே நடந்தார்கள்.

போகும் போது மொகல்லானு, "புத்த! இந்த மனிதன் அவனுடைய மனதைத் தவத்தால் கட்டுப்படுத்தக் கற்க வில்லே போலும். அதனுல்தான் அவன் தங் களுடைய கொள்கைகளே வெறுக்கிருன்," என்று கேட்டான்.

அதற்குப் புத்தர், "எவனெருவனுடைய மனதில் தீராத ஆசை இருக்கிறதோ தவம் அவனேச் சுத்தப்படுத்த முடியாது. இன்பத்திற்காக உலகத்தையும் தன்னுடைய செழிப்பான நிலத்தையும் விரும்புகிறது இந்த அந்தணனுடைய மனம். 'எல்லாம் என்னுடையது, எனக்கே சொந்தம்' என்று சொல்கிருன். அவனுடைய ஆயுளின் முடிவு அதாவது சாவு அவனே ஒவ்வொரு கணமும் தேடி வருவதை அவன் அறியவில்லே. அத னுல்தான் அப்படி இருக்கிருன்," என்ருர்.

* * * *

இதே சமயத்தில் பஞ்சகோரி திரும்பிப் பார்த்து, "புத்த, அந்தப் பிராம்ம ணன் நம்மைக் கைகளேக்கூப்பிச் சத்தம் போட்டு அழைக்கிருன், பார்த்தீர்களா!" என்று சொன்னுன்.

மொகல்லானு அதைப் பார்த்துவிட்டு, "கத்தட்டும்! நன்ருகக் கத்தட்டும்! இதற் கெல்லாம் புத்தர் திரும்பிவிடமாட்டார்," என்ருன்.

"இல்லே! வாயில்லா ஜீவன் கூப்பிட்டால் கூடப் புத்தர் போகத்தான் செய்வார். அவர் உலகத்திற்காகப் பிறந்தவர்." இந்தக் குரல் கேட்டு எல்லாரும் அசைவற்று நின்றுவிட்ட னர். புத்தர் தம்மைச்சுற்றி நின்றவர்களேப் பார்த்த பார்வை அவர்களேத் தலேகுனியச் செய்தது. எல்லோரும் உழவனின் நிலத்தை நோக்கித் திரும்பினர்.

நிலத்தின் பக்கம் போனதுதான் தாமதம். புத்தரின் கால்களில் வேரற்ற மரம்போல் சாய்ந்த பிராமணன், "தங்களுக்குச் செய்த பாவத்தின் விளேவை இப்பொழுதே அனு பவித்துவிட்டேன். என்னே அதனின்றும் காப்பாற்றுங்கள்," என்று வீறிட்டு அழு தான்.

புத்தரின் முகத்தில் அமைதி நிலவியது. அவர் அவனேப் பார்த்து, "உனக்கு என்ன நேர்ந்தது அப்பா?" என்று பரிவுடன் வின வினுர்.

"ஸ்வாமீ! ஒரு ஸர்ப்பம் என்னேத் தீண்டி விட்டது! உயிர்போகிறது ஸ்வாமீ! என்னேக் காப்பாற்றுங்கள்," என்று அலறினுன். அதே சமயத்தில் ஒரு பாம்பு சொத, சொத வென்றிருந்த மண்ணிலிருந்து உட்சென்று மறைந்தது.

"பஞ்சகோரி!"

"ஸ்வாமீ"

"உன்னுடைய இடைய நண்பர்களுக்குப் பாம்பு கடித்தால் என்ன செய்வீர்கள்?" என்று அவனேப் பார்த்துக் கேட்டார். ஏனென்ருல் அவனும் ஒரு இடையனுக இருந்து புத்தர் மதத்தில் சேர்ந்து இன்னும் ஒரு மாதங்கூடப் பூர்த்தியாகவில்லே.

"அவர்கள் இறந்து விடுவார்கள். ஆனுல் இறைவனின் அருள் இருந்தால் பிழைத்துக் கொள்வார்கள்," என்று பதிலளித்தான்.

பிராமணன் வலியினுல் துடித்துக் கொண்டே "புத்தரின் கருணேயினுல் நான் பிழைத்து விடுவேன்," என்று அலறினுன்.

மொகல்லானு அதற்கு, "அந்தச் சர்ப்பம் உன்னுடைய வாழ்வில் நீ செய்த கெட்ட நடவடிக்கைகளின் பிரதி!" என்று குரலில் ஆங்காரம் தொனிக்கக் கூறினுன்.

"மொகல்லானு! நம்முடைய கொள்கை கள் இருக்கட்டும். பஞ்சகோரி! கடவுள் கருணே காட்டி அவர்கள் பிழைத்தாலும் நீங் கள் உங்களுடைய முயற்சியைச் செய்யாமல் இருப்பீர்களா?"

"மாட்டோம் ஸ்வாமீ! எங்களுக்குத் தெரிந்த வரை வைத்தியம் செய்வோம்," என்று பதிலளித்தான் பஞ்சகோரி.

"சரி! அதை இப்போதே இவனுக்குச் செய்!" என்று கட்டளேயிட்டார் புத்தர்.

பஞ்சகோரி உடனே தன் கைப் பையில் இருந்த கத்தியை எடுத்து, உழவனின் காயத்தை நன்ருக ஆழமாகக் கீறினுன். ரத் தம் குபு, குபுவென்று வெளியேறியது. சில நிமிடங்கள் கழித்துச் சிறிது களி மண்ணே எடுத்துக் காயத்தை அடைத்து நன்ருகக் கட்டினுன். அந்தணன் தன்னுடைய தேகத் தில் ஏற்பட்ட உபாதையினுல் அலறினுன். இதைப் பார்த்துக்கொண்டிருந்த புத்தரின்

நெஞ்சத்திலும் உபாதை அதிகரித்தது. அவர் பஞ்சகோரியைப் பார்த்து, "பஞ்ச கோரி! இனிமேல் அவன் பிழைப்பானு?" என்ருர்.

"கட்டாயம் பிழைத்து விடுவான். ஸ்வாமி!"

* * *

புத்தர் கிளம்பி, கொஞ்ச தூரம் போன பிறகு பஞ்சகோரியைப் பார்த்தார். அவருடைய கண்களில் இன்னும் வலியினுல் துடித்து அலறும் அந்தணனின் உருவம் தான் வந்து நின்றது. என்ன தோன்றிற்ரே பஞ்ச கோரியைப் பார்த்து, "நீ அந்த மனிதன் பிழைத்துக் கொள்வான் என்று அவ்வளவு நம்பிக்கையுடன் எப்படிச் சொல்கிருய்," என்று ஆர்வம் பொங்கக் கேட்டார்.

"அந்தப் பாம்பிற்கு விஷங்கிடையாது" புத்தர் திகைத்தார். "என்ன? விஷமற்ற பாம்பா அது? அது உனக்கெப்படித் தெரியும்"

"நான் அதைப் பார்த்தேன் ஸ்வாமீ! அது நீர்ப்பாம்பு. தனக்கேற்பட்ட அதிர்ச்சியில்தான் அவன் அலறினுன்," என்று சொல்லிக்கொண்டே புத்தரின் முகத்தைப் பார்த்தான்.

"அது அவனுக்குத் தீங்கு செய்யாது என்றறிந்தும் அவனுக்கு நீ ஏன் ஹிம்சை செய்தாய்?"

பஞ்சகோரிக்குத் திக்கென்றது. அவன் இந்தக் கேள்வியை எதிர்பார்க்கவில்லை. இருந்தாலும் அவன் சமாளித்துக் கொண்டு, "ஸ்வாமி!" தங்களுக்கு அவமரியாதை செய்தானே, தாங்கள் அவனிடம் பிக்ஷை கேட்க அண்டிய போது. அதற்குத் தக்க தண்டனை கொடுக்கத்தான் ஸ்வாமீ" என்று புத்தரை வணங்கிக்கொண்டே சொன்னுன்.

"என்ன! என்னுடைய சிஷ்யனுக இருந்தும் நீ ஒருவனுக்கு ஹிம்சை பண்ணி விட்டாயே;" புத்தரின் குரலில் சோகம் தொனித்தது.

"நம்முடைய தர்மத்திற்கே ஒரு களங்கம் ஏற்பட்டு விட்டது," இது ஸரிபுத்தனின் குரல்.

"உலகத்திற்குப் புத்திமதி அளிக்கும் புத்தருக்குச் செய்த தீங்கு எனக்குப் பொறுக்கவில்லை. அதனுல் தான் நான் அவ்வாறு செய்தேன்," எனப் பஞ்சகோரி பதிலளித்தான்.

அதற்கு மொகல்லானு அவன் சார்பாக, "புத்த! பஞ்சகோரி செய்ததும் நியாயந் தானே!" என்ருன். ஆனந்தனும் அவன் பக்கமாகவே பரிந்து பேசினுன்.

ஆனுலும் புத்தரின் கண்களெதிரே கதறும் அந்தப் பார்ப்பனனின் உருவந்தான் தெரிந்தது. பஞ்சகோரி புத்தரின் முகத்தில் படியும் சாயையைப் பார்த்தபின் சலனமற்ற குளத்தில் கல்லைத்தூக்கிப்போட்டால் அலைகள் ஏற்படுமே அதே நிலையில் இருந்தது புத்தரின் மனம். கொஞ்ச நேரத்தில் தன் நிச்சலனமான தன்மையை அடைந்துவிடும் அந்தக் குளம். ஆனுல் புத்தரின் மனம்?

* * * *

மாலை நேரம் வந்தது. எல்லோரும் புத்தர் என்ன சொல்லப்போகிருரோ என்று மனதில் கலவரத்துடனேயேதான் நடந்து கொண்டு சென்ருர்கள்.

"நில்லுங்கள்!" புத்தருடைய குரல் கணீரென்று ஒலித்தது. எல்லோரும் தம்மை மறந்து நின்ருர்கள்.

"இன்று என்னுடைய சிஷ்யர்களுள் ஒருவன் தன்னுடைய கடமையை மறந்து விட்டான். அவன் தான் பஞ்சகோரி. அவன் அதற்கேற்ற பரிகாரம் செய்தே தீர வேண்டும்."

* * * *

அப்பொழுது பஞ்சகோரி இரவுச் சாப்பாட்டுக்கு நெருப்பு மூட்டிக்கொண்டிருந்தான். திரும்பிப் பார்த்தான்.

"பஞ்சகோரி!"

"ஸ்வாமீ!"

"நெருப்பே இல்லாதபோது நீ எப்படி நெருப்பு உண்டாக்கினுய்?"

"இரண்டு எரி கற்களைக் கொண்டு ஸ்வாமீ!"

"அதேமாதிரி நானும் இப்போது உன்னை அந்தணனிடம் அனுப்பப் போகிறேன். நீ ஒரு எரிகல். அவனும் ஒன்று. நீ செய்த பாவத்தை அவனுக்கு உழைத்துப் போக்கிக் கொள். ஒரு மாதம் அவனுக்குச் சகல சேவைகளையும் செய்யவேண்டும். அவன் எவ்வளவு துன்புறுத்தினாலும் பொறுத்துக் கொள் போ!" என்றார்.

பஞ்சகோரி திகைத்தான். ஸரிபுத்தனும் ஆனந்தனும் இந்த ஆணைக்கு எதிர்த்து நின்றார்கள்.

"புத்த! இவனோ சிறுபையன். பிராமணனோ உலைக்களத்தில் உருகும் இரும்பைப் போன்ற தீய நெஞ்சினன். இவன் அங்கே போனால் என்ன நடக்குமோ!" என்று ஆனந்தன் கெஞ்சினான்.

புத்தர் அசையவே இல்லை. அவருடைய தீக்ஷண்யமான பார்வை எங்கோ தூரத்தில் நிலைத்து நின்றது.

ஸரிபுத்தன்: "சின்னஞ்சிறு பையனை இவனைத் தினமும் நம்முடைய தர்மங்களைப் போதித்தே திருத்திவிடலாமே! இதற்காக இவ்வளவு கடினமான தண்டனை வேண்டாமே!"

புத்தர் சொன்னார். "ஒருவன் தான் செய்த தவறுக்குத் தக்க பரிகாரம் செய்தே தீரவேண்டும். அதனால் இவன் அங்கே போய்த்தான் ஆகவேண்டும், இல்லையெனில் இந்தச் சம்சாரத்தில் இருந்து மறு பிறப்பு என்னும் கடலில் மூழ்க வேண்டியது தான். அதற்குத் தக்க பரிகாரம் இப்பொழுதே செய்து விட்டால் இவனுக்குக் கஷ்டமும் கிடையாது," என்று அமைதியாகவே பதில் சொன்னார்.

"பஞ்சகோரி!"

"ஸ்வாமி"

"நீ ஏதாவது சொல்ல விரும்புகிறாயா?"

"ஒன்றும் இல்லை ஸ்வாமீ!"

அன்று இரவே பஞ்சகோரி புத்தர் ஆக்ஞைப்படி அந்தணனின் வீட்டுக்குக் கிளம்பிவிட்டான். அங்குக் குழுமியிருந்தவர்களின் கண்களிலே நீர்துளித்தது.

வானத்தில் தாரகைகள் என்றும் போல் கண்களைச் சிமிட்டிக் கொண்டிருந்தன.



# மிலட்டூர் பாகவத மேளநாட்டிய — நாடகம்

ஈ. கிருஷ்ணய்யர்

பாரத நாட்டில், பெருவாரியான மக்களின் வாழ்வில் தெய்வ பக்தியையும், நன்னடக்கையையும் புகுத்திப் பண்படுத்தி நாகரிகமடையச் செய்வதற்காக, நம் மூதாதையர்கள், லலிதக்கலைகளைப் பலவகையாய் வளர்த்து உபயோகித்து வந்திருக்கிறார்கள். ஆனால் அப்படிச் சிருஷ்டித்து வளர்க்கப்பட்ட கலைப்பொக்கிஷங்களில் இப்போது எஞ்சியிருப்பதைவிட மறக்கப்பட்டிருப்பவையே அதிகம் எனலாம். எஞ்சியிருப்பவைகளின் அருமை பெருமை நன்கு நம்மவர்களுக்கு இன்னும் தெரிந்தாகவில்லை. அவை சாதாரணக் கொல்லைக் கீரையைப் போலவே மதிக்கப்பட்டுக் கவனிக்கப்படாமல் கிடக்கின்றன. அத்தகைய அரும் கலை வகைகளில் ஒன்றுதான் தஞ்சை ஜில்லாவில் மிலட்டூர் கிராமத்தில் காப்பாற்றப்பட்டுவரும் பாகவத மேள நாட்டிய—நாடகம்.

பல அறிஞர்களின் நீண்டநாளைய இடைவிடாத உழைப்பினால், சதிர்–நாட்டியம் மறுமலர்ச்சியுற்று, நாடெங்கும் பிரபலமாய்விட்டதோடு, சர்வதேச மதிப்பையும் பெற்றுவிட்டது. ஆனால் அது ஒன்றுதான் பரதநாட்டியம். அது தனிப்பட்ட பெண்கள் ஆடுவதற்கே உரித்தானது. அதில் ஆண்களுக்கு இடமில்லை. சிருங்காரச் சுவைதான் அதில் முக்கியம், அதில் பலர் சேர்ந்து நடிக்கும் நாடகச் சுவையில்லை, என்றெல்லாம் தவறான அபிப்பிராயங்கள் பரவியிருக்கின்றன. அவ்வபிப்பிராயங்கள் சரியில்லை என்று நிரூபிக்க வேண்டுமானால், மிலட்டூர் பாகவத மேள—நாட்டிய நாடகங்களை ஒரு தரம் பார்த்தாலே போதும்.

அவைகளை உற்றுக் கவனித்தால், பரதநாட்டியம் என்பது பல சாகையுள்ளதோர் மாபெரும் பொதுக்கலை. சதிர் நாட்டியம் என்பது அதன் ஒரு கிளைதான். அதே இலக்கணத்தைத் தழுவிய நாட்டிய—நாடகவகை வேறு ஒன்று இருக்கிறது, அதில் ஆண் பெண் பாத்திரங்களாகப் பலர் சேர்ந்து நடிக்கும் நாடகச்சுவை யிருக்கிறது, சிருங்காரம் தவிர மற்றச் சுவைகளும் அதில் சாங்கோபாங்கமாய் விளக்கப்படுகின்றன, என்பதெல்லாம் தெரியவரும். சுருங்கச் சொல்லில், பரதநாட்டியத்தில் 3 முக்கிய வகைகளுண்டு. சிறுகவிதை போன்ற சதிர்–நாட்டியம் ஒன்று, பெரும் காவியக் கதைகளைக் கையாளும் நாட்டிய-நாடகம் இரண்டு, குறுகிய கதையை எளிய சிறு நாட்டிய–நாடகமாக விளக்கும் குறவஞ்சி மூன்று. இம் மூன்றும் பரதநாட்டிய இலக்கணத்தையே தழுவியவை.

இரண்டாவது வகையான பாகவத மேள நாட்டிய நாடக சம்பிரதாயம் தஞ்சை ஜில்லாவில் மிலட்டூர், சூலமங்கலம், ஊத்துக்காடு, சாலியமங்கலம், நல்லூர், தேப்பெருமநல்லூர் ஆகிய ஆறு கிராமங்களில் முன் காலத்தில் பிரபலமாய் வழக்கத்திலிருந்து வந்தது. ஆந்திர தேசத்துக் கிருஷ்ணா ஜில்லாவில் கூச்சுப்பூடி என்ற கிராமத்திலும் இருந்து வந்தது. சுமார் 150 வருஷங்களுக்கு முன்னர் தியாகராஜருக்கு மூத்தவராய் இருந்த மிலட்டூர் வித்வான் வெங்கடராம சாஸ்திரியார் அவர்களால் இயற்றப்பட்ட நாட்டிய நாடகங்கள் தஞ்சை கிராமங்களில் நடிக்கப்பட்டுவந்தன. இப்போது இக்கலை மற்றக் கிராமங்களில் கைவிடப்பட்டு மிலட்டூரில் மாத்திரம்தான் எஞ்சியிருக்கிறது.

1950ஆ சூலமங்கலத்திலும், 1951, 1952, 1953 வருஷங்களில் மிலட்டூரிலும் இந்த நாட்டிய நாடக விழாவைத் தொடக்கிவைத்து, அக்கலை முறையைக் கவனித்து அறிந்துகொள்ள எனக்குச் சந்தர்ப்பம் வாய்த்தது. என் அனுபவத்தையே இங்குக் குறிப்பிடுகிறேன்.

மிலட்டூரானது, அய்யம்பேட்டை, திட்டை என்ற ரயில்வேஸ்டேஷன்களிலிருந்து சுமார் 5 மைல் தூரத்திலுள்ளதோர் நடுத்தர கிராமம். அதன் அருகில் காவிரி நதியின் ஒரு கிளையாறு ஓடுகிறது. கிராமம் செழிப்பான நெல்வயல்களால் சூழப்பட்டது. எழெட்டு நீண்ட தெருக்களைக் கொண்டது. மூன்று தெருக்களில் பிராமணர்கள் நிறைந்திருக்கிறார்கள். வடக்குத் தெருவில் வரதராஜப்பெருமாள் கோவில் இருக்கிறது. அதில் லக்ஷ்மி நரஸிம்மமூர்த்தியும் பிரஸன்னமாயிருக்கிறார். அவரது வஸந்தோற்சவத்தின் ஓர் அங்கமாகத்தான், மே ஜூன் மாதங்களில் நாட்டிய நாடகவிழாவும் நடைபெறும். கோவிலின் முன்பு தெருவில் சுமார் 100 அடி நீளமான தட்டுப்பந்தலும், அதன் கீழக் கோடியில் ஒரு சிறு அரங்க மேடையும் அமைத்து, அலங்காரமுற்ற வரதராஜப் பெருமாளைக் கோவிலில் முன் பாகத்தில் எழுந்தருளப்பண்ணி, அவரது சன்னிதியில் நாட்டிய நாடகங்களை நடத்துவது வழக்கம். திரள் திரளாகப் பார்க்கவரும் ஜனங்கள் எல்லோரும் அரங்கத்தின்முன்பு தரையில் உட்காருவார்கள். நாடகங்கள் இரவு 9-30 மணிக்கு மேல் தொடங்கி, விடியற்காலை 3-30 மணிவரை நடக்கும்.

வருஷாவருஷம் வழக்கமான பிரஹ்லாதா, மார்க்கண்டேய, உஷா, ருக்மாங்கதா என்ற சரித்திரங்களுடன் இவ்வாண்டில் அரிச்சந்திராவும் புதிதாக நடிக்கப்பட்டது. நாடக கோஷ்டியாருள் ஒருவருக்கு, ஸ்வாமி சன்னதமாகவந்து, வெகுநாளாக மறக்கப்பட்டிருந்த அந்த நாடகத்தை இவ்வருஷம் நடத்தியாக வேண்டும் என்று கட்டளையிட்டதாகக் கேள்விப்பட்டேன். அதனால்தான் இவ்வருஷத்திய

நாடகங்களில் அரிச்சந்திர நாடகமே தலை சிறந்து விளங்கியது போலும்! மற்றவைகளைவிட அதற்கு முன் ஒத்திகை போதியவாறு நடந்தது மற்றொரு காரணமாயிருந்திருக்கலாம்.

தியாகராஜ சிஷ்ய பரம்பரையாரான சுந்தர பாகவதர் கிருஷ்ண பாகவதர் இவர்களின் சிஷ்யரான பாலசுப்ரமணியம் என்ற பாலு பாகவதர், பாகவத மேளகோஷ்டியாருக்கு ஆசிரியராகவும், கண்டக்டராகவும் இருந்து நாடகங்களை நடத்தி வருகிறார். மிலட்டூர் நடேசய்யரிடமிருந்து கலை முறையைப் பயின்று பழுத்த அனுபவம் கொண்டிருக்கிறார்.

மொத்தத்தில், முன் தலைமுறையில் புகழ்பெற்ற மிலட்டூர் நடேசய்யர், சூலமங்கலம் சீதாராம பாகவதர், ஊத்துக்காடு ஸ்வாமி பாகவதர் போன்ற பெரியார்களின் நடன நடிப்புச்சிறப்பு இப்போது இல்லையாயினும், மிலட்டூரில் சங்கீதமும் நட்டுவாங்கமும் பழுது படாது வெகு நேர்த்தியாயிருக்கின்றன. பாலுபாகவதர், கே. சுப்பிரமணிய அய்யர், பி. கே. சுப்பையர் இவர்கள் வழங்கும் பின்னணி சங்கீதம், உயரிய கர்னாடக சம்பிரதாயத்தோடு, ராகபாவப்பொழிவும் நாஸூக்கும் கொண்டு உணர்ச்சி ததும்பி, கேட்போர் மனதை வாரி அள்ளுகிறது. நடனங்களுக்கான சொல்லுக் கட்டுகளும் தீர்மானங்களும் கோவைச் சிறப்புடன் வெகுஜோராயிருப்பதோடு, ஷட்ஜ பஞ்சமங்களில் சுருதி சேர்ந்து ரஞ்சகமான சங்கீதமாகவே ஒலிக்கின்றன. இவ்விஷயம் சதிர்நாட்டியத்தைக் கையாளுபவர்களால் கவனிக்கத்தக்கது.

இந்த நாடகங்களில் பத்யம், கத்யம், சப்தம், தரு, த்விபதா முதலிய பல சங்கீதவகைகள் கையாளப்படுகின்றன. சிலதருக்கள், தியாகராஜ கிருதிகளைப்போல் ஒலிக்கும். ஆனால் அவைகள் தியாகராஜருக்கு முன்னரே வெங்கடராம சாஸ்திரியவர்களால் இயற்றப்பட்டவை. சிவபாடல்கள் க்ஷேத்ரய்ய பதங்களைப்போல் வெகுநாஸூக்காய் இழைகின்றன. ஆங்காங்கே சம்பாஷணைகள், தனிப்பேச்சுகள் முதலியவாசிகமும் உண்டு. பாடல் பேச்சு ஒவ்வொன்றும் அபிநயத்துடன் விளக்கப்படுகிறது. பல பாடல்களுக்கு அடவுஜாதி ஆடல்களுமுண்டு. அபிநயம் சாஸ்திர சுத்தங்கொண்டு ஏராளமான கற்பனையுடன் விரிவாயிருக்கிறது. 2000 ஆண்டுகளுக்குமுன் பரதமுனிவரால் நிறுவப்பட்ட நாட்டிய சாஸ்திரம், பூரணமாய் இந்தப் பாகவத மேளநாட்டிய நாடகத்தில் பிரதிபலித்து ஜீவித்து வருகிறது எனலாம்.

சதிர்-நாட்டியத்தில் தென்படும் அடவுஜாதி ஆடலழகில் ஊன்றியிருப்பவர்களின் கண்களுக்கு இந்த நாட்டிய-நாடக முறையில் காட்சியளிக்கும் ஆடல்கள் போதிய சௌஷ்டவம் இல்லாததாகத் தோன்றலாம். அதற்கு இரண்டு காரணங்களுண்டு. இக்கால நடிகர்களுக்குப் போதிய பயிற்சியும் அனுபவமும் இல்லையென்பது ஒன்று. ஆடல் முறையில் கால் ஜதிகளுக்கு ஏற்ற நிர்த்தஹஸ்த வினியோகங்களில் சில கட்டுப்பாடுகள் இருப்பது இரண்டாவது. உத்தம நாடகப் பாத்திரங்கள், கைகளைப் பெரும்பாலும் மார்புக்கு நேராகவும், அதிகம் உயர நீட்டாமலும், தொப்புளுக்குக் கீழ் போகாமலும் வினியோகம் செய்ய வேண்டுமென்று விதியிருப்பதாகத் தெரிய வருகிறது. தனுக்கு, மினுக்கு, குலுக்குகள் அதிகமிருக்கக் கூடாதெனறும், பக்தி பாவம் நிறைந்ததாயிருக்க வேண்டுமென்றும் சொல்லப்படுகிறது.

சிலவிடங்களில் நிர்த்தஹஸ்த வினியோகமில்லாமலே, கைகளை இடுப்பில் வைத்துக்கொண்டு கால் ஜதிகளையும் தீர்மானங்களையும் அமோகமாகக் காட்டுகிறார்கள். அதிலிருந்துதான் சாதாரண நாடக மேடைகளில் முன் காலத்தில் ஆடப்பட்ட கிஞ்சின் என்ற ஆடல்முறை வந்தது போலும்! ஏதாகிலும் ரஞ்சகமான சங்கீதத்துடன், தனியாடல், அபிநயம், ஆடலுடன் அபிநயம் சேர்ந்த நிருத்யம், நடிப்பு இவையெல்லாம் ஒருங்கே சேர்ந்து விளங்கும் நாட்டிய நாடகக் கலைமுறை பார்ப்போரை வியக்கவைக்கத்தான் செய்கிறது. நாடகத்தில் புதியதோர் அனுபவமாகவே தோன்றுகிறது.

மொத்தத்தில், மிலட்டூர் நாட்டிய நாடகமுறை இப்போது ரகம் குறைந்த நிலையில் இருப்பினும், கலையபிமானிகள் அதைப் பார்க்கவேண்டியது அவசியமாகும். போதிய ஆதரவுகொடுத்தால் அக்கலையின் ரகம் மேம்படும். இப்போதுள்ள குறைகள் பெரும்பாலும், ஆடுவதற்கும் நடிப்பதற்கும் போதிய விசாலமான நாடக அரங்கமில்லாததால்தான் ஏற்பட்டிருக்கின்றன. மிலட்டூர் வடக்குத்தெரு கிழக்கோடியில் வெங்கடராம சாஸ்திரியார் வசித்துவந்த வீட்டு நிலத்தை வாங்கிப் பொதுச் சொத்தாக்கி, அவரது ஞாபகார்த்தமாக, ஒரு நாடகக் கொட்டகையை நிர்மாணித்து, ஸ்வாமியை அங்கு எழுந்தருளப்பண்ணி, அவர் முன் நாடகங்களை நடித்துக்காட்ட ஏற்பாடு செய்தால் கலை மேம்படும், கலைமுறையில் அனுபவம்கொண்டு எஞ்சியிருக்கும் பாலுபாகவதர், சூலமங்கலம் ராதாகிருஷ்ணன், ஊத்துக்காடு கிருஷ்ணமூர்த்தி இவர்களை, சென்னைபோன்ற நகரங்களுக்கு அழைத்துவந்து, நாட்டியத்தில் பயிற்சிகொண்ட பல பெண்மணிகளுக்குக் கலையைப் போதித்து நாட்டிய நாடகங்களை ஆடச் செய்வதும் மேலாகும். வயது முதிர்ந்துவரும் பாலுபாகவதருக்குப்பின் மிலட்டூரில்கூட அக்கலை ஜீவித்திருக்குமா என்பது சந்தேகம். ஆகையால் அதை அழிந்துபோக விடாது காத்துத் தழைக்கச் செய்வதற்கான ஏற்பாடுகளை இப்போதே செய்ய வேண்டியது அவசியமாகும்.

# மனம்போல் மழை

அ. ராம்கோபால்

தொடர்ந்து கடந்த ஐந்தாண்டுகளாகப் பருவ மழை பொய்த்து விட்டது. இதனால் நாமும் நம் விவசாயிகளும் அடைந்துள்ள கஷ்ட நஷ்டங்கள் நாமறிந்தவையே. மனிதன் தன் இச்சைபோல் மழை பெய்விக்க முடியுமேயானால் இவ் அவல நிலை தோன்றி இருக்காதல்லவா? இதை மனதிற் கொண்டே தற்காலத்தில் விஞ்ஞானிகள் பலர் மழை மேகத்தை மடக்கி மனிதன் இச்சைபோல் மழை பெய்விக்க முயற்சிகள் செய்து வருகின்றனர். இதில் ஓரளவு வெற்றியும் அவர்கள் கண்டுள்ளனர். பூரண வெற்றி கண்டு பசியையும் பட்டினியையும் பஞ்சத்தையும் ஓட்டும் நாள் வெகு தொலைவில் இல்லை எனவே ஆராய்ச்சிகள் முன்னேறும் வேகத்தைக் காணத் தோன்றுகிறது.

காற்றில் எப்பொழுதுமே கூடுதலாகவோ குறைவாகவோ நீராவி உண்டு. ஆனால் அதில் எவ்வளவு நீராவி இருக்க முடியுமென்பது அதன் தட்ப வெப்ப நிலையைப் பொறுத்தது. உதாரணமாகக் காற்று 32° F. உஷ்ண நிலையில் இருக்கும்போது அதன் எடையில் $\frac{1}{160}$ பங்குதான் நீராவி அதில் அடங்கி இருக்க முடியும். 59° F. உஷ்ண நிலையில் $\frac{1}{80}$ பங்கும் 86° F. உஷ்ண நிலையில் $\frac{1}{20}$ பங்கும் நீராவி இருக்கமுடியும். அதாவது ஒவ்வொரு 27 டிகிரி உயர்வுக்கும் நீராவியின் மடங்கு இரட்டிப்பாகிறது. ஆனால் இதற்கும் ஒரு எல்லை உண்டு.

தண்ணீரில் நாம் உப்பைப்போட்டுக்கரைத்தால் அது கரைந்து கொண்டே இருக்கும். வேண்டிய அளவு கரைந்த பிறகு மேலும் உப்பைப் போட்டால் அது கரையாது. உப்பாகவே அடியில் தங்கிவிடும். இப்படி உப்பு கரையாத நிலையை அடைவதை "கரையா நிலை" (Saturation) எனக்கூறுவார்கள். இதே போல் காற்றிலும் வேண்டிய அளவு நீராவி கரைந்ததும் அதுவும் கரையாத நிலையை அடையும். இப்படிக் கரையாத நிலையை அடைந்த காற்று எக்காரணத்தினாலாவது குளிர்ச்சி அடைந்தால் அதில் அடங்கியுள்ள நீராவி நுண்ணிய நீர்த் துளிகளாக மாறும். ஏனெனில் காற்று எவ்வளவுக் கெவ்வளவு குளிர்ச்சி அடைகிறதோ அவ்வளவுக் கவ்வளவு குறைவாகவே அதில் நீராவி இருக்க முடியும்.

நாம் சமுத்திர மட்டத்திலிருந்து மேலே செல்லச் செல்ல 300 அடிக்கு 1° F. வீதம் உஷ்ணம் குறைந்து கொண்டே போவதைக் காணலாம். நீராவி காற்றை விட லேசானது. ஆகையால் நீராவிகலந்த காற்றும் காற்றைவிட லேசானதே. இதனால் நீராவிகலந்த காற்று தரை மட்டத்திலிருந்து மேல்நோக்கிச் செல்லுகிறது. மேலே செல்லச் செல்ல உஷ்ணம் குறைவாக இருப்பதால் அங்கே அது குளிர்ச்சி அடைகிறது. இதன் காரணமாக அதில் அடங்கியுள்ள நீராவி நுண்ணிய நீர்த்துளிகளாகமாறுகின்றன. ஒவ்வொரு நீர்த்துளியும் சுமார் $\frac{1}{10000}$ செண்டிமீட்டர் அளவுள்ள அவ்வளவு நுண்ணியவை. ஆகையால் காற்றைப் பிளந்துகொண்டு பூமியில் விழப் போதுமான கனமோ அழுத்தச் சக்தியோ அவற்றிற்கில்லை. இதனால் அவை ஆகாயத்தில் திரிசங்கு நிலையில் சஞ்சரிக்க ஆரம்பிக்கின்றன. இப்படிச்சஞ்சரிக்கும் நீர்த்துளிக் கூட்டமே நம் கண்ணுக்கு மேகமாகத் தோன்றுகின்றன. இந் நீர்த்துளிகள் மழையாகப்பெய்யவேண்டுமானால் $\frac{1}{10000}$ செண்டிமீட்டர் அளவுள்ள அவை $\frac{1}{10}$—$\frac{4}{10}$ மில்லிமீட்டர் அளவுள்ள பெரிய நீர்த்துளிகளாக மாறவேண்டும். அப்படி மாறினால்தான் அவை கீழே மழையாக விழவேண்டிய கனமும் சக்தியும் பெறும். ஆனால் அவை எப்படி இவ்விதம் பெரிய நீர்த்துளிகளாக மாறி மழையாகப் பெய்ய முடிகிறது என்பது வெகுகாலம் யாருக்குமே தெரியாத ஒரு புதிராகவே இருந்துவந்தது. என்ன ஆராய்ச்சி செய்தும் ஒன்றும் பயன் இல்லை. கடைசியில் பெர்கரென் (Bergeron) என்னும் சுவீடன் நாட்டு விஞ்ஞானி ஒருவர் வெகுநாள் ஆராய்ச்சிக்குப் பின் உண்மையைக் கண்டறிந்தார். அவர் கண்டறிந்த உண்மை இதுதான்.

தரைமட்டத்திலிருந்து மேலே செல்லச் செல்ல ஒரு கிலோமீட்டருக்கு 6°c வீதம் உஷ்ணம் குறைந்துகொண்டே போகும். ஒரு குறிப்பிட்ட உயரத்தை அடைந்ததும் உஷ்ணநிலை 0°c. அதாவது நீர் உறையும் நிலையை (Freezing level) அடைந்துவிடும்.

ஆகையால் இந் நிலையை மேகம் அடையும் போது அதில்அடங்கியுள்ள நுண்ணிய நீர்த் துளிகள் எல்லாம் பனிக்கட்டியாக மாறி விடும். ஆனால் அப்படி அவை மாறுவதில்லை. ஏனெனில் நீர்த்துளிகள் பனிக்கட்டியாக மாறவேண்டுமானால் அதற்கு வாயுமண்டலத் தில் "செனக்லி" (cenuclei) என்னும் ஒரு வகை நுண்ணிய அணுக்கள் ஏராளமாக வேண்டும். உறையும் நிலையில் இவ்வணுக்கள் அதிகமாக இல்லை. உறையும் நிலைக்குமேல்–15°c.யிலிருந்து —42°c உஷ்ண நிலை வரை உள்ள இடைவெளியிலேயே இவ் வணுக்கள் மிகுதியாக உண்டு. ஆகையால் மேகக் கூட் டங்கள் உறையும் நிலைக்கு மேலே சென்று லும்—15°c உஷ்ணநிலை உயரத்தை அடை யும்வரை சாதாரணமாக அவை பனிக்கட்டி களாக மாறுவதில்லை. ஆனால் உறையும் நிலைக் கும்—15° உஷ்ண நிலைக்குமிடையே அவை இருக்கும்போது அவற்றில் உள்ள நீர்த்துளி களின் உஷ்ணநிலை உறையத் தேவையான 0°c-க்குக் குறைவாகவே இருக்கும். ஆகை யால் இந் நிலையில் உள்ள மேகத்தை விஞ் ஞானிகள் மிகையாகக் குளிர்ந்த மேகம் (Super-cooled cloud) என அழைக் கிறார்கள்.

இந்தமிகையாகக் குளிர்ந்த மேகம்–15°-C உஷ்ணநிலைக்குமேலே போகும்போது அதி லுள்ள நீர்த்துளிகள் பனிக்கட்டிகளாக மாறு கின்றன. இப்பனிக்கட்டி மேகங்களின் மீதுள்ள ஆவிஅழுத்தும் (Vapour Pressure) அதன் கீழே உள்ள மிகையாகக் குளிர்ந்த மேகத்திலுள்ள நீர்த்துளிகள் மீதுள்ள ஆவிஅழுத்தத்தைவிட மிகவும் குறைவு. இதனால் கீழே மிகையாகக் குளிர்ந்த மேகத்திலுள்ள நீர்த்துளிகள் எல்லாம் பறந்து பறந்து சென்று பனிக்கட்டி மேகத் தில் போய் ஒட்டிக்கொள்ளுகின்றன. ஒட்டியவுடன் அவையும் பனிக்கட்டியாக மாறுகின்றன. இவ்விதம் பனிக்கட்டி மேகம் மேலும் மேலும் பெரிதாகவும் கனமாகவும் பெருத்துக்கொண்டே போகிறது. போதிய பருமனையும் கனத்தையும் அடைந்ததும் கனம் தாங்காமல் அது கீழே இறங்குகிறது. அங்கே உஷ்ணநிலை அதிகமாக இருப்பதால் உருகி மழையாகப் பெய்கிறது. மேகக் கூட்டங்கள் உறையும் உயரத்தைத் தாண்டி, பனிக்கட்டியாக மாறாமல் மிகையாகக் குளிர்ந்த நிலையில் இருக்கும் போது அவற் றின் மீது செயற்கை முறையில் பனிக்கட்டி அல்லது சில்வர் அயடைடு (Silver Iodide) பிரயோகம் செய்தால் உடனே அவை பனிக் கட்டி மேகங்களாக மாறி மழை பெய்யும். இவைதான் பெர்கரென் கண்டுபிடித்த உண்மைகள்.

பிற்காலத்தில் சோதனைகள் நடத்தியதில் பெர்கரெனின் கூற்று உண்மை என்பது தெளிவாயிற்று. ஆனால்ஒன்று. நம் நாட்டைப் போன்ற உஷ்ண நாடுகளில் மழைக்காலத் தில் உறையும் நிலைக்குக் கீழே உள்ள மேகக் கூட்டங்களும் மழையாக மாறிப் பெய் கின்றன என்னும் மற்றொரு உண்மை வெளி யாயிற்று. பெர்கரென் சித்தாந்தப்படி இதற்குச் சமாதானம் கிடைக்கவில்லை. ஆகை யால் இதைப்பற்றி மேலும் ஆராய்ச்சிகள் தொடர்ந்தன. கடைசியில் லாங்குயிர் (Languuir) விஷாண்ட் (Vichont) என் னும் இரண்டு விஞ்ஞானிகள் இதற்குக் காரணத்தைக் கண்டுபிடித்தனர். உறையும் நிலைக்குக் கீழே உள்ள மேகக்கூட்டத்தில் அடங்கியுள்ள நுண்ணிய நீர்த்துளிகளைவிடப் பெரியதும் குளிர் மிகுந்ததுமான நீர்த்துளி கள் அதோடு கலந்தால் அவை மழைத் துளிகளாக மாறிப் பெய்யும் என்பதே அவ் உண்மை.

1946ல் நியூயார்க் நகரில் ஜெனரல் எலெக்ட்ரிக் கம்பெனி விஞ்ஞானியான வின் சென்ட் ஷாபர் (Vincent Schaeffer) என்பவர் தம் ஆராய்ச்சிச்சாலையில் செயற்கை முறையில் மேகம் உற்பத்தி செய்தார். அதை மிகக் குளிர் நிலை அடையச் செய்து அதன் மீது கரியமிலவாயுக்கட்டிகளைப் பிரயோகம் செய்தார். கரியமிலவாயுக் கட்டிகளின் உஷ்ணநிலை—80°C அதாவது தண்ணீர் உறையும் நிலை அடைவதற்கு வேண்டிய உஷ்ணத்தைவிட 80 ° C. குறைவானது. ஆகையால் வெளிக்காற்றில் இதைத் திறந்து விட்டால் அது உடனே திரவமாகி ஆவியாக மாறிவிடும். இதனால் இதை "ட்ரை ஐஸ்" (Dry Ice) எனவும் கூறுவார்கள். ஆகை யால் இதை மேகத்தின் மீது பிரயோகம் செய்தால் உடனே அது திரவமாக மாறி அம்மேகத்தை மழைத் துளிகளாக மாற்றி விடுகிறது. சில்வர் அயடைடைப் பிரயோகம் செய்தாலும் இதே போல் தான் நேரிடுகிறது என அவர் ஆராய்ந்தறிந்தார்.

இதன் பிறகு இதை ஆதாரமாகக்கொண்டு அமெரிக்காவிலும், ஆஸ்ட்ரேலியாவிலும், வேறு பல நாடுகளிலும், சமீபத்தில் நம் நாட் டிலும்கூட செயற்கை முறையில் மழை பெய்விக்க முயற்சிகள் நடத்தப்பட்டன.

இதில் குறிப்பிடத்தக்க வெற்றியும் கிட்டியது. செயற்கை முறையில் மேகத்தை மழையாகப் பெய்ய வைக்கவேண்டுமானால் கீழ்க்கண்ட நான்கு விஷயங்களைக் கருத்தில் கொள்ளவேண்டும் எனத் தெரிய வந்தது.

(1) ஆகாயத்தில் மேகங்கள் கூட்டம் கூட்டமாகக் குழுமி, சஞ்சரிக்கும் சமயமே இப்பிரயோகத்திற்கு மிகவும் ஏற்ற நேரம்.

(2) ஒவ்வொரு மேகக் கூட்டத்தையும் அடிப்பகுதி, மேல் பகுதி என இரண்டாகப் பிரிக்கலாம். மேல் பகுதியின் சீதோஷ்ண நிலை—5° C-யிலிருந்து 15° C-வரை இருத்தல் வேண்டும். இதை ஆகாய விமானம், பலூன் அல்லது வேறு சாதனங்களின் உதவியால் அறிந்து கொள்ளலாம். ஐஸ் அல்லது சில்வர் அயடைடுப் பிரயோகம் மேல் பகுதியில்தான் விசேஷமாகச் செய்யவேண்டும்.

(3) தரை மட்டத்திலிருந்து எவ்வளவு உயரத்தில் மேகம் இருக்கிறதோ, குறைந்தது அதே உயரமாவது மேகத்தின் உயரம் இருக்க வேண்டும். மேகத்தின் அடிப்பகுதியிலிருந்து உச்சி வரை உள்ள உயரமே மேகத்தின் உயரம்.

(4) மேகக் கூட்டங்கள் சில சமயம் ஒன்றோடொன்று கூடும். சில சமயம் ஒன்றிலிருந்து ஒன்று பிரிந்து கலையும். இதை முறையே கூடும் நிலை, கலையும் நிலை எனக் கூறுவார்கள். கூடும் நிலையில் தான் பிரயோகம் செய்ய வேண்டும், கலையும் நிலையில் கூடாது.

மேலே கூறிய நான்கு விஷயங்களும் சாதகமாக இருக்கும்போது விமானம் பலூன் அல்லது வேறு ஏதாவது ஒரு சாதனத்தின் உதவியால் மேகக் கூட்டத்தின் மேல் பகுதியில் ஐஸ் அல்லது சில்வர் அயடைடைப் பிரயோகம் செய்தால் வெகுவாக வெற்றி கிட்டும். ஒவ்வொரு சமயமும் வெற்றி உறுதி எனக் கூறமுடியாது. இதுவரை இவ்விதம் பல முறை பிரயோகங்கள் செய்து பார்த்தாகிவிட்டன. சில சமயம் பிரயோகம் செய்த 10, 15 நிமிடங்களுக்குள்ளேயே இடி மின்னலுடன் கனத்த மழை பெய்திருக்கிறது. சில சமயம் சாதாரண மழை பெய்திருக்கிறது. சில சமயம் லேசாகத் தூறிவிட்டு மேகம் கலைந்து போயுமிருக்கிறது. இதற்கு முக்கிய காரணம் மேகக் கூட்டங்களின் உள் அமைப்பு, குணங்கள் முதலியவற்றைப் பற்றி இன்னும் நமக்குப் போதிய ஞானம் கிட்டாமையே தவிர வேறில்லை. ஆகையால் இது குறித்து இப்பொழுது தொடர்ந்து ஆராய்ச்சிகள் நடந்து வருகின்றன. இவையெல்லாம் பெர்கரென் சித்தாந்தத்தை அடிப்படையாகக் கொண்டவை.

ஹவாய்த்தீவில் லாங்குயிர், விஷாண்ட் சித்தாந்தத்தை அடிப்படையாகக் கொண்டு சில சில சோதனைகள் நடத்தப்பட்டன. அங்கே லியபோல்டு (**Leopold**) ஹால்ஸ்டெட் (**Halstead**) என்னும் இருவர் உறையும் நிலைக்குக் கீழே உள்ள மேகக் கூட்டங்கள் மீது சில்வர் அயடைடும் ஐசும் கலந்து பிரயோகம் செய்து மழை பெய்விப்பதில் வெற்றி பெற்றனர். தனியாகச் சில்வர் அயடைடோ அல்லது ஐஸோ பிரயோகம் செய்வதைவிட இரண்டும் கலந்து பிரயோகம் செய்தால் சிறப்பான பலன் கிட்டுவதாகத் தெரியவந்தது.

சமீபத்தில் இரண்டு முறையும் கலந்து பிரயோகங்கள் நடத்திப் பார்க்கப்பட்டன. உறையும் நிலைக்கு மேலே உள்ள மேகக் கூட்டத்தின் மீது சில்வர் அயடைடு பிரயோகம் செய்து கீழே உள்ளதின்மீது பீச்சுக் குழல்கள் மூலம் குளிர்ந்த நீரைத் தெளித்ததில் மிகவும் நல்ல பலன் கிட்டியது. கீழே உள்ள மேகக் கூட்டத்தின்மீது குளிர்ந்த நீரைத் தெளித்தால் மேகக் கூட்டத்திலுள்ள நுண்ணிய நீர்த்துளிகள் தெளிந்த நீர்த்துளிகள் மீது வந்து ஒட்டி அவற்றை மேலும் மேலும் பெரிதாகவும் கனமாகவும் ஆக்கி மழையாகப் பெய்யச் செய்கின்றன. வைக்கோல் போரில் ஓரிடத்தில் நெருப்பு வைத்தால் அந் நெருப்பு போர் முழுவதும் பரவிவிடுகிறதல்லவா? அதேபோல் மேகக்கூட்டத்தில் ஓரிடத்தில் நீரைத் தெளித்து அந் நீர்த்துளிகள் மீது நுண்ணிய மேகநீர்த்துளிகள் வந்து ஒட்ட ஆரம்பித்ததும் அதைத் தொடர்ந்து மேகக் கூட்டம் முழுவதும் மழைத்துளிகளாக மாறிவிடுகின்றன. மேலே உள்ள மேகத்தில் சில்வர் அயடைடு தெளித்து அதனால் அங்குள்ள மேகம் பனிக்கட்டிகளாக மாறிக் கீழே இறங்குவதால் மேலும் இது துரிதமடைந்து நல்ல மழை பெய்ய வாய்ப்பு ஏற்படுகிறது.

நம் நாட்டில் கடந்த வருடம் ஏப்ரலிலிருந்து செப்டம்பர் வரை முன்பு வானிலை ஆராய்ச்சி இலாகா டைரெக்டர் ஜெனரலாக இருந்த டாக்டர் எஸ். கே. பானர்ஜி என்பவர் கல்கத்தா அருகே யாதவபூர் (**Iadavpure**)

என்னுமிடத்தில் உள்ள தம் ஆராய்ச்சிக் கூடத்தில் பல ஆராய்ச்சிகள் நடத்தினர். இதன் பயனாகப் போன வருடம் அங்கு மேகக் கூட்டங்கள் மீது சில்வர் அயடைடு பிரயோகம் நடந்தது. ஹைட்ரஜன் அடைத்த பலூன்களில் வெடி மருந்தும் சில்வர் அயடைடும் கலந்து நிரப்பி மேலே அனுப்பப் பட்டன அங்கே அவை டைம்பியூஸ் (Timefuse) களின் உதவியால் வேண்டிய உயரத்தை அடைந்ததும் வெடிக்கச் செய்யப் பட்டன. இதனால் வெடி மருந்தோடு கலந்திருந்த சில்வர் அயடைடு மேகக் கூட்டத்தில் சிதறிப்பரவி அதை மழையாகப் பெய்யச் செய்தது. டாக்டர் பானர்ஜி தொடர்ந்து ஆராய்ச்சிகள் நடத்தி வருகிறார். சமீபத்தில் நம் அரசாங்கம் இது குறித்து ஆராய்ச்சி நடத்தும் விஞ்ஞானிகளையெல்லாம் ஒன்று திரட்டி ஒரு மாநாடு நடத்தி அவர்களுக்கு உற்சாகமும் ஊட்டியது.

நம் நாட்டில் உறையும் நிலை வெயில் காலத்தில் 16 — 18000 அடி உயரத்திலும், குளிர் காலத்தில் 10000 அடிஉயரத்திலுமிருக்கிறது. பருவமழைக்காலத்தில் உறையும் நிலைக்கு மேலே உள்ள மேகங்கள்கூடச் சென்னைமாகாணத்தில் பெரும்பாலான இடங்களிலும் ராஜஸ்தானம், குஜராத், தக்காணம் போன்ற பகுதிகளிலும் மழையாகப் பெய்வதில்லை. ஆகையால் அவற்றின்மீது சில்வர் அயடைடு பிரயோகம் செய்தால் நல்ல மழை பெய்து அப்பகுதிகளும் நாட்டின் மற்றப் பகுதிகளைப்போல் சீரும் செழிப்பும் அடையும். தற்சமயம் சில்வர் அயடைடுக்குப்பதில் சுண்ணும்பும் உப்பும் கலந்து பிரயோகம் செய்யவும் ஆராய்ச்சிகள் நடந்தேறி வருகின்றன. இது வெற்றியானல் செயற்கை மழைபெய்விப்பது இன்னும் சுலபமாவதோடு செலவும் மிக மிகக் குறைவாகி விடும்.



# நிலத்தின் அழைப்பு

வங்காளிக் கதை: **ஸ்ரீ அ. கு. சென்குப்தா**

மொழிபெயர்ப்பு: **ரா. வே. சீனிவாசன்**

கதவினருகில் யாரோ தயங்கி நிற்பது தெரிந்தது. உள்ளிருந்த தலைமை ஆசிரியர் உரத்த குரலில், "யாரங்கே? என்னவேண்டும்?" என்று கேட்டார். இதைக் கேட்ட அந்த மனிதன் சற்றுப் பின்வாங்கினதுபோலிருந்தது.

தலைமை ஆசிரியர் நிமிர்ந்து பார்த்தார், அஸீஸ் ரஹ்மான் நின்றுகொண்டிருந்தான். "அஸீஸ், வெளியேபோய் யாரென்று பார்த்துவா," என்றார்

"வேறு யாருமில்லே, ஸார், என் தகப்பனார் தான்." என்று இழுத்துக்கொண்டே பதிலளித்தான் அஸீஸ்.

"உன் தகப்பனாரா? என்ன சமாசாரம்? உள்ளே வரச்சொல்லேன்." என மோவாய்க்கட்டையைத் தடவிக்கொண்டே கூறினார் குருதயாள் பாபு.

அமாநத் தைரியத்தைக் கையில் பிடித்துக்கொண்டு உள்ளே வந்தான்.

தலைமை ஆசிரியர் தந்தையையும் மகனையும் மாறி மாறிப் பார்த்தார். அவர்களிருவருக்குமிடையேயுள்ள வித்தியாசத்தைக் கண்டு தமக்குள்ளேயே வியந்துகொண்டார்.

அஸீஸ் மடிப்புக் கலையாத பைஜாமாவையும் கம்பளிக் கோட்டையும் அணிந்திருந்தான். அவன் அணிந்திருந்த பட்டுச் சட்டையின் கழுத்துப் பட்டி கோட்டின் வெளியே லாவகமாகப் பிரித்து விடப்பட்டிருந்தது. காலில் காச்மீரப் பாதரக்ஷைகளுடன் இளமையின் முறுக்கோடு நிமிர்ந்து நின்றிருந்தான்.

ஆனால் அமாநத்தின் முதுகோ மூப்பினால் குனிந்திருந்தது. இடையில் அகலமதிகமில்லாத ஒரு லுங்கி. மேலே ஒரு பழைய பனியன். தோளைச் சுற்றி அழுக்குப்படிந்த ஒரு வெண் சால்வை.

அமாநத்தின் வருகைக்குக் காரணம் குருதயாள் பாபுவுக்குச் சட்டென விளங்கியது. ஆனாலும் அவனும் ஒரு 'கார்டியன்' அல்லவா? ஆகவே, மரியாதைக்காக ஒரு நாற்காலியைச் சுட்டிக்காட்டி அதில் அவனை உட்காரச்சொன்னார்.

ஆனால் அமாநத்தோ சங்கோசத்துடன் தரையிலேயே உட்கார்ந்துவிட்டான். கூப்பிய கைகளுடன், "அவன் என்னுடைய ஒரு பிள்ளை ஐயா! அவன்பேரில் கருணை காட்டுங்கள்!" என்று கெஞ்சினான்.

இதற்குள் அஸீஸ் அங்கிருந்து மெள்ள நழுவி விட்டான். தகப்பனை அழைத்துக்கொண்டு வந்து தலைமை ஆசிரியரிடம் சேர்ப்பித்த பிறகு அங்கு மேலும் நிற்கத் தைரியமில்லை போலும்!

'நாங்கள் இரண்டு பேப்பரில்' தவறினவர்களைக் கூடப் பரீட்சையில் உட்கார அனுமதித்திருக்கிறோம். ஆனால் உன் மகனோ மூன்று பேப்பரில் தவறியிருக்கிறானே. என்ன செய்வது?" என்றார் ஹெட்மாஸ்டர்.

"ஐயா, நான் ஒரு சாதாரண உழவன். எனக்கு அதெல்லாம் எப்படி விளங்கும்? இதை மட்டும் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். என் மகனிடம் கொஞ்சம் கருணை காட்டுங்கள்!" என்றான் அமாநத்.

"கருணை காட்டுங்கள்!' — குருதயாள்பாபு சிரித்தார். பள்ளிக் கூடத்திலுள்ள மேஜைகளையும் பெஞ்சிகளையும் மட்டும் ஏன் விட்டுவைக்க வேண்டும்? உன் பிள்ளையைப் பரீட்சைக்கு அனுப்பக் கூடுமானால் அவைகளையும் அனுப்பி வைக்கலாமே!"

"ஐயா! எனக்கு வேறு ஒரு பிள்ளையுமில்லை. இவன்தான் கதி!" என்று உருக்கமுடன் மறுமுறை சொன்னான் அமாநத்.

இதற்கு என்ன பதில் சொல்லுவதென்று குருதயாள் பாபுவுக்கு விளங்கவில்லை. பெரிய தர்ம சங்கடமாகவிருக்கிறதேயென்று நினைத்துக் கொண்டே வெளிவராந்தாவுக்கு வந்தார். அவரைக் குழைவுடன் அமாநத்தும் பின் தொடர்ந்தான்.

"அமாநத்! நீ என்ன தொழில் செய்கிறாய்?" என்று திடீரென்று கேட்டார் குருதயாள் பாபு.

"உழவுத் தொழில்தான் ஐயா. என் குடும்பத்தின் பரம்பரைத் தொழிலாயிற்றே அது!"

"உனக்கு எவ்வளவு நிலமிருக்கிறது?"

அமாநத் பெருமூச்சு விட்டான். "இப்பொழுது பத்து பிகா (சுமார் மூன்று ஏக்கர்) தானிருக்கிறன, ஐயா!"

"அப்படியானால் உன் நிலத்தை நீயே உழுகிறாயா?"

"வேறுயார் செய்வார்கள், ஐயா? வேண்டுமென்றால் சில சமயம் கூலியாட்களை வைத்துக்கொள்வேன். சிலசமயம் ஒன்றிரண்டு பிகாக்களைக் குத்தகைக்கு விடுவேன். ஆனால் அநேகமாக நான்தான் உழுது பயிர் செய்கிறேன்."

குருதயாள் பாபு சிந்தனையிலாழ்ந்தார். அமாநத்தை ஒரு பசையுள்ள ஆசாமியென்று நினைத்திருந்தார். ஆனால் அவனோ தன்னுடைய கைகளினாலேயே கலப்பையைத் தள்ளுகிறான்! அது அவருக்கு ஒருவித மலைப்பை உண்டு பண்ணியது. மறுபடியும் அவன் மீது, தலையிலிருந்து கால் வரை, தம் பார்வையைச் செலுத்தினார். அவன் சொல்வது முற்றிலும் உண்மையென்று தெளிந்தார்.

அவனைப் பார்த்துப் புன்முறுவலித்துக்கொண்டே "ஏனப்பா, உன்னுடைய சமாசாரம் அப்படியிருக்கும்பொழுது இந்தக் குதிரை விளையாட்டு உனக்கு ஏன்?" என்று கேட்டார்.

அமாநத் அவரைப் பார்த்து விழித்தான்.

"நான் என்ன கேட்கிறேனென்றால் நீ உழவனாயிருக்கும்பொழுது உன்னுடைய மகனுக்கு மட்டும் ஏன் இந்த ஏட்டுச் சுரைக்காய் கல்வி?" என்று விளக்கினார் தலைமை ஆசிரியர்.

அமாநத்திற்கு அவர் சொல்வது முற்றிலும் புரியவில்லை எனினும், சிறிது உற்சாகத்துடன், "ஐயா! அலீஸ் வாழ்க்கையில் முன்னேறவேண்டுமென்று ஆசைப்படுகிறான். அதனால் தான்," என்றான்.

"ஓ! அவன்தான் இப்பவே ரொம்ப முன்னேறிவிட்டானே!" அமாநத்துக்கு அவர் குரலில் தொனித்தது ஏளனமா என்று தெரியவில்லை.

"ஒரு உழவனின் மகன் பத்தாவது வரையில் படித்திருக்கிறானே. அது போதுமே கிராமத்தில் கணக்குப்பிள்ளை உத்தியோகம் பார்க்க. இன்னுமென்னத்துக்குப் படிப்பு?"

"இல்லை ஐயா! அவனுக்குக் கணக்குப்பிள்ளை போன்ற எளிய உத்தியோகம் பிடிக்கவில்லை.' அமாநத்தின் கண்கள் பிரகாசித்தன. "அலீஸின் விருப்பம் ஒரு மந்திரியாகவோ, நீதிபதியாகவோ, கலெக்டராகவோ ஆக வேண்டுமென்பதுதான்!"

"தேவலையே! ஐயோ, அமாநத் பின் ஏன் அவன் படிப்பில் மட்டியாயிருக்கிறான்?"

"அவன் இனிமேல் படிப்பான், ஐயா! பரீட்சைக்கு உட்கார மட்டும் அனுமதியுங்கள். அவனுக்கு ஒரு 'ட்யூஷன்' வாத்தியாரை வேண்டுமென்றாலும் ஏற்பாடு செய்கிறேன்."

"அப்படிச்சொல். உன்னிடம் நிறையப் பணமிருக்கிறது போலிருக்கிறது. உழவோடுகூடக் 'கொடுக்கல் வாங்கலும்' உண்டோ?"

"ஐயா! என்னைக் கேலி செய்யாதீர்கள். அந்த அல்லாவிற்குத்தான் என் கஷ்டம் தெரியும்." அமாநத் தலையில் அடித்துக்கொண்டான்.

"பின் என்ன? உனக்குப் பத்துப் பிகாதான் நிலமிருக்கிறது என்கிறாய். உன் குடும்பத்தை எப்படித்தான் நடத்துகிறாய்? வீட்டு வாடகை எவ்வளவு தருகிறாய்? குடும்பத்தில் எத்தனை பேரிருக்கிறார்கள்?" ஹெட்மாஸ்டர் கேள்விகளை அடுக்கிக்கொண்டே போனார்.

"ஐயா? சமீபத்தில்தான் என் நிலம் பத்து பிகாவுக்குக் குறைந்திருக்கிறது. ஆனால் முன்பு இதைத்தவிர எழுபது பிகா நிலம் எனக்குச் சொந்தமாயிருந்தது. மூன்று கிராமங்களில் எனக்குப் பூமியிருந்தது. அனைத்தும் பொன் விளையும் நிலம். ஒவ்வொரு பிகாவிலும் பத்து முதல் பன்னிரண்டு மணங்கு நெல் விளையும். ஆகா! அறுவடை செய்த தானியத்தை வீட்டுக்குக் கொண்டுவரும் பொழுது..." உணர்ச்சி வசத்தால் அமாநத்தின் குரல் கம்பியது.

"அவ்வளவு நிலமும் எப்படி மறைந்து போனது அப்பா?"

"ஐயா, எல்லாம் என்னுடைய மகனின் படிப்பு என்னும் அதல பாதாளத்தில் மறைந்து போய் விட்டது. ஒருதடவை ஒருவனிடமிருந்து பத்து ரூபாய் கடன் வாங்கினேன். பணத்தைத் தருவதற்முன் என் விரலில் மசியைத்தடவி ஒரு காகிதத்தில் ஒத்தினான். பிறகு கோர்ட்டில் நான் அவனுக்கு நூறு ரூபாய் கொடுக்க வேண்டுமென்று பிராது கொடுத்து ஜயித்தும்விட்டான். பத்தின் பக்கத்தில் இன்னொரு பூஜ்யம் போட்டால், பத்து ரூபாய் நோட்டு நூறு ரூபாய் நோட்டாகி விடுமாமே? இந்த வித்தையைத் தான் அவன் செய்து என்னை ஏமாற்றிவிட்டான். படிப்பு வாசனையில்லாததால் தான் நான் நஷ்டப்பட்டேன். அதனால் என் அலீஸாவது நன்றாகப் படிக்க வேண்டுமென்பது எனது விருப்பம். அவன் படித்துப் பெரியவனானால் என்னை மறுபடியும் இது மாதிரி ஒருவரும் ஏமாற்றமுடியாதல்லவா? மிகுதியிருக்கும் என் சிறிது நிலமும் பத்திரமா யிருக்குமல்லவா?"

"அதற்கு அதிகப் படிப்பு வேண்டாமே. அலீஸ் இதுவரை படித்ததே போதுமே"

"நானும் தினமும் இதைத்தான் அவனிடம் சொல்லுகிறேன், ஐயா. 'அப்பா, அலீஸ், வா. நாமிருவரும் கலப்பையைப் பிடிப்போம், நம்

முடைய் முழு முயற்சியையும் நமது நிலத்தில் செலுத்தி நமது களஞ்சியத்தில் பொன்னை நிரப்பு வோம். நாமிழந்த எழுபது பிகா நிலத்தையும் நமது தோள் வலிமையைக் கொண்டே மீட்டு விடுவோம்!' அமாநத்தின் கண்கள் ஒளி வீசின.

"அவன் என்ன பதில் சொல்கிறான்?"

"ஐயோ! அவன் என்ன சொல்வான்? அவன் உடல்மீது மூன்று மடிப்புகளல்லவா ஏறியிருக் கின்றன. பனியன் மேல் சட்டை! சட்டையின் மீது கோட்டு! இவைகளைக் கிழித்தெறிந்துவிட்டு விரிந்த மார்புடன் பரந்த நிலத்தில் உழைக்க இசைவது அவ்வளவு சுலபமாயிருக்குமா அவ னுக்கு?"

அமாநத்தின் வார்த்தைகளில் உண்மை பிரதி பலித்தது. குருதயாள் பாபு உரக்கச் சிரித்தார்.

அமாநத் சிறிதுநேரம் சும்மாவிருந்தான். பிறகு, "ஆகையால் அவன் பரீட்சைக்கு உட் கார்ந்து பாஸ் பண்ணித்தான் ஆகவேண்டும். பரீட்சைக்கு அவனையும் அனுப்புங்கள் ஐயா! உங்களுக்குக் கோடிபுண்ணியமுண்டு," என்றான்.

"நான் என்ன செய்வது, அமாநத். விஷயம் என்னைத் தாண்டிப்போய்விட்டது. நீ போய் பள்ளிக்கூடத்தின் காரியதரிசியைப் பார். அவ ரால்தான் ஏதாவது செய்யமுடியும்," என்றுகூறி விடைகொடுத்தார் குருதயாள்பாபு.

## 2

அமாநத்தின் வீட்டில் நிறைய பருப்பு இருந் தது. ஒருகூடைப்பருப்புடன் காரியதரிசி யைப் போய்ப்பார்த்தான்.

புஜங்க ஹல்தார் வெறும் ஸ்கூல் காரியதரிசி மட்டுமல்ல. அவர் ஒரு கூட்டுறவுப் பாங்கின் மானேஜர். ஒரு 'ஹானரரி' நீதிபதிகூட. அவரு டைய குணத்தைத் தெரிந்தவர்கள் அவரை 'அனஹரி' (அரைப் பட்டினி) நீதிபதியென்று சொன்னார்கள். காரணம் அவரது கைகள் எந் தப் பொருளை எப்படிக் கைப்பற்றலாமென்று அலைந்துகொண்டேயிருக்குமாம்!

புஜங்க பாபு அமாநத்தின் வேண்டுகோளை நிரா கரிக்க விருந்தார். ஆனால் அவருடைய கடுமை யான கண்கள் அவன் கொண்டுவந்திருந்த கூடை நிறை பருப்பைக் கண்டவுடன் தாமாகவே இள கின! "சரி, பார்க்கலாம். அந்தக்கூடையைஅங்கே வைத்துவிட்டுப் போ," என்று அலட்சியமாகக் கூறினார்.

* * *

அன்று காலை முதலே அமாநத்திற்கு ஒன் றும் ஓடவில்லை. இரவு பூராவும் அவன் மனைவி நேக்ஜான் குடும்பத்தின் தரித்திர நிலை யைச் சுட்டிக்காட்டி, அஸீஸின் படிப்புக்காக நிலத்தைக் கரைத்து வருவதைப்பற்றி அவன் மீது வசை புராணம் படித்துக்கொண்டிருந்தாள்.

"கொஞ்சம் நாட்கள் பொறுமையுடன் இரேன், நேக்ஜான. தன்னுடைய படிப்பின் மகிமையால் அஸீஸ் நாம் இழந்ததையெல்லாம் மறுபடி கொண்டு வருவான்" என்று அவளைத் தேற்றி னான் அமாநத்.

மாலை அஸீஸ் வந்தான். "அப்பா, என்னைப் பரீட்சைக்கு உட்கார அனுமதித்து விட்டார் களப்பா. இனி கவலையில்லை," என்று களிப் புடன் கூறினான்.

அமாநத் இதைக்கேட்டுச்சந்தோஷப்பட்டிருக்க வேண்டும். ஆனால் ஏனோ அவன் முகத்தில் மகிழ்ச்சிக்குறி தென்படவில்லை. தன் முன் நிற் கும் தன் மகன் அன்னியன்போல அவன் கண் களுக்குத் தோன்றினான். அஸீஸின் வண்ணான் வெளுத்த 'சூட்டும் கோட்டும்', 'பெஸ்' தொப்பி யும் சம்பந்தமற்று அவனுக்குத் தோன்றின. அவனைப் பார்க்கக் கூட அமாநத்திற்குக் கூச்ச மாயிருந்தது.

அஸீஸ் மேலும் தொடர்ந்தான்.

"என்னைப் பரீட்சைக்கு அனுப்பி விட்டார்கள், சரிதான். ஆனால் இப்பொழுது பரீட்சைப்பணத் திற்கும் மற்றும் செலவுகளுக்கும் ஐம்பது ரூபாய் வேண்டும். ஞாபகமிருக்கட்டும்." என்றான்.

"ஐம்பது ரூபாயா?" அமாநத்தின் தேகம் ஒரு தரம் குலுங்கிற்று. "அவ்வளவு பணம் எங் கிருந்து கிடைக்கும், அஸீஸ்?"

"என்ன செய்வது அப்பா? துறைமுகத்தை நெருங்கும் கப்பலைக் கவிழச் செய்யலாமா?"

'கப்பல் கவிழ்ந்தால்தான் என்ன மோசம்!' என்று அமாநத் நினைத்தான். தன் தேகத்தி லிருந்த அத்தனை பலமும் தானாக வடிவது போன்ற ஒரு உணர்ச்சி ஏற்பட்டது அவனுக்கு. கண்களில் நீர் திரையிட்டது.

"அஸீஸ், என் மகனே! நான் சொல்வதைச் சிறிது கேள். இங்கிருந்து அதோ பார். அந்த நதி வரை நமக்கு நிலமிருந்தது. உன் பள்ளிப் படிப்பு என்ற பகாசுரன் கொஞ்சம் கொஞ்சமாக அவ்வளவையும் விழுங்கி விட்டான். இனியா வது நான் சொல்கிறபடி நட. நாமிருவரும் கலப் பையைக் கைப்பிடிப்போம். நமது பலத்தைக் கொண்டே இழந்த பூமியை மீண்டும் பெறு வோம்."

அஸீஸ் அலட்சியமாகச் சிரித்தான்.

"அப்பா, உமக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா என்ன? நிச்சயமாக நாம் இழந்ததை மீண்டும் பெறவேண்டியதுதான். ஆனால் நான் முதலில் ஒரு மனிதனாகட்டும். நீர் ஏன் கவலைப் படுகிறீர்? நமக்கு எப்பொழுதுமே இந்த எளிய

குடிசைதானிருக்குமோ? இல்லை. அதற்குப்பதிலாக ஒருமாளிகையைக்கட்டுவோம். அப்பொழுது உடம்பில் சகதியைப் பூசிக்கொண்டு உம் கைகள் கலப்பையைத் தள்ளத் தேவையிருக்காது. வீட்டிலிருந்தபடியே நமக்கு வாடகையும் தானியமும் கிடைக்கும்."

"மகனே! நீ சகதியென்று அலட்சியமாகக் கூறுகிருய். அந்தச் சகதி என்னுடம்பில் படாவிட்டால் என்ஞல் உயிர்வாழ முடியாதே!" என்று பதிலுரைத்தான் அமாநத்.

அஸீஸ் மறுபடியும் சிரித்தான். "அப்பா! சகதிக்குப் பதிலாக நீங்கள் சோப்புத் தேய்த்துக் குளிப்பீர்கள். உங்களுக்கு ஏன் வருத்தம்? இந்த அஸீஸ் படித்து முடிக்கட்டும். பிறகு ஒரு கவலையுமில்லை.

அமாநத் தலை கடுகடுக்க யோசித்தான். எங்கிருந்து பணம் கிடைக்கும்? அடகுவைத்துக் கூட, கடன் கிடைப்பது குதிரைக் கொம்பாக விருக்கும் காலமாயிற்றே! "சரி, முயற்சி செய்து பார்ப்போம்." என்று தனக்குத்தானே கூறிக் கொண்டான். பிறகு 'சத்தரை' தோளில் போட்டுக்கொண்டு ஹாஜி சாகிப் வீட்டை நோக்கி நடந்தான்.

கடன் கேட்டதும் ஹாஜி எரிந்து விழுந்தான்.

"அமாநத்! உனக்கு இதுவரை கடன் கொடுத்தது போதாதா? இனி நம்மால் முடியாது." என்று கண்டிப்பாகச் சொன்ஞன்.

"அப்படிச் சொல்லாதீர், ஹாஜி சாகேப்! என்னுடைய பிள்ளை பரீட்சைக்குப் போகிருன். பீஸ் கட்டவேண்டும். நீர் என்ன நிபந்தனை சொன்ஞலும் அதற்கு உடன்படச் சித்தமாயிருக்கிறேன். என்னைக் கைவிடாதீர்கள்." என்று கெஞ்சினுன் அமாநத்.

"அதெல்லாம் இனிமேல் நான் ஒன்றும் தரமாட்டேன். உன் நிலத்தை விற்பதாயிருந்தால் சொல். நான் யோசனை செய்கிறேன்," என்ருன் ஹாஜி.

"உங்களுக்கு எவ்வளவு நிலம் வேண்டும்? என்ன விலைக்கு?" பதை பதைக்கும் உள்ளத்துடன் கேட்டான் அமாநத்.

"ஐந்து பிகா நிலம் வேண்டும். நூறு ரூபாய் தருவேன். சம்மதமா?"

"எனக்கு உடனே ஐம்பது ரூபாய் தேவை; நூறு தேவையில்லையே."

"அட, நீ சொல்வது வேடிக்கையாகவன்ரோ இருக்கிறது! இந்தக் காலத்தில் பணம் யாருக்குத்தான் வேண்டாம்? வேண்டுமென்ருல் ஐம்பது ரூபாயை எடுத்துக்கொண்டு பாக்கியை என்னிடமே கொடுத்து வையேன்."

"ஆனல் அந்த நிலம் நல்ல செழிப்புற்றதாயிற்றே. நீங்கள் பிகாவுக்கு இருபது ரூபாய் தானே தருவேனென்கிறீர்கள்."

"இங்கே பேரம் பேசவா வந்தாய்? ஏதோ போனல் போகிறதென்று உனக்கு உதவி செய்யலாமென்று நினைத்தால், நீ இதுவும் பேசுவாய் இன்னமும் பேசுவாய். நான் சொல்லும் விலை உனக்குப் பிடிக்கவில்லையென்ருல், வேறிடத்தில் போய்க் கடன் கேள்."

"ஐயா, ஹாஜி சாகேப்! நீங்கள் இரண்டு பிகா நிலத்தையெடுத்துக்கொண்டு ஐம்பது ரூபாய் கொடுங்கள். என் மேல் கருணை காட்டுங்கள், ஹாஜி சாகேப்!" அமாநத் ஹாஜியின் கால்களில் சாஷ்டாங்கமாக விழுந்தான்.

"இந்தக் கஷ்டத்திலிருந்து எப்படித் தப்புவது? வேறு எங்கிருந்து பணம் கிடைக்கும்? பணமில்லாவிட்டால் அஸீஸ் எப்படிப் பரீட்சைக்கு உட்காருவான்? இன்னும் இரண்டு நாளில் பணம் கட்டியாக வேண்டுமே!" அமாநத்தின் உள்ளம் தீவிர யோசனையிலாழ்ந்தது. ஆனல் ஹாஜி மசியவில்லை.

மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு அமாநத் ஹாஜி நீட்டிய பத்திரத்தில் மை தோய்ந்த தன் விரலை அழுத்தினுன்,

* * *

அமாநத் பத்துப் பிகாக்களையும் பயிர் செய்தான். ஹாஜி, தன்னுடைய ஐந்து பிகா நிலத்தைக் கூட, அவனையே சாகுபடி செய்யும் படி விட்டு விட்டான். அமாநத்தின் கைராசி அவனுக்குத் தெரியும்.

அமாநத் மிகுதியுள்ள ஐம்பது ரூபாயைத் தன் மனைவி நேக்ஜானிடம் கொடுத்துப் பத்திரமாய் வைத்துக்கொள்ளச் சொன்ஞன்.

"உனக்கு ஏது திடீரென்று இவ்வளவு பணம்?" என்று ஒன்றுமறியாத அவள் கேட்டாள்.

அமாநத்தின் கண்களில் மறுபடியும் நீர் நிறைந்தது. 'திருடினேன் என்று தான் வைத்துக் கொள்ளேன். இனிமேல் திருடுவது தான் என் தொழில்." மனக்கசப்புடன் மொழிந்தான் அமாநத்.

"உண்மையைச் சொல், உனக்குப் பணம் கொடுத்தது யார்?"

"யார் கொடுப்பார்கள், நேக்ஜான்? வழக்கம் போல என் நிலம் தான் கொடுத்தது."

"என்ன? மறுபடியும் நிலத்தை விற்ருயா? எவ்வளவு விற்ருய்? சரி சரி, இனி நாம் பட்டினி கிடந்து சாகவேண்டுமென்று முடிவு செய்துவிட்டாயா?" கண்களில் நீர் பெருக, கடும் கோபத்துடன் கேட்டாள் நேக்ஜான்.

"மன அதைரியப்படாதே, நேக்ஜான்! நமது அஸீஸ் இருக்கிறான் நம்மை ரட்சிக்க. அவன் படிப்பு இருக்கிறது விற்றதையெல்லாம் திருப்பி நமக்கு அளிக்க," என்று அவளைத் தேற்றினான் அமாநத்

3

அறுவடை முடிந்தது. ஹாஜி சாகேப் வண்டி நிறையத் தானியத்தைக் கொண்டுபோனான். விரக்தியுற்ற உள்ளத்துடன் அதைப் பார்த்து நின்றுகொண்டிருந்தான் அமாநத். அவனுடல் இளைத்துத் துரும்பாய்ப் போய்விட்டிருந்தது.

கையிலிருந்த ஐம்பது ரூபாயும் ட்யூஷன் உபாத்தியாயர் சம்பளத்துக்கே செலவாகியது. இப்பொழுது அஸீஸ் பரிட்சையெழுத டவுனுக்குப் போகவேண்டும். போய்வருவதற்கும், ஹோட்டலில் தங்குவதற்கும், மற்றும் தேவையான உடுப்புகளுக்கும் மறுபடியும் பணம் வேண்டும்.

"நாம் கையில் ஓட்டை எடுத்துக்கொண்டுதான் போகவேண்டும்!" — இது நேக்ஜான்.

"உனக்கு ஒன்றும் தெரியவில்லை, நேக்ஜான். அஸீஸ் நம்மை ஒரு 'பக்கா' வீட்டில் அமர்த்துவான். ஆனால் அதில் நீ தான் வசிப்பாய். நான் அதுவரை உயிருடன் இருக்கமாட்டேன். அதற்குள் என் நிலம் என்னை நன்றாக ஆலிங்கனம் செய்துவிடும்!" — இது அமாநத்.

இன்னும் தான் ஐந்து பிகா நிலமிருக்கிறதே! வெய்யிலின் உக்கிரம் தாங்க முடியவில்லை. வானத்தில் ஒரு துளி மேகம் கூட இல்லை. அமாநத் அண்ணாந்து பார்க்கிறான். பிறகு கலப்பையை வேகமாகத் தள்ளுகிறான். இந்தத் தடவை மழை மோசம் செய்து விட்டது. இனி ஒரு வேளை உணவு கிடைப்பதுகூடத் துர்லபம்! கூலி வேலை செய்யவேண்டியது தான் போலும்!

இல்லை. அஸீஸ் இருக்கிறான். எப்படியோ அவன் பரீட்சையில் தேறிவிட்டான். இனிமேல் யாராவது அவனைக் கேவலம் உழவனின் மகன் தானேயென்று கேலி செய்ய முடியுமா? அவனுடைய நடையே மாறிவிட்டிருந்ததே!

"மகனே, அஸீஸ்! இனி நீ என்ன செய்யப் போகிறாய்?" என்றான் அமாநத்.

"அப்பா! இனிமேல் என்னை மேலும் படிக்க வைக்க உங்களால் முடியாது. ஏதாவது வேலையில்தான் அமரவேண்டும்," என்றான் அஸீஸ்.

டவுனில் கோர்ட்டில் 'பியூன்' "வேலைகள் காலியாயிருக்கின்றனவாம். ஆட்களைப் பொறுக்க ஒரு செயற்கை நாடகம் நடக்குமாம். ஆனால் 'சிரஸ்தேதாருக்குக்' 'கொஞ்சம்' கொடுக்கத் தயாராயிருப்பவர்களுக்கு வேலை நிச்சயமாம்!"

"அப்பா! ஒரு நூறு ரூபாயில் முடித்து விட்டேன். இனி எனக்கு அந்த வேலை நிச்சயம்," என்றான் அஸீஸ்.

"மறுபடியும் பணமா? உத்தியோகம் கிடைப்பதற்கும்கூட பணச்செலவா? ஐயோ, கடவுளே!" என்றான் அமாநத். கப்பலைத் துறைமுகத்தில் சேர்த்தால் மட்டும் போதுமா? நங்கூரமும் பாய்ச்சித்தானே ஆகவேண்டும்? மேலும் இன்னும்தான் ஐந்து பிகா நிலம் பாக்கியிருக்கிறதே?

ஹாஜி சாகேப் மறுபடியும் தோன்றினான். பேனா—மசி-விரல்-பத்திரம். மிகுதியிருந்த கடைசி ஐந்து பிகா நிலமும் மறைந்துபோயிற்று.

4

அஸீஸ் வெற்றியுடன் திரும்பி வந்தான்.

"அப்பா! எனக்குப் பியூன் வேலை கிடைத்து விட்டது" என்று களிப்புடன் கூறினான்.

"ஆனால் நான் பிச்சைக்காரனாகிவிட்டேனே!" என்று ஏக்கத்துடன் சொன்னான் அமாநத். இப்பொழுது குடியிருக்கும் வீடுதான் பாக்கி. ஆனால் நிலமின்றி அதனாலென்ன பிரயோசனம்?

அஸீஸ் எல்லோரையும் டவுனுக்கு அழைத்துச் சென்றான். தனது முப்பது ரூபாய் சம்பளத்தில் குடும்பத்தை நடத்த முடியுமென்று அவனுக்கு நம்பிக்கை. இன்னும் அதிக வரும்படி கிடைக்கவும் வழியுண்டாம். அதற்கு வேண்டியது கொஞ்சம் தைரியமும் சாமர்த்தியமும் தானாம்!

ஆனால் பழைய நாட்களில் நாள் பூராவும் நிலத்தில் உழைத்துவிட்டு மாலையில் 'ஹுக்கா' குடிக்கும்பொழுது ஏற்படும் அலாதி இன்பம் அமாநத்துக்குஇப்பொழுது ஏனோ ஏற்படுவதில்லை. வேலை செய்யாது சும்மா உட்கார்ந்திருப்பதால் அவன் உடல் பெருத்துவிட்டது பூட்டுகளிலெல்லாம் ஒரே வலி. காலம் செல்வதே கடினமாகத் தென்பட்டது. கைகளும் கால்களும் மரத்துப்போயின. சாப்பிட்டவுடன் சுவாசம் வலிக்க ஆரம்பித்தது.

அஸீஸ் மார்க்கெட்டில் ஒரு அறையை வாடகைக்குப்பிடித்தான். அதில் இப்பொழுது மூக்குக் கண்ணாடி அணிந்துகொண்டு ஒரு தையல்மெஷினை ஓட்டுகிறான்அமாநத்! சட்டை, ஜிப்பாமுதலியவைகளைத் தைத்துக் கொடுத்துக்கூலி வாங்குகிறான். அவன் சிந்தனை ஓடுகிறது: ஆகா! இது ஒரு கௌரவமான பிழைப்புத்தான். நான் இனி கேவலம் கலப்பை தள்ளும் உழவனல்ல. அஸீஸும் உழவனின் மகனல்ல. இப்பொழுது அவன் ஒரு தையற்காரனின் மகனல்லவா? இது எவ்வளவோ தேவலையே!" ஐயோ, அமாநத்!

ஆனால் மழைத்துளிகள் தன்னறையின் கூரை மேலே விழுந்து நர்த்தனம் புரியும்போது மட்டும் அமாநத்தின் கால்கள் 'மிஷின்'மீது டக்கென்று நின்றுவிடுகின்றன, அவன் செவிகளுக்கு மழையின் 'ஹோ'வென்ற சப்தம் யாரோ ஓலமிடுகிறது போலிருக்கிறது. அவன் கூர்ந்து கவனிக்கிறான், ஆம்! அவனுடைய நிலம்தான் ஓலமிடுகிறது!

"அமாநத்!என்னைவிட்டோடிவிட்டாயே! என்னை இப்படி மறக்கலாமா? வா! மறுபடியும் என்னிடம் ஓடி வா!" என்று அவனைக் கூவி அழைப்பது அவனுக்கு நன்றாகக்கேட்கிறது!

# ஏழையின் பசு

அ. ராம்கோபால்

பாலுக்காக நாம் வீடுகளில் பசு அல்லது எருமையையோ பொதுவாக வளர்க்கிறோம். எருமை எல்லா இடங்களிலும் வளர்க்க ஏற்புடையதல்ல. அதன் பாலும் பசுவின் பாலைப்போல் தேக சுகத்துக்கு அவ்வளவு ஏற்றதாக இல்லை. அதை வளர்க்குமிடமும் அசுத்தம், துர்நாற்றம், தொத்து நோய் முதலியவற்றிற்குச் சுலபமாக இலக்காகிறது. அதற்குத் தீனியும் மற்ற வளர்ப்புச் செலவுகளும்கூட அதிகமாகவே ஆகும். பசுவுக்கு இக்குறைகள் இல்லை. ஆனால் பசுவை வாங்கி வளர்ப்பதென்றாலும் அதற்கும் அதிகமாக முதல் போட்டே ஆகவேண்டும். ஏழ்மை மிகுந்த நம்நாட்டில் அதிக முதல் போட்டுப் பசுவோ எருமையோ வாங்கி, பால் குடிக்கக்கூடிய நிலையில் உள்ளவர்கள் மிகமிகக் குறைவு என்றே கூற வேண்டும். அமெரிக்காவில் நம் நாட்டைவிடக் கால்நடை சராசரி மிகக்குறைவே. அப்படி இருந்தும் அவர்கள் தினம் தலைக்குச் சராசரி 35 அவுன்ஸ் பால் குடிக்கிறார்கள். நமக்கு 5 அவுன்ஸ் பாலுக்கே திண்டாட்டமாக இருக்கிறது. இதற்கு நம் ஏழ்மை ஒரு முக்கிய காரணம்.

வெள்ளாட்டை ஏழைகளின் பசு எனக் கூறினால் அது மிகையாகாது. இதன் பால் பசுவின் பாலுக்கு எந்த விதத்திலும் தாழ்ந்ததன்று. சற்று உயர்வானதென்றே கூற வேண்டும். பசுவின்பாலைச் சுத்தமாக வைத்திருக்கத் தவறினால் அதில் சுலபமாக ரோகக் கிருமிகள் விருத்தியடையும். அப் பாலைக் குடிப்பது விஷத்தைக் குடிப்பதையே ஒக்கும் என டாக்டர்கள் கூறுகிறார்கள். வெள்ளாட்டுப் பாலில் க்ஷயரோகக் கிருமிகளே இருப்பதில்லை. அப்படி இருந்தாலும் அவை அப் பாலில் உயிரோடிருக்கமுடியாது என நீண்டநாள் ஆராய்ச்சிக்குப்பின் டாக்டர்கள் முடிவு செய்திருக்கிறார்கள். பசும்பால் குடிப்பவர்களுக்கு, முக்கியமாகச் சிறு குழந்தைகளுக்கு வயிற்றில் பால்கட்டி அல்லது மலக்கட்டு ஏற்படுவதுண்டு. வெள்ளாட்டுப் பாலுக்கு இக் குறையுமில்லை. பசும்பாலை அதிகநேரம் அப்படியே வைத்திருந்தால் அதில் அடங்கியுள்ள வெண்ணெயின் பெரும் பாகம் தனியாகப் பிரிந்து மேலே மிதக்கும். வெள்ளாட்டுப்பாலில் அப்படி இல்லை. வெள்ளாட்டுப்பால் பசும்பாலைவிடச் சீக்கிரமாகவும் சுலபமாகவும் செரிமானமும் ஆகிவிடும். இதனாலேயே இன்று ஐரோப்பியரும் எகிப்தியரும் பாலுக்காகப் பசுவை வளர்ப்பதைப் போலவே வெள்ளாடுகளையும் விசேஷமாக வளர்க்க முற்பட்டுள்ளனர்.

வெள்ளாடு வளர்ப்பதால் பால் மட்டுமல்ல கம்பளி நெசவுக்கு வேண்டிய சிறந்த உரோமமும் கிடைக்கிறது. உணவுக்கு வேண்டிய மாமிசம், நிலத்துக்குச் சிறந்த உரமான ஆட்டுப் புழுக்கை, பல சிறிய பெரிய தொழில்களுக்கு வேண்டிய தோல், ஜவ்வு, எலும்பு, கொம்பு முதலியவையும் கிடைக்கின்றன.

## ஜாதிகள்

வெள்ளாட்டில் பல ஜாதிகள் உண்டு. அவற்றில் முக்கியமானவை இவைதான்.

1. **ஸ்விஸ் ஜாதி** (Swiss goats)—இதில் டாகன்பர்க் (Toggenberg) சானன் (Sanen) என்னும் இரண்டு ஜாதிகள் பிரபலமானவை. இவற்றின் காதுகள் முயற்காதைப்போல் நேராக நிற்கும். இவற்றோடு கலப்புச் செய்து (Cross breeds) பல புதிய இனங்கள் தோற்றுவித்திருக்கிறார்கள். இக்கலப்பு இனமே ஐரோப்பா முழுவதும் வளர்க்கப்படுகிறது.

2. **எகிப்து ஜாதி** (Nubian goats) இது கறுப்பு அல்லது மஞ்சள் கலந்த சாண (Jan) நிறத்திலிருக்கும். காதுகள் தொங்கும். உரோமங்கள் குட்டையாக இருக்கும்.

3. **பாலஸ்தீன ஜாதி** (Palestine goats) கறுப்பு நிறம், காதுகள் தொங்கும், உரோமங்கள் நீண்டிருக்கும்.

4. **கினி ஜாதி** (Guinea goats) – இது நம் குறும்பை ஆட்டைப்போல் மிகவும் குட்டையாக இருக்கும். நிறம் கறுப்பு, தொங்கும் காதுகள். மேற்கு ஆப்ரிகா, நைல்நதிப் பிரதேசம், மாரிசஸ், மடகாஸ்கர் பிரதேசங்களில் மிகுதி.

5. **போயர் ஜாதி** (**Boer goats**) – எகிப்து ஜாதியைப் போன்றது. தென் ஆப்பிரிகாவில் மிகுதி.

6. **இங்கிலிஷ் ஜாதி** (**English goats**) – சிவந்த கறுப்பு அல்லது மான்குட்டி நிறம் (**fawn**). குட்டை மயிர். ஐரிஷ் ஜாதிக்கு நீண்ட மயிருண்டு.

7. **துருக்கி ஜாதி** (**Angora goat**)–இதை அங்கோரா அல்லது மோஹேர் (**Mohair**) ஜாதி எனச் சொல்வதுண்டு. உலகப் புகழ் பெற்றது. இதன் தாயகம் திபெத்து எனக் கருதப்படுகிறது. துருக்கி, ஆஸ்ட்ரேலியா, தென் ஆப்பிரிக்கா, அமெரிக்கா முதலிய இடங்களில் ரோமத்துக்காக இப்பொழுது பெரும் அளவில் வளர்க்கப்பட்டு வருகிறது. இதன் கால்கள் உள்பட உடல் முழுவதும் பட்டுப்போன்ற பளபளப்பான ரோமம் வளர்ந்து தொங்கும், மார்ச்–ஏப்ரல் மாதங்களில் இதை வெட்டிச் சேகரிப்பார்கள். அம் மாதங்களில் வெட்டிச் சேகரிக்கத் தவறினல் வெயில்கால ஆரம்பத்தில் அவையெல்லாம் தாமாகவே கீழே உதிர்ந்துவிடும். ஒரு ஆட்டிவிருந்து சராசரி $2\frac{1}{2}$ ராத்தல் ரோமம் (**fleece**) கிடைக்கும். நன்கு பராமரிக்கப்பட்ட சில ஆடுகளிலிருந்து 15 ராத்தல் வரை கிடைப்பதுண்டு. இதை வளர்க்க வரட்சியான மேட்டுப் பிரதேசங்களே ஏற்றவை. எவ்வளவு குளிரையும் தாங்கிக்கொள்ளும் சக்தி உண்டு.

.8 **யமுனு ஜாதி** – உலகிலேயே சிறந்த ஜாதிகளுள் ஒன்று. கறுப்பு நிறம், தொங்கும் காது. குட்டை ரோமம் உள்ளது. இச் சாதி ஆடுகள் யமுனை ஆற்றின் இரு கரைகளிலும் மிகுதி. சமீபத்தில் ஆக்ராவுக்கும் கான்பூருக்கு மிடையே யமுனைபாயும் இடாவா (**Etawah**) ஜில்லாவில் சந்தர நகர் என்னும் ஊரில் வெள்ளாட்டுக் கண்காட்சி ஒன்று அரசாங்கம் நடத்தியது. இதில் 1150 ஆடுகள் கலந்துகொண்டன. கலந்து கொண்டவைகளில் பெரும்பாலானவை தினசரி $3–3\frac{1}{4}$ சேர் பால் கறக்கக்கூடியவை. ஆனல் அதில் ஒன்று தினசரி 6 சேர் பால் கறந்தது! இவ்வாட்டின் சொந்தக்காரருக்குக் கால்நடை இலாகாவின் சார்பாக ரூ 400 இனம் கொடுக்கப்பட்டது.

9. **சூரத்சாதி** (**Surati goat**) – இது இந்திய ஜாதிகளில் முதன்மையானவற்றுள் ஒன்று, பம்பாய் மாகாணத்தில் சூரத் அருகே மிகுதி. பெரும்பாலும் யமுன ஜாதியைப் போன்றே இருக்கும். ஆனல் நிறம் மாத்திரம் வெள்ளையாக இருக்கும்.

10. **காஷ்மீர் ஜாதி** (**Kashmir goat**) – இதைப் போர்வை ஆடு (**Shawl goat**) எனச் சொல்லுவது முண்டு. தன் அருமையான உரோமத்திற்காக உலகப் புகழ்பெற்ற இந்திய ஜாதிகளுள் ஒன்று. காஷ்மீரில் இவ்வாடுகள் மிகுதி. கொம்புகள் திருகி இருக்கும். மயிர்கள் மிகுதியாக நீண்டு வளர்ந்திருக்கும். நீண்டு வளர்ந்த மயிர்களுக்குள்ளே சிறு மயிர்கள் (**under – growth**) மிகுதியாக முளைத்திருக்கும். விலை உயர்ந்த காஷ்மீர் கம்பளங்கள் நெய்ய இம்மயிரே பயன்படுகிறது.

## வளர்ப்பு முறை

இவ்வாடுகளை மூன்றுவிதமாக வளர்க்கலாம் (1) தன்னிச்சைபோல் சுற்றித் திரிந்து மேய விடுவது (**free range**) (2) ஒரு இடத்தில் முளையடித்து நீண்ட கயிற்றால் கட்டி மேயவிடுவது (**Tether range**) (3) வீட்டிலே கட்டித் தீனி போடுவது (**Stall feeding**). இம்மூன்று முறையும் நம்நாட்டில் இப்பொழுது அனுஷ்டானத்திலிருந்து வருகிறது. முதல் முறை அவ்வளவு சிலாக்கியமானதன்று. ஏனெனில் இவ்வாடுகளைத் தன் இச்சைபோல் விட்டால் தாவரங்களுக்கு மிகுந்த சேதத்தை விளைவிக்கும். இதனல் மனித சமூகத்துக்கு ஏற்படும் நன்மையைவிடத் தீமையே அதிகமாகி விடும். இரண்டாம் முறை சிலாக்யமானது. மூன்ரும் முறைப்படி வளர்ப்பதானல் காலையிலும் மாலையிலும் சிறிது நேரமாவது காலாற அவிழ்த்துவிடவேண்டும். மரக் கொம்புகளை ஒடித்து ஆகாரமாகப் போடலாம். உப்புப் போட்டுத் தண்ணீர் காட்டிப் பழக்க வேண்டும். புண்ணுக்கு, அகத்திக்கீரை, வாழைப் பழம், ஆமணக்கு விதை வேகவைத்த நீர், வெல்லம் கலந்த கஞ்சி, பப்பாளி இலை, பப்பாளிக்காய், முட்டைக்கோசுக் கீரை, காரட் இலை முதலியவை பாலைப் பெருக்க உதவும். இதற்குப் போடும் ஆகாரம் எதையும் தண்ணீரில் போட்டுக் கழுவிப் போடுவது நல்லது. ஏனெனில் மண்ணில் விழுந்தவைகளை அவ்வளவாக அவை விரும்பிச் சாப்பிடுவதில்லை.

## நோய் நொடிகள்

சாதாரணமாக இவற்றிற்கு நோய் நொடிகள் அதிகமாக வருவதில்லை. இரவில் கட்டி

வைக்கும் இடம் ஈரக் கடிப்பாக இல்லாமல் பார்த்துக் கொண்டால் பொதுவாக எவ்வித நோயும் அண்டுவதில்லை. அப்படி ஏதாவது நோய் வந்தால் அது பெரும்பாலும் கழிச்சல் (Diarrhoea & Dysentery) சளி இருமல் (Catarrh) அல்லது மடிப்புண்ணகைத் தானிருக்கும். கழிச்சல் கண்டால் ½ அவுன்ஸ் சாக்கட்டித் தூளில் உகிரெய்ன் அபின் சேர்த்து, 12 அவுன்ஸ் சுடுதண்ணீரில் கலக்கி, காலை மாலை இருவேளை கொடுத்தால் நின்று விடும். சளி இருமலுக்குக் காலையில் எப்சம் சால்ட் என்னும் பேதி உப்பு ஒரு அவுன்ஸ் கொடுத்து மாலையில் கால் அவுன்சு இஞ்சிச் சாறு கொடுக்கலாம். இவ்விதம் ஒரு வாரம் கொடுத்து வரவேண்டும். மடிப் புண்ணுக்கு மடியிலுள்ள பாலை எல்லாம் பீச்சி எடுத்து விட்டு, கூஸ்கிரீஸ் (goose grease) 8 அவுன்சு, உப்பு 2 அவுன்சு, (camphorated sprit of wine) 2 அவுன்சு, மூன்றை யும் ஒன்றாகக் கலந்து வைத்துக் கொண்டு தடவிவந்தால் சுகமாகிவிடும்.

### மற்ற விவரங்கள்

பெண் ஆடு மூன்று வாரத்திற்கு ஒரு முறை ஈற்றெடுக்கும் (Heat). பிறந்த ஆறு வது மாதமே புணர்ச்சியில் இச்சைகொள் ளும். ஆனால் ஒன்றரை வயதாகும்வரை புணரவிடக் கூடாது. ஈன்ற ஆடு 21 அல்லது 22 வாரம் வரை பால் கொடுக்கும். எட்டு ஆடுகள் வளர்த்தால் வருடம் முழுவதும் 2–3 படி பால் கிடைக்கும். இப் பால் பாலாடைக் கட்டிக்கு மிகவும் ஏற்றது. பால் கறப்பதற்கு முன் மடியை நன்றாகக் கழுவ வேண்டும், தரையில் தண்ணீர் தெளிக்க வேண்டும். ஆண் ஆடு தூரத்தாமலோ புண ராமலோ பார்த்துக்கொள்ளவேண்டும். இப் படிச் செய்தால் இப் பாலில் வீசும் ஒரு வித மான நாற்றம் வெகுவாகக் குறையும். சரா சரி இதற்கு வயது 12. 4–8 வயதுவரை அதிகமாகப் பால் கொடுக்கும்.

அமெரிக்காவில் வெள்ளாட்டுப்பால் சம் பந்தமாக, சங்கம் ஒன்றிருக்கிறது. அதன் விலாசம் American Milk Goat Association, Vincennes, Indiana என்பது. கானடாவிலும் ஒரு சங்கம்இருக்கிறது.அதன் விலாசம் Canadian Goat Society, Victoria, British Columbia என்பது. அமெரிக் காவிலிருந்து Goat World என்னும் மாதப் பத்திரிகை ஒன்றும், National Bulletin cf Milk Goats என்னும் மாத மிருமுறைப் பத் திரிகை ஒன்றும், International Dairy Goat Journal என்னும் வாரப் பத்திரிகை ஒன்றும் வெளிவருகின்றன. வெள்ளாடு வளர்ப்புச் சம்பந்தமாக அதிக விபரம் வேண் டுபவர்கள் (1) The book of Goat by H. S. H. Pegler (2)Goat Keeping for Milk Production by C. T. Davies என் னும் இரண்டு புத்தகங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

வெள்ளாட்டுப் பாலிலும் பசும் பாலிலும் அடங்கியுள்ள சத்து விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஒப்பிட்டுப் பார்த்தால் வெள்ளாட்டுப் பாலின் உயர்வு தெரியவரும்.

| | பசு | வெள்ளாடு |
|---|---|---|
| தண்ணீர் | 87·6% | 85·2% |
| புரொடீன் | 3·3% | 3·7% |
| கொழுப்பு | 3 6% | 5·6% |
| உலோகச் சத்து | 0 7% | 0·8% |
| நார் இயல்பு | — | — |
| மாவு, சர்க்கரை | 4· 8% | 4·7% |
| சுண்ணும்புச் சத்து | 0·12% | 0·17% |
| பாஸ்பரஸ் | 0.09% | 0.12% |
| இரும்பு | 0·2% | 0·3% |
| வைடமீன் A | — | — |
| ,, B | 17 I. U. | — |
| ,, C | 2 I. U. | 3 I. U. |
| காலரிச் சத்து | 18 காலரி | 24 காலரி |



சரித்திர நாடகம்:

# சிவாஜியின் உண்மைத் தோற்றம்

தமிழாக்கம் → D. ராஜன்



ஆசிரியர்:-

**ஸேட் கோவிந்ததாஸ்** எம். பி.

### முக்கிய பாத்திரங்கள்

சிவாஜி—புகழ்பெற்ற மராட்டிய வீரர்.

மோரோ பந்த் பிங்களே—பேஷ்வா

ஆபாஜி ஸோனதேவ்—சிவாஜியின் தளபதி.

இடம்—ராஜகட்டம்

காலம்—1648-ஆம் ஆண்டு.

நேரம்— மாலை.

[அரண்மனைக் கோட்டையின் ஒரு பாகம் காணப்படுகிறது. கோட்டையின் கூரையைக் கற்கம்பங்கள் தாங்கியுள்ளன. பின்புறம் சுவரும் கற்சுவர்தான். முற்றத்தின் வலது பக்கத்தில் சற்றுத் தொலைவிலே சில பொன்னிறமான கலசங்களும் ஸ்தூபிகளும் காணப்படுகின்றன. வலதுபுறம் ஸைஹாத்திரி மலைத்தொடர்களும் மலைச் சிகரங்களின் தோற்றமும் மனதைக் கவருகின்றன. மலைச் சிகரங்களின் மறைவிலே சூரியன் அஸ்தமித்துக்கொண்டிருந்தான். எங்கும் ஒளித்திரள்! வண்ண ஓவியங்கள்! வெளியே கோட்டை மைதானம். அங்கு ஒரு உயர்ந்த கம்பத்திலே "பர்கவா ஜண்டா" காவி நிறக்கொடி பறந்து கொண்டிருந்தது. முற்றத்தில் நிலவிரிப்புக் காணப்பட்டது. அதில் ஒரு பட்டுத் திண்டில் சாய்ந்தவாறு ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்தார் சிவாஜி. முற்றவெளியிலே இரண்டு மாவலி மெய்க்காப்பாளர்கள் நின்றுகொண்டிருந்தார்கள். இடது புறத்திலிருந்து மோரோ பந்த் பிங்களே வருகிறார். அவர் நடுத்தர வயதுடையவர். அவருடைய நிறம் கோதுமையை ஒத்திருந்தது. நல்ல ஆஜானுபாகுவான தோற்றமுடையவர். அவரது ஆடை சிவாஜியின் ஆடைகளை ஒத்திருந்தன. தலைப்பாகை மாத்திரம் மாறுபட்டிருந்தது. அவருடைய தலைப்பாகை சிவாஜியின் மொகலாயத் தலைப்பாகை போலில்லாமல் மராட்டிய முறையில் அமைந்திருந்தது. நெற்றியில் கோபிசந்தனம் தீட்டியிருந்தார்.]

**மோரோபந்த்:—** (வணக்கத்துடன்) ஸ்ரீமந்த் ஸர்கார்! ஸேனாபதி ஆபாஜிஸோனதேவ் கல்யாண் ப்ராந்த் கோட்டையைவென்று, அங்கிருந்த "கஜானா"வையும் கொள்ளையடித்து விட்டு வந்து விட்டார்.

**சிவாஜி;—** (திடுக்கிட்டு,) ரொம்ப நல்லது! (மோரோபந்தை நோக்கி) பேஷ்வா

உட்கார். ரொம்பவும் மகிழ்ச்சியூட்டும் செய்தி கொண்டுவந்தாய். ஆபாஜி ஸோனதேவ் எங்கே?

**மோரோபந்த்:—** ஸ்ரீமந்! தங்களுடைய திவ்ய சமுகத்தில் ஆஜராஹிக்கொண்டிருக்கிறார்!

[சற்று நேரம் மௌனம். சிறிது நேரத்தில் ஆபாஜி ஸோனதேவ் வலது புறத்திலிருந்து வருகிறான். அவனுக்குப் பின்னே சுமைத் தூக்கியாட்களின் ஒரு சிறு கூட்டமிருந்தது. ஒவ்வொருவன் தலையிலும் ஒரு பெரிய சும்மாடு இருந்தது. அவர்களின் பின்னால் ஒரு சிறு பல்லக்கு மூடப்பட்டிருந்தது. ஆபாஜிஸோனதேவ் முற்றத்தில் வந்து சிவாஜிக்கு வணக்கம் செய்கிறான்.]

**சிவாஜி:—** உட்கார் ஆபாஜி. கல்யாண் பிராந்தியக் கோட்டையின் வெற்றிக்கு வாழ்த்துக்கள்!

**ஆபாஜி:—** ஸ்ரீமந் ஸர்க்கார், என் வாழ்த்துக்களை ஏற்றுக்கொள்ளுங்கள்.

**சிவாஜி:—** சொல், காலாட் படையில் மாவலிகள் வீரம் காட்டினார்களா அல்லது ஹிட்காரியர்களா?

**ஆபாஜி:—** இருவருந்தான் ஸ்ரீமந்த் ஸர்கார்!

**சிவாஜி:—** குதிரைப்படையினரிலே வார்கிரர்கள் வீரம்காட்டினரா அல்லது சிலேதார்களா?

**ஆபாஜி:—** இருவருந்தான் ஸ்ரீமந்த்.

**சிவாஜி—**ஸேனாபதிகள் எப்படியிருந்தனர்?

**ஆபாஜி—**காலாட் படையினர், தளபதி, ஹாவில்தார், ஜமால்தார் எல்லாம் சேர்த்து ஆயிரம்பேர். குதிரைப்படையின் தளபதிகள் ஹாவில்தார், ஜமால்தார் சூபேதார் எல்லோரும் புகழத்தக்க வகையில் செயலாற்றினர், ஸ்ரீமந்த் ஸர்கார்.

**சிவாஜி—**(சுமைக் கூலிகளைப் பார்த்துக் புன்னகையுடன்) கல்யாண் கோட்டையின் கஜானாவையும் கொண்டு வந்தாயா? ஏராளமான செல்வம் கிடைத்ததா?

**ஆபாஜி—**ஆம், ஸ்ரீமந்த்ஸர்கார். இதுவரையில் கிடைக்காத அளவிற்குக் கஜானாவைக் கொள்ளையடித்தேன். வெள்ளி, தங்கம், வைர வைடூரியங்கள்! மரகத மாணிக்கங்



கூள்! ஸ்ரீமந்த்ஸர்கார், தெற்கே மாத்திர மில்லை, வடக்கேயும் வெற்றி கிடைக்கும் எனக் கருதுகிறேன்.

**சிவாஜி**—(சுமைக் கூலிகளின் பின்னேயிருந்த பல்லக்கைப் பார்த்து) இதென்ன?

**ஆபாஜி**—(புன்னகையுடன்) அந்த மேனு... அந்த மேனுவில் ஸ்ரீமந்த்! இந்த வெற்றியின் மாபெரும் அன்பளிப்பிருக்கிறது.

**சிவாஜி**—(ஆவலுடன் அவனை நோக்கி) விவரமாகச் சொல்; அதில் என்ன இருக்கிறது?

**ஆபாஜி**:—ஸ்ரீமந்த் ஸர்கார்? கல்யாண் கோட்டையின் சூபேதார் அஹமதின் மருமகளின் அழகைப்பற்றி அறியாதவர் அவனியில் இல்லை. அவளையும் தங்கள் சமூகத்தில் 'கைது' செய்து காணிக்கையாகக் கொண்டு வந்திருக்கிறேன்.

[சிவாஜியின் வெற்றி மகிழ்ச்சிகள் யாவும் திடீரென மறைகின்றன. புருவங்கள் மேலே ஏறுகின்றன. அவருடைய கீழ் உதட்டின் மீது பற்கள் பதிகின்றன. ஆபாஜி அவருடைய முகமாறுதலைக்கண்டு அஞ்சுகிறான். மோரேபந்த் கண் கொட்டாமல் சிவாஜியையே பார்த்துக் கொண்டிருக்கிறார். சற்று நேரம் மௌனம்.

**சிவாஜி**— (வருத்தமடைந்த குரலில்) பல்லக்கை உடனே இங்கே கொண்டுவா.

[ஆபாஜி உடனே வெளியே செல்கிறான். சிவாஜி இமைகொட்டாமல் பல்லக்கையே பார்க்கிறார். மோரோபந்த் சிவாஜியை நோக்குகிறார். பல்லக்கும் வந்துவிடுகிறது. உடனே சிவாஜி அருகே செல்கிறார். மோரோபந்தும் பின்னாலேயே செல்கிறார்.]

**சிவாஜி**:— ஆபாஜி மேனுவைத் திற.

(ஆபாஜி உடனே கதவைத் திறக்கிறான். உடனே அஹமதின் மருமகள் மௌனமாக வெளியே வந்து வணக்க ஒடுக்கத்துடன் நிற்கிறாள், அவள் ஈடில்லாத அழகியாகக் காணப்பட்டாள். மொகலாயப் பெண்களைப் போன்றே உடையணிந்திருந்தாள்.)

**சிவாஜி**:—[அஹமதின் மருமகளுடன்] தாயே! சிவாஜி தன் சேனைத் தளபதியின் தகாத செய்கைக்கு மன்னிப்புக் கேட்கிறேன். ஆ! எத்தகைய அழகுடையவராக இருக்கிறீர்கள்? தங்களைப்பார்த்ததும் என் மனதில் ஒரு......... ஒரே சொல்தான் புலப்படுகிறது. என் தாய் தங்களைப் போன்று, அழகுடையவராக இருந்தால் சிவாஜி இப்பொழுது இருப்பதுபோல விகாரமான, தோற்றத்துடன் பிறந்திருக்க மாட்டான். தாயே! தங்களுடைய அழகு எனக்கு ஒரே ஒரு விஷயத்தில்தான் பயன்படலாம். நான் அந்தஅழகை ஹிந்து முறைப்படி தாய்க்கு வணக்கம் செலுத்தி அஞ்சலி செய்யவா அல்லது இஸ்லாமிய முறைப்படி அஞ்சலிசெய்யவா? அன்னாய்! தாங்கள் இங்கு ஒரு கவலையுங் கொள்ள வேண்டாம். தங்களுடைய மகனை நினையுங்கள். தங்களைச் சுகமாகத் தக்க மரியாதையுடன், தகுந்த பாதுகாப்புடன் தங்கள் கணவரிடம் அனுப்பி வைக்கிறேன். சற்றும் தாமதம் செய்யமாட்டேன் (ஆபாஜியைத் திரும்பிப் பார்த்து) ஆபாஜி, நீ செய்தவேலைக்கு மன்னிப்பேது? சிவாஜியை நன்கு அறிந்துமா இப்படிச் செய்தாய்? இந்த வெறுக்கத் தகுந்த செயலை எந்தத் துணிச்சலுடன் செய்தாய்? போரில்கூட சிவாஜி எந்த மசூதியிலும் ஒரு சிறு வெடிப்பேர்ப்படக்கூட இடமளித்ததில்லை இதுவரையில். எங்காவது சிவாஜியிடம் தூய நூல் குர் ஆனின் ஒரு பிரதியாவது கிடைத்தால் கூட, அதற்கு அஞ்சலி செய்து, கண்களில் ஒத்திக்கொண்டு, வணக்கம் செலுத்தியிருக்கிறான். திருக்குர் ஆனின் ஒவ்வொரு பக்கத்தையும், பாதுகாத்து மவுல்விஸாஹிப்பினிடம் அனுப்பியிருக்கிறான். சிவாஜியாகிய நான் ஒரு ஹிந்து! ஆனால் இஸ்லாம் மதம் அவனுக்குப் புனிதமானது தான். என் முன்னால் இஸ்லாமிய மறையும், அவர்களுடைய பரிசுத்த ஸ்தலங்களும் மிக மிக மதிப்புக்குரியவை. சிவாஜி ஹிந்து, கடவுளின் பாதையைக்காட்டும் எந்த நூலையும் சிவாஜி மதித்து வணக்கம் செலுத்துகிறான். சிவாஜியின் ஹிந்துப் பிரஜை - முஸ்லிம் பிரஜை என்ற வேற்றுமை கிடையாது! இப்பொழுதுங்கூட என் சேனையில் எத்தனை முஸ்லிம் தளபதிகளிருக்கிறார்களென்று தெரியுமா? அடே! இதைத் தெரிந்து கொள்ளவில்லையே! சிவாஜி இந்தத் தேசத்தில் "ஹிந்து-ராஜ்ஜியம்" அமைக்க விரும்பவில்லை! உண்மையான சுயராஜ்ஜியத்தை நிலை நாட்ட விரும்புகிறான். ஆக்கிரமிப்பாளரிடமிருந்து, அதிகாரத்தைப்பறித்து, தாராள

மனப்பான்மை கொண்டோரிடம் ஒப்படைக்க விரும்புகிருன். ஆனல் பரஸ்திரீ அடே! அன்னியஸ்திரீயே ஒவ்வொருவனுக்கும் தாய்க்குச் சமானமாயிற்றேடா. அதிகாரம் படைத்த தளபதியானுலும், அரசனுனுலும் அன்னியஸ்திரீகளிடம் விவேகமாக நடக்கவேண்டும். (சற்றுத் தயங்கி) ஆபாஜி! என்னைச் சோதனை செய்யநினைத்தாயா? ஏனிப்படிச்செய்தாய்? சிவாஜி இந்தச் சண்டை சச்சரவிலும் கொள்ளைகளிலும் தனிப்பட்ட சுகத்திற்கா ஈடுபட்டிருக்கிருன்! அவன் சுகபோக ஜீவியாக வாழவா விரும்புகிருன்? அதுவா அவன் இலட்சியம்? அப்படியானுல்...... அப்படியானுல் இந்த இரத்தக்களரி, இந்தக் கொள்ளைகள் வெறுக்கத் தகுந்தவையே. சிவாஜி சீல மற்றவனுக இருந்தால் சேனுதிபதிகளிடம், சீலத்தை எதிர்பார்க்க முடியுமா? இந்திரிய சுகத்தை நாடும் கொள்ளைக்காரர்களுக்கும் மற்றவர்களுக்கும் ஒரு வித்தியாசமுமில்லையே! அடே! அப்படியானுல் வாழ்க்கையைவிடச் சாவும், வெற்றியைவிடத் தோல்வியுமே சிறந்தவைகள்! (மோரோபந்தை நோக்கி) ஐயோ! பேஷ்வா ...இந்த... இந்த...என் தளபதி...என்...தளபதி என்ன காரியம் செய்தான்? ...வெட்கத்தால் என் தலை பாதாளத்தை நோக்கிக்குனிகிறது. இந்தப் பாபத்திற்கு எப்படிப் பிராயச்சித்தம் செய்து கொள்வதென்று தெரியவில்லையே!...(தயங்கி) பேஷ்வா இப்பொழுது நான் அளிக்கும் பிரகடனமிது தான்! — இனிமேல் யாராவது, இத்தகைய வெறுக்கத் தகுந்த செயல் செய்வானேயாகில் அவனுடைய தலை உடலிலிருந்து வேருக்கப்படும்.

[சிவாஜியின் தலை குனிகிறது. அஹமதின் மருமகள் சிவாஜியைப் பார்க்கிருள். அவளுடையகண்களிலிருந்து புலபுலவென நீர் மணிகள் உதிர்கின்றன. அது அன்பின் தூய்மையான கண்ணீர்! மோரோபந்த் சிவாஜியைப் பார்க்கிருர். ஆபாஜி பயந்த பார்வையில் மோரோபந்தைப் பார்க்கிருன்.]

( திரை விழுகிறது )

# "ஹலோ ஹலோ என்று நாம் அழைத்தபோதிலே......"

டில்லிவாசி

"......அமெரிக்காகூடப் பேசும் அம்மா காதிலே" என்று ஒரு பட்டணவாசத்து நாகரிக நாரீமணி டெலிபோனின் மாகாத்மியத்தைப்பற்றி ஒரு நாட்டுப்புறத்துப் பெண்ணுக்குச் சொன்னுள் ஒரு திரைப்படக் காட்சியில். இதைப்பற்றி நம் பக்கங்களில் நினைப்பதுகூடக் கஷ்டமாகவிருக்கிறது. ஏனென்றுல் சென்னை, கோயமுத்தூர், உதகையைத் தவிர எந்தப் பட்டணத்திலும் டெலிபோன் வசதி இல்லை. ஆனல் இந்தியாவின் முக்கிய பட்டணங்களிலிருந்து உலகத்திலுள்ள எந்த முக்கிய இடத்துக்கு வேண்டுமானுலும் பேசலாம். தரையைக் கடந்தவுடனேயே டெலிபோன் ரேடியோ மார்க்கம் செல்கிறது.

டெலிபோன் நவீன நாகரிகத்திற்கு இன்றியமையாதது. பட்டணங்களில் பணக்காரர் முதல் பல சரக்கு வியாபாரி வரை டெலிபோன் இல்லாதவர்கள் இல்லை. டில்லியில் மத்திய சர்க்காரைத்தவிர, பாக்கி எவரும் இருக்க உரிமை என்று நினைப்பதால் டில்லியில் உள்ள 15,000 டெலிபோன்களில் சுமார் பாதிக்குமேல் மந்திரிகள், ஆபீஸர்கள், காரியாலயங்கள் இவைகளில் இருக்கும். சன்யாசி குடும்பி ஆன கதையைப்போல் ஒவ்வொரு டிபார்ட்மெண்டும் வளர்ந்திருக்கிறது. ஆகவே, ஒரு மந்திரி, ஒரு உதவி மந்திரி, ஒரு காரியதரிசி, பல உப, உதவி, சில்லறைக் காரியதரிசிகள், ஸுபரிண்டுகள் அவர்களின் உதவியாளர்கள், அனந்தமான அந்தரங்க காரியதரிசிகள் இவர்களுக்கு ஆபீஸ்களில் ஒன்றுக்குக் குறையாமலும், வீட்டில் ஒன்றும் டெலிபோன்கள் உண்டு. இது கண்டு மிஞ்சியதுதான் சர்க்கார் சம்பந்தப்படாத ஊழியர்களுக்கும் பிரபலஸ்தர்களுக்கும் கிடைக்கும்.

டெலிபோன் பம்பாய் போன்ற பெரிய வர்த்தகஸ்தலங்களில் எவ்வளவு உதவுகிறது. எவ்வளவு பொது ஜனங்களால் உபயோகிக்கப் படுகிறது என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்றுல் இந்த உதாரணம் உதவும். திருச்சியிலிருந்து மாயவரம் வரை உள்ள பரந்த பிரதேசத்தில் உள்ளவர்கள் டெலிபோன் வைத்துக்கொள்பவர்களாக இருந்தால் இரண்டு அணு செலவில் எவ்வளவு நேரம் வேண்டுமானுலும் அளவளாவலாம். தற்சமயம் திருச்சியில் உள்ளவர் கும்பகோணத்தில் உள்ளவருடன் தம் அலுவல் சம்பந்தமாகக் கலந்து கொள்ளவேண்டும் என்றுல் இது முடிகிறதா? கட்டுச்சாதம் ஒன்று நீங்கலாக மற்ற ஆயத்தங்களைச் செய்துகொண்டு ஜங்ஷனில் வந்து முண்டியடித்து டிக்கட் வாங்கி ஜன்னல் சட்டத்தில் உட்கார்ந்து கொண்டு திருவரம்பூர், மஞ்சத்திடல் என்று கும்பகோணம் வரும் வரை ஸ்டேஷன்களை அல்லவா எண்ணவேண்டியிருக்கிறது.



VNISELBCTORகளில் ஒரு பகுதியைச் சோதிக்கும் அஸிஸ்டெண்ட் என்ஜினியர் ஸ்ரீ மாதுர்

இவ்வளவு உபயோகம் உள்ள பொது ஜன ஊழியனை டெலிபோன் எப்படி வேலை செய்கிறது என்பது மிகவும் ருசிகரமானது. டெலிபோன் கருவியை யாவரும் பார்க்காவது பார்த்திருப்பார்கள். கீழே தீபஸ்தம்பம் போன்ற தளத்தின் மேல் இரு முகங்கள் உள்ள தனிக்குழாய் பொருத்தப்பட்டிருக்கும், கீழே இருக்கும் பாகத்தில் 10 துவாரங்கள் கொண்ட வட்டமான சக்கரம் **(DIAL)** பொருத்தப்பட்டிருக்கும். டெலிபோன் செய்யும்பொழுது முதலில் பேசும் பாகத்தை **(RECEIVER)** கையில் எடுத்துக்கொண்டு, 7354 என்ற நம்பர் வேண்டும் என்றுல், அந்தந்த எண்கள் உள்ள துவாரங்களில் விரலை வைத்துச் சக்கரத்தை வலதுபக்கம் திருப்பி டயலில் கீழே பொருத்தப்பட்டிருக்கும் ஒரு நிறுத்தக் கொக்கி வரை **(Dial stop)** விட்டு நான்கு தடவை இதைப் பூர்த்தி செய்தால் வேண்டிய நம்பர் கிடைத்துவிடும்.



மின்சாரம் மூலம் டெலிபோனுக்கு வேண்டிய சுரல்கள் தயாரிக்கப்படுகின்றன

இது எப்படி சாத்தியமாகிறது? இதைத் தெரிந்துகொள்ள யந்திரங்கள் பொருத்தப் பட்ட அறைக்குச் செல்லவேண்டும். இதற்குத்தான் எக்ஸ்சேஞ்ஜ்(EXCHANGE)என்று பெயர். அறையின் உச்சிமட்டம் வரை புத்தகசாலையில் உள்ள புத்தகம் தாங்கிகளைப் போல் சந்து சந்தாக டெலிபோன் யந்திர வசதிகள் பொருத்தப் பட்டிருக்கின்றன. எங்கு பார்த்தாலும் சிறிசு முதல் பிரம் மாண்டமான அளவு உள்ள கம்பிகள் பின்னி முறுக்கிக்கொண்டு எக்ஸ்சேன்ஜின் பல பாகங்களிலும் செல்கின்றன.

எக்ஸ்சேன்ஜில் முதலில் தெரிந்துகொள்ள வேண்டியது (uniselector) என்ற பகுதி. இந்தப் பாகம் முதலில் ஒருவர் டெலிபோனை கையில் எடுத்தவுடன் அவருக்கு "லயன்" கிடைக்க உதவுகிறது. "லயன்" என்பது தான் சப்தம் பிரயாணம் செய்யும் மார்க்கம். 1000 நம்பர்களுக்கு 110 மார்க்கங்கள் பொருத்தியிருக்கிறார்கள். நான் குறிப்பிடும் டெலிபோன் எக்ஸ்சேன்ஜ் புது டெல்லியில் உள்ள கானட்பிளேஸில் இருக்கிறது. இதில் சுமார் 7,000 நம்பர்கள் உள்ளன. ஆகவே ஒரே சமயத்தில் சுமார் 800 பேர்கள்தான் பேசமுடியும்.

நான் குறிப்பிட்ட (uniselector) முதலில் ஒரே மார்க்கக் கால்வாயைத் தேடும். அது அகப்பட்டால் டெலிபோனில் பூனை நகங்களால் எதையாவது சுரண்டுவதுபோன்ற சப்தம் கேட்கும். ஆனால் எல்லா 800 மார்க்கங்களும் மும்முரமாக இருந்தால் இந்த "மார்க்கத்வனி" (Dial Tone) கிடைக்காது.

மார்க்கத்வனியைக் கேட்டவுடன் டெலிபோன் செய்யும் நபர் முதலில் "ஏழு" என்று இலக்கமிட்ட துவாரத்தைத் திருப்புவார். அப்பொழுது (First selector) என்ற இரண்டாவது கட்டத்தில் சலனம் உண்டாகிறது. வைபர் (Viper) என்ற இரு பற்கள்கொண்ட ஒரு தண்டில் அமைக்கப்பட்ட பாகம் பத்து வாய்க்கால்கள் கொண்ட ஒரு அமைப்பில் ஏழாம் பாகத்தைப்போய்ப் பற்றிக்கொண்டு பிணைப்புக்கொடுக்கும். பிறகு மூன்றும் நம்பர் சுற்றப்பட்டவுடன் "7300" என்ற பகுதியில் உள்ள இரண்டாவது (Selector) இயக்கப் பட்டு அதில் பிணைப்பு ஏற்படும். பிறகு "ஐந்து" "நானகு" இரண்டு நம்பர்களும் ஒரே (Selector)-ல் இயக்கப்பட்டு வேண்டிய நம்பருடன் இணைப்புக் கிடைத்துவிடும்.

இதைச் சொல்வதற்குதான் ஒரு நிமிஷம் ஆகிறதே தவிர இந்த நம்பரை இயக்குவது மூன்று நொடி வேலை. இந்த (SELECTOR) கருவிகளில் எந்தப் பாகமாவது வேலையில் ஈடுபட்டிருந்தால் தொடர்பு கிடைக்காது. இதற்கு அறிகுறி "கூ கூ" என்ற சப்தம் (ENGAGED SOUND) குழாயில் கிடைக்கும். தொடர்பு கிடைத்தால் குழாயில் மணி அடிக்கும் சப்தம் கேட்கும் — எந்த நபர் நமக்கு வேண்டுமோ அவர் டெலிபோனில் "கிரிங் கிரிங்" என்று மணி அடிக்கும்.

எக்ஸ்சேஞ்ஜ் கருவிகள் மிகவும் நுட்ப மானவை. இவைகள் எப்படி வேலை செய்கின்றன, அவைகளை எப்படி அவ்வப் போது சரிபார்க்கிறார்கள் என்று சொன்ன பொழுது எனக்குத் தலைவலியே உண்டாகி விட்டது. ஆனால் இதைப்பற்றிச் சர்வ சகஜ மாகச் சொன்ன ஸ்ரீ மாதுருக்கு இது கிள்ளுக் கீரை போன்று தோன்றியிருக்கவேண்டும். ஸ்ரீ மாதுர், சுமார் 28 வயதுள்ளவர், அஸிஸ்டண்ட் என்ஜினீயர் என்று நம்பவே முடியவில்லை. எக்ஸ்சேன்ஜில் பல SELECTOR களைப் பழுது பார்த்துக்கொண்டும் "லயன்" தவறுகளைக் கண் காணித்துக் கொண்டும் இருந்தவர்கள் யாவரும் இளைஞர்கள். கருமமே கண்ணயினர் என்று இருந்த இவர்கள் சர்க்கார் காரியாலயங்களில் உள்ள உல்லாச ஊழியர்களுக்கு வழி காட்டிகளாக இருக்கலாம்.

டெலிபோன் உபயோகிப்பவர்களுக்குப் பல இடைஞ்சல்கள் ஏற்படும். ஒரு நம்பர் சமயத்தில் கிடைக்கவே கிடைக்காது. டெலிபோன் அகராதியில் உள்ள நம்பர் பழைய நம்பராக இருக்கலாம். இவைகளைப்பற்றிய

தகவல்கள் கொடுக்கப் பெண் உதவியாளர் கள் (OPERATORS) இருக்கிறார்கள். இரு ஆசாமிகள் பேசிக்கொண்டிருந்தால் இவர் கள் அதை அறிந்துகொள்ள விசேஷ வசதி கள் உள்ளன. தொடர்பு கிடைக்கவில்லை என்ற புகார்களை இந்தப் பெண்கள் உட் கார்ந்த இடத்திலிருந்தே என்ன குறை என்று கண்டுபிடிக்கலாம்.

ஒவ்வொரு தொடர்புக்கும் ஒரு 'கூப்பாடு' (CALL) என்று பெயர். இவைகள் ஒவ் வொரு டெலிபோனுக்கும் வைக்கப்பட்டி ருக்கும் மீட்டரில் பதிவாகும். மீட்டர் தப் பாக வேலை செய்கிறது என்றால் அதைக் கண் காணிக்க வசதியிருக்கிறது. ஒருவாரம் அதே நம்பருக்கு இரண்டாவது மீட்டர் பொருத்தி அதை ஒரு (OPERATOR) கவனிப்பார். இரண்டு மீட்டர் நம்பர்களும் ஒத்துக்கொண் டால் மீட்டர் சரியாக வேலை செய்கிறது என்று அர்த்தம். 12 கூப்பாடுகளுக்குக் கிர யம் ஒரு ரூபாய்.

டெலிபோன் வைத்துக் கொண்டிருக் கிறவர்களின் ஒவ்வொரு வார்த்தையையும் டெலிபொன் காரியாலயம் கேட்கலாம். டெலிபோனைத் துர் உபயோகம் செய்கிறவர் களைக் கண்காணிக்க மட்டுமே இந்த வழியைக் கடைப் பிடிக்கிறார்கள்.



ஒவ்வொரு டெலிபோனுக்கு எக்ஸ்சேன்ஜில் கருவிகள் உண்டு. அவைகளை (சுமார் 7,000) மாதத்திற்கு ஒருதரமாவது கழற்றி, சுத்தம்செய்து மாட்டவேண்டும்

"விசாரணை" "புகார்" முதலியவைகளைக் கவனிக்கும் பெண் ஊழியர்கள்



சில காலம் மணி என்ன என்று கேட்க, செலவு இல்லாமல் இருந்தது. அப்பொழுது கடிகாரத்தைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டு பெண்கள் மணியை ஒவ்வொரு விநாடியும் அலற வேண்டியிருந்தது. இந்த மரண வேதனையைத் தவிர்க்க மணி அறியச் செய்யும் கூப்பாட்டைக்கூட மீட்டரில் சேர்த்து விட்டார்கள்.

டெலிபோன் காரியாலத்தில் சர்க்கார் மின்சாரத்தைப் பகலில் உபயோகிக்கிறார் கள். இரவில் அவர்களுடைய சொந்த மின்சார இயக்கியை (GENERATOR) உபயோகித்துக் கொள்கிறார்கள். இதனால் தான் மின்சாரம் நின்றுவிட்டால் கூட டெலிபோன் வேலை செய்கிறது. டெலிபோன் மணி அடிக்கவும், பலவித "குரல்"கள் உண் டாக்கவும் மின்சாரம் உபயோகப்படுகிறது.

இவ்வளவு சிக்கல்கள் கொண்ட சாதன மார்க்கத்தை இந்திய ஊழியர்கள் திறம்பட நடத்துகிறார்கள். இந்தியாவில் தற்சமயம் பங்களூரில் டெலிபோன் கருவிகளைத் தயாரிக் கிறார்கள். ஆனால் தானே இயக்கிக் கொள் ளும் எக்ஸ்சேன்ஜ் தயார் செய்யப்படவில்லை. ஆனால் அது செய்யவேண்டிய யந்திர சாத னங்கள் இந்தியாவில் தயாரிக்கப்பட்டால் இந்திய இளைஞர்கள் அதைத் திறமையாக நடத்துவார்கள் என்பதில் சந்தேகம் இல்லை.




திங்கட்கிழமை காலையில் சந்திரசேகர முதலியார் சீக்கிரமே எழுந்திருந்து விட்டார். ஆபீஸ் கடிதங்கள் சிலவற்றைப் பார்த்துவிட்டுக் கொல்லைப்பக்கம் வந்தார்.

வானம் மப்பும் மந்தாரமுமாயிருந்தது. சூரியன் குளிரில் போர்வை போர்த்திக் கொண்டவன் போல் முகத்தை வெளியே காட்டப் பயந்து இழுத்து போர்த்தி மூடிக்கொண்டான்.

முதலியார் இன்றைக்கும் மழை நாள் தான் போலிருக்கிறது என்று சொல்லிக்கொண்டே தோட்டத்திற்கு வந்தார்.

அங்கே சந்திரா ஆசையாக வளர்க்கும் செடிகளின் பாத்திகளைப் பார்வையிட்டார். அவளுக்கு ரோஜா என்றாலே ஆசை அதிகம். பட்டன் ரோஜா என்று ஒரு வகை. சிறிய பூக்களாகப் பூக்கும். அவைகளில் அழகாக ஒரு பாத்தி தயாராக்கி இருந்தாள். அந்தப் பூக்கள் அழகாகப் பூக்க ஆரம்பித்திருந்தன. மல்லிகை, வாடாமல்லிகை, அந்திமந்தாரை, கனகாம்பரம், முதலிய பலவகைச் செடிகளின் பாத்திகள், வரிசைகள் இவைகள் எல்லாம் பார்த்தார். சந்திராவின் ஈடுபாடும், கைத்திறனும் கலையுணர்ச்சியும் அவரை ஒரு குதூகல மடையச்செய்தன.

அதைத் தாண்டி கத்தரி, வெண்டைச் செடிகளின் பாத்திகள் இருந்தன. எல்லாம் அவள் தயார் செய்தவைதான்.

பார்த்துக்கொண்டே இருக்கும்போது வேலைக்காரனும் ஒரு மண் வெட்டியுடன் வந்தான். பாத்திகளில் தேங்கியிருந்த தண்ணீரை வெட்டி விட அவன் தயார் செய்தான்.

முதலியாரைப் பார்த்ததும் "ஏண்டா பொன்னா" குழந்தை போன வாரம் புதிதாக எலுமிச்சங் கன்றுகள் வைத்தாளே அவை வளர்கின்றனவா?" என்று கேட்டார்.

'அம்மணி வைத்தால் ஒன்றும் வீணாவதில்லை!' என்றான்.

பெருமிதம் அடைந்த அவள் தந்தை திரும்பிப் பார்த்தபோது ருக்குமணி அண்ணியும் வந்து சேர்ந்தாள் இடுப்பில் பெரிய குடத்துடன்.

'என்ன பாத்திக்கு நீர் ஊற்றவா?' என்றார் சிரித்துக்கொண்டே!

"ஆமாம், சந்திரா பார்த்துக் கொள்ளுங்கள் என்று சொல்லிவிட்டுப் போனதற்கு இன்று கொல்லையைப் பார்க்க வந்திருக்கிறீர்களல்லவா, உங்கள் கண்ணுக்கு அப்படித்தான் படும்."

'கோபித்துக்கொள்ளாதே அம்மா. அது தான் நீயும் பொன்னனும் ஒழுங்காகப் பார்த்துக் கொள்கிறீர்களே!'

பிறகு சந்திராவைப் பற்றிய பேச்சுத் தொடர்ந்தது. பொன்னன் கிணற்றங்கரைக்குப்போய் விட்டான்.

'ஆமாம் சும்மா இருக்கிறீர்களே; அவளுக்கு இந்தத் தையிலாவது கலியாணம் செய்ய வேண்டாமா?' என்றாள் ருக்குமணி அண்ணி.

"நீ என்ன பழம் காலம் மாதிரி பேசுகிறாயே! சந்திரா குழந்தையா, மரப்பாச்சியா, நாம் கலியாணம் செய்து விளையாட்டுப் பார்க்க!"

"அது என்ன அப்படிச் சொல்கிறீர்கள்! நம் சந்திரா என்ன அப்படி புதுக்காலத்துப் பெண்ணாகவா இருக்கிறாள்?"

"அதனால் என்ன? அவள் மரியாதை தெரிந்தவள். அதனால்தான் நாமும் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும்."

'அது இருக்கட்டும். அவள் இப்பொழுதெல்லாம் மாறியே வருகிறாளே, கவனித்தீர்களோ?"

"கவனித்தேன். எல்லாம் ரெங்கநாதன் தான் காரணம். இருவரும் பேசிக்கொள்ளாமற் போனாலும் அவன் அபிப்பிராயத்தை எல்லாம் சுந்தரேசன் மூலம் தெரிந்து கொண்டு அப்படியே நிறைவேற்றுகிறாள். இந்த ஒரு வருஷத்துக்குள் அவள் குணம் அபாரமாக மாறிவிட்டது."

"அதனால் தான் சொல்கிறேன்."

அவர் அதைக் கவனிக்காமல் மேலே சொன்னார்.

"நான் கூட நினைத்தேன் பையனுக்கு ட்யூஷன் எதற்கு என்று? எவ்வளவு நல்லதாய்ப்போயிற்று? ரெங்கநாதன் வீட்டிற்கு வர ஆரம்பித்தது? வீடே அல்லவா திருந்தி அமைகிறது!"

"அதனால் தான் சொல்கிறேன். சந்திராவுக்கு இது எப்படிப்பட்ட வயது. ஒரு கொழுகொம்பைத் தாவிப் பிடித்து அதன் மேல் ஏறும் சமயம்..."

"அதனால்...?

"ஆமாம் விவரித்துச் சொல்ல வேண்டும்? உங்களுக்குத் தெரியாது? எல்லாம் மறந்து விட்டது போலும்?"

'உனக்கு எட்டு வயதில் அல்லவா கலியாணம்!'

"அதனால் என்ன பதினெட்டு வயதுக்குத் தானே .."

"ஆமாம் ஆமாம். அது வரையில் நீ படுத்திய பாடெல்லாம் ஞாபகம் இருக்கிறது. அம்மா! என்ன ஓட்டம் ஓடுவாய்!" என்று சொல்லிக் கொண்டே முதலியார் கொஞ்சம் நெருங்கிவந்தார்.

ருக்குமணி நடந்து கொண்டே,

"ஏதாவது சிக்கல் ஏற்படு முன் செய்ய வேண்டிய வேலையைச் செய்து முடிக்க வேண்டும்..." என்றாள்.

"சிக்கல் எல்லாம் நாம் அறிந்து கொள்ளாமல் வைக்கும் பெயர். மிக நல்லதைக்கூட நாம் சிக்கல் என்னலாம்...!

அவள் வெடுக்கென்று திரும்பினாள்:

முன்னமேயே ஒரு தடவை சொன்னேன். நல்ல வேளையாகச் சந்திரா அவரிடம் படிக்க முடியாது என்று சொல்லிவிட்டாள். ஆனாலும் என் பயம் தெளியக் காரணம் ஏற்படவில்லை. ஆகையினால்...!"

"சரி. நீ சொல்கிறபடியே செய்வோம். ஏதாவது வரன் இருக்கிறதா?"

"தேட வேண்டுமா என்ன? என் அண்ணன் மகன் நடராஜனுக்கென்ன?"

"நடராஜனுக்கென்ன? ஒன்றுமில்லை. சந்திராவும் அங்கிருந்து தானே வருகிறாள். கேளேன். அவள் சம்மதித்தால் நாம் உடனே ஏற்பாடு செய்துவிடுவோம்."

'என்ன அப்பா என்னைப்பற்றியே பேசுகிறீர்கள்' என்றாள் சந்திரா. பிரயாண உடை கலைந்து பறக்கும் தலை மயிர்; களைப்படைந்த முகத்தில் மின்வெட்டும் இளநகை துவண்ட நடை, உதட்டின் மேலே அரும்பிய வியர்வைத் துளி. பாற்கடல் கடைந்த சமயம் வெளியேறிய லக்ஷ்மி அப்படித்தான் இருந்திருப்பாள்!

'வா சந்திரீ!' என்றனர் தாயும் தந்தையும்.

உள்ளே போகத் தயாராயினர். ஆனால் சந்திரா தோட்டத்தைப் பார்க்க முற்பட்டாள்.

"எல்லாம் ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொண்டிருக்கிறாள் உன் அம்மா. வா, களைப்புடன், இப்பொழுது என்ன? பிறகு பார்த்துக் கொள்ளலாம்!"

அவசரத்துடன் அவசரமாக சில ரோஜாப் பூக்களையும் மல்லிகையையும் பறித்துக்கொண்டு, 'கத்தரி, வெண்டை எல்லாம் காய்க்க ஆரம்பித்து விட்டனவா அம்மா' என்றாள்.

"எல்லாம் நன்றாய்க் காய்க்கிறது. பொன்னன் 'குழந்தை கை வளரும் கை' என்று அப்படியே பொருமிப்போகிறான்!"

"நார்த்தங் கண்ணுகள்..."

"எல்லாம் நன்றாய்..."

"ரெங்கநாத ஸார்...என்று ஆரம்பித்தவள், இங்கே வந்து பார்த்தாரா என்று முடிக்காமல், 'ஆமாம் அப்பா! ரெங்கநாத ஸார் அம்மா செத்து விட்டார்களாமே, என்றாள். 'ஏன் அப்பா எனக்கு முன்னமேயே கடிதமாவது எழுதக்கூடாதா?"

"நீ வந்து என்ன செய்யப்போகிறாய் அம்மா!" என்றார் தந்தை.

சந்திரா விடுகிறவளாயில்லை.

"அவருக்குப் பாவம் இனிமேல் யாரம்மா சமைத்துப் போடுவார்கள்." என்று கேட்டாள் தாயாரை.

"ரொம்ப கலலைப்படுகிறாரா அப்பா? அவருக்கு அம்மாவிடம் அதிக பக்தி" என்றாள் தந்தையிடம்.

"அம்மாவும் அப்படித்தான். பக்திக்கு ஏற்றவர்கள் தான்!"

"சரி அம்மா, நான் சீக்கிரம் இதோ வந்து விடுகிறேன்." என்று சொல்லிக்கொண்டே வாசல் பக்கம் ஓடினாள்.

"அம்மா சந்திரீ வா. காபியாவது சாப்பிட்டுப் போகலாம்," என்று அலறினாள்.

சந்திரா நிற்கவில்லை. சுந்தரேசனை, "வாடா ஸார் வீட்டுக்குப் போகலாம்!" என்றாள். சுந்தரேசனுடன் கிளம்பி விட்டாள்.

"அடி அசடே. இது இப்பொழுது போகிறதே. ரயிலில் வந்ததும் வராததுமாய்!" என்றாள் தாய்.

"அட, இன்று அந்த வீட்டில் பத்து ஆயிற்றே, ஏதாவது செய்து கொண்டிருக்கிறார்களோ என்னவோ!" என்று பயப்பட்டார் தந்தை.

"பார்த்தீர்களா, பார்ப்பவர்கள் என்ன நினைப் பார்கள்?" என்றாள் தாய். கவலைக்குறி அவள் முகபாவத்தை அள்ளி மறைத்துக் கொண்டது.

"பார்ப்பது நினைப்பது சொல்வதெல்லாம் இருக்கட்டும். சந்திரா பிசகு ஒன்றும் செய்யமாட்டாள். நீ சும்மாஇரு" என்று சொல்லி விட்டுப்பொன்னனைக்கூப்பிட்டு "ஏய் டிரைவரை வண்டியை எடுத்துக் கொண்டு ரெங்கநாதன் வீட்டுக்குப் போகச் சொல்!" என்றார்.

"டிரைவர் வீட்டுக்குப் போய் விட்டாரே எஜமான்!"

"அதற்குள்ளேயா? சரி. நீ தான் மாட்டு வண்டியைப் பூட்டிக்கொண்டு போ!" என்று உத்தரவு கொடுத்து ஸ்நானம் செய்யச் செல்ல ஆரம்பித்தார்.

சந்திரா அங்கே சென்றாள். வாசலில் சென்றதும் வீட்டுத்திண்ணையில் பலர் உட்கார்ந்திருந்தனர். உள்ளே ரெங்கநாதன் ஏதோ வைதிக கர்மாவில் ஈடுபட்டிருந்தான்.

முதலில் இவளைப் பார்த்தவர்கள் இவள் எந்த ஜாதிப் பெண் என்று தீர்மானிக்க இயலாமல் சற்று நேரம் சும்மா இருந்தனர்.

சந்திரா, "ஐயா இருக்கிறாரா, எங்கே?" என்றதும் அவர்கள் புரிந்து கொண்டனர்.

சந்திரா கழுத்தில் தங்கச் சங்கலியும், காதில் வைரத்தோடும் இல்லாதுபோனால் அவள் உடுத்தியிருந்த நூல் துணிக்கு அவர்கள் 'ஓடு' என்றே விரட்டியிருப்பார்கள். முகத்தில் லக்ஷ்மிகளையிடுவதைப் பார்த்த அவர்கள் மரியாதையாய், 'ஐயா உள்ளே வைதீககர்மா செய்கிறார்கள். மத்தியானம் பார்க்கலாம்'. என்றார்கள்.

பிறகு தான் அவளுக்கு அன்று "பத்து" என்ற ஞாபகம் வந்தது பிராமணர் வீட்டில் பத்துக்கொட்டுவது ஒரு பெரிய வைதீககர்மம்.

"என்ன செய்வது" என்று யோசிக்கும் சந்திரா சற்றுத் தயங்கினாள்.

சுந்தரேசன் 'அக்கா வா' என்று அழைத்தான்.

அதற்குள் ரெங்கநாதனே வந்து விட்டான்.

"பாதியில் வந்துவிட்டாயே. இவர்களுடன் பேசினால் மறுபடியும் அல்லவா ஆரம்பிக்க வேண்டும்!" என்றார்கள் சிலர்.

ரெங்கநாதன் அவர்களை ஒரு தயவுடன் பார்த்தான் அசட்டுத்தனத்தால் விரலைச் சுட்டுக்கொண்டகுழந்தையைப் பார்ப்பதுபோல. "பிறகு அதற்கென்ன ஆரம்பிக்கிறோம்!" என்று சொல்லிவிட்டு, "நீ எப்பொழுது வந்தாய் சந்திரா?"

இந்தச்சம்பாஷணையைக்கேட்டுக்கொண்டிருந்த சந்திரா "வா சுந்தரேசா. ஸாரை நாளைக்கு வந்து பார்த்துக்கொள்ளலாம்" என்று சொல்லிவிட்டு வெளியே கிளம்பினாள்.

எதிரே வந்த வண்டியில் அவள் ஏறி உட்காருவதைக் கவனித்தான். பிறகு சுந்தரேசன் ஏறினான். வண்டி திரும்பிற்று. போயிற்று. சந்திரா இந்தப் பக்கம் திரும்பவேயில்லை.

ரெங்கநாதன் நின்றான். பார்த்தான். கண்களில் நீர் பெருகிப் பார்வையை மறைக்கும்வரை நின்றான். இவளும் தன் தாய்க்கு ஒரு பெண்ணல்லவா! என்ற எண்ணம் அவன் அறிவை எழுப்பி அவன் உள்ளத்தைத் துளைத்தது.

பிறகு உள்ளே போய்விட்டான்.

வாசலில் இருந்தவர்கள் பேசிக்கொண்டார்கள். ஒருவர் 'அவள் முதலியார் மகள். ஊருக்குப் போயிருந்தாள். இன்று தான் வந்தாள் போலும்!

"வந்தவள் உடனே வந்திருக்கிறாள்" இவனைப் பார்க்க!"

"இவனிடம் படித்தாளோ!"



"படிப்பானேன்? முதலியாருக்கு ரெங்கநாதனும் ஒரு குழந்தை தானே!"

"சரிதான், ஜாதி என்னவாயிருந்தால் என்ன? கனிவைப்பார்..." என்ருர் மனித உணர்ச்சிகளில் நம்பிக்கை உள்ள ஒருவர்.

"அந்தப்பெண் பழக்கத்தைப்பார், நல்ல சிக்ஷை, அவனிடம் பேசக்கூடாது என்று நாம் சொன்னதும் பேசாமல் போய்விட்டதே! எல்லாம் நல்ல இடத்துப்பழக்கம் நல்ல இடத்துப் பழக்கம் தான்!"

இந்தப் பேச்செல்லாம் சந்திரா காதில் விழ வில்லை. அவள் இன்று போனது பிசகு என்ற எண்ணத்தைக்கூட எழும்பவிடவில்லை. ரெங்க நாதன் இனி யார் ஆதரவில் வாழ்வார்? என்று அவள் உள்ளம் அழுதது.

இந்தப் பெண்களுக்குத் தாயுள்ளத்தை ஈசுவரன் சிருஷ்டித்தவுடனேயே கொடுத்து விடுவான் போலிருக்கிறது! அப்படித்தான் சொல்கிருர்கள் பெரியவர்களும்.

## அவசியமில்லாத போட்டி

ரெங்கநாதன் கொஞ்சம் கொஞ்சமாகத் தாய் செத்த வருத்தத்தை மறந்து வந்தான். பள்ளிக்கூடத்தில் வேலையைச் செவ்வனே செய்து வந்தான். முதலியார் வீட்டிலும் இரவு ட்யூஷன் வேலை ஒழுங்காக நடக்க ஆரம்பித்தது.

சந்திரா திடீர் என்று வீட்டில் ஒரு பிராமண சமையற்காரனை ஏற்பாடு செய்யச் சொல்லி நச்சரித்தாள். முதலியார் ஏன் என்று கேட்டார்.

ஸாரையும் நம் வீட்டிலேயே சாப்பிடச் சொல்லலாம்! என்ருள்.

"பிராமண சமையற்காரன் இல்லாதால் தான் அவர் இங்கே சாப்பிடவில்லை என்று எண்ணுகிருயோ?"

"இல்லை, எனக்குத் தெரியும். என்ருலும் நாம் அநாவசியமாக அவர் செய்து வழக்கமில்லாத ஒரு வேலையைச் செய்யச் சொல்லி நிர்ப்பந்திப் பானேன்!"

"நீ கேட்டுப்பார். அவர் சம்மதித்தால் ஏற்பாடு செய்து விடுவோம்!" என்ருர்.

தாய் செத்த ரெங்கநாதனிடம் சந்திரா சற்று நெருங்கிப் பழக ஆரம்பித்திருந்தாள்.

"ஸார், நீங்கள் சமையல் செய்து சாப்பிடாதீர் கள். உடம்பு கெட்டு விடும்!" என்பாள்.

அவன் சிரித்துக்கொண்டே, "சந்திரா, நீ என் மேல் உள்ள பரிவால் சொல்லுகிருய். சமைத்து உடல் கெடுவதாயிருந்தால் பெண்கள் இவ்வளவு அழகாய் இருக்க முடியுமா?" என்பான்.

"நேரம் வேண்டாமா?" என்பாள்.

"உபாத்தியாயருக்கு நேரம் குறைவா!"

அவளுக்கு வேறு ஒரு யுக்தியும் தோன்ருது "சரி ஒரு மாதம் போனுல் தெரியும்!" என்று சொல்லிவிட்டுப் போய் விடுவாள்.

மாலையில் அவன் வரும்பொது ஏதாவது பழங் கள் தயாராக வைத்திருப்பாள். திரும்பிப் போகும்போது சுண்டக் காய்ச்சின பசும் பாலைக் கொடுப்பாள்.

இது புள்ளிப் பசும்பால்! என்பாள்.

அது தான் பாலும் புள்ளி புள்ளியாயிருக்கிறது என்று வாங்கிச் சாப்பிடுவான்.

அண்ணியும் முதலியாரும் இதைக் கவனித்து வந்தனர். அண்ணி குரு பக்தி என்ருள். தந்தை ரெங்கநாதனும் நம் வீட்டு குழந்தைதானே! என்ருர். ஆனுல் அவளுக்குத்தெரியும் சந்திரா அழகில் மாட்டிக்கொள்கிருள்! என்று. விதிவிட்ட வழி என்று எண்ணிக் கவனித்து வந்தாள். ரெங்கநாதனை விரட்ட அந்த வீட்டுக் கைக் குழந்தைக்குக்கூட மனம் வராது!

அன்று சந்திரா சொன்னுள்:

நாளை முதல் எங்கள் வீட்டில் பிராமண சமையற்காரர் ஏற்பாடு செய்கிரோம்.

"ஏன் எதற்காக? அவர்கள் கையால் சாப்பிட் டால் மோக்ஷம் என்று சொன்னுர்களோ?"

"இல்லை...நாளை முதல் நீங்கள் எங்கள் வீட்டி லேயே தங்கி விடுங்கள்!"

அவள் குரலில் வணக்கம் பணிந்து நின்றது. நம்பிக்கை எதிர்பார்த்தது!

"அசடே, உங்கள் வீட்டில் பிராமண சமையற் காரர் இல்லை என்ரு சாப்பிடவில்லை நான்? என் கொள்கை தெரியாதா உனக்கு!" என்ருன்.

"பிடிவாதம் அதிகம் உங்களுக்கு!" என்ருள் சந்திரா. அவள் கண்கள் கலங்கின.

அசடு என்று முணு முணுத்தது ரெங்கநாதன் வாய்!

* * *

தீபாவளி நெருங்கி வந்தது. சந்திரா அப்பா விடம் சொல்லிமாமா குடும்பத்தை இங்கேவர வழையுங்கள் என்ருள். அவளுக்குத் துணை யாரும் இல்லாமல் ரெங்கநாதன் இருக்கும் நிலையில் தீபாவளி கொண்டாட முடியாது போலிருந்தது. கொண்டாடாமலும் இருக்கமுடியாது. ரெங்க நாதன் சம்மதிக்கமாட்டார்.

மாமாவுக்கு விடுத்த அழைப்புக்குப் பதில் நடராஜன் வந்து சேர்ந்தான். ருக்குமணிக்கு அபார ஆனந்தம். முதலியாருக்கு ருக்குமணி எண்ணத்தால் நன்மை விளையும் என்ற எண்ணம் இல்லை. அது நடக்க அவர் சம்மதிக்கமாட்டார். ஆனுலும் சந்திரா மனது மாறினுல் சரி என்ற எண்ணததுடன் அவனை வரவேற்று விட்டார்.

நடராஜன் வந்து சேர்ந்தான்.

வாரிவிட்ட இருப்பு; நறுக்கு மீசை. சினிமாக்களில் தோன்றும் 'வில்லன்' தோற்றம். வாய் விட்டு எடுக்காத சுருட்டு. கலைப்பு மடியாத ஸூட்டு, பவுடர் டப்பா, சென்டு புட்டிகள், சிகரெட்டு கேசுகள் — இவ்வளவுடன் வந்து இறங்கினான் நடராஜன்.

வந்தவுடனேயே சந்திரா எங்கே என்றான். சந்திராவுக்குத் தூக்கி வாரிப்போட்டது.

என்ன அதிகாரம், என்ன முரட்டுக்குரல்!

'எதற்குக் கூப்பிட்டீர்கள்' என்றாள் சந்திரா.

"இல்லை, அம்மா பிரமாதமாகப் புகழ்ந்தாள் உன்னைப்பற்றி..."

'பொய்யா மெய்யா என்று பார்த்தீர்களாக்கும்.'

"ஆம், உன்னிடம் அம்மா சொன்னது சரியா என்று நீயும் பார்த்து விடலாம் அல்லவா. அதற்கும் சந்தர்ப்பம் கொடுக்கத்தான்..."

"என்ன? பார்த்தால் உங்களைப் பிடித்துவிடும் என்று சொன்னதையா?'

"ஆம்......"

"பிடித்து விட்டதா......"

'ஓ, பிடித்துவிட்டது.'

"என்ன ஓ!"

"இலி......பயம்......!"

அதற்குள் அண்ணி அங்கே வந்தாள், "என்னடி அது! கொஞ்சம் கூட மரியாதை இல்லாமல் அவனுடன் கிண்டல்செய்யக் கிளம்பிவிட்டாயா!"

"கோபித்துக் கொள்ளாதீர்கள், அத்தை. எனக்கு இப்படிப்பட்ட பெண்தான் பிடிக்கும். பயந்து கொண்டு மூலையில் முடங்கும் பெண் என்றால் எனக்குக் கொஞ்சம் கூட ஆகாது" என்றான்.

சந்திரா முதலில் அதிக சிக்கல் ஏற்படும் என்று எதிர்பார்க்கவில்லை. ஆனால் நடராஜன் வந்தது முதல் அவன் ஒவ்வொரு சொல்லும் அவளை ரெங்காதனிடம் நெருக்கித் தள்ளிற்று. ஒவ்வொரு வார்த்தையும் ரெங்காதனிடம் அவளுக்குள்ள அன்பை வளர்த்தது.

ஆனால் வெளிக்கு மிகவும் ஜாக்கிரதையாக நடந்து வந்தாள். வலிய வந்து அவமானம் செய்த போதிலும் நடராஜனிடம் அவள் மரியாதையாகவே நடந்தாள். அவனுக்கெதிரே ரெங்காதனிடம் அதிகம் பேசுவதில்லை. ரெங்காதனும் எங்கே அடிக்கடி வருகிறான்?

ஆனாலும் நடராஜன் வந்த பிறகு வீட்டுக்கு அதிக பத்திரிகைகள் வர ஆரம்பித்தன. அவன் பெண்கள் மனதை வசியம் பண்ணத் தெரிந்தவனானதால் சந்திரா மனதுக்குப் பிடித்த விஷயங்களைத் தெரிந்து கொண்டான். தர்ம சக்கரம், ராமகிருஷ்ண விஜயம், அருட் பெருஞ் சோதி போன்ற பத்திரிகைகளை வாங்கி வந்து போட்டான். கீதை, விவேகானந்தர் சொற்பொழிவுகள் முதலிய புத்தகங்களும் வந்தன.

அதற்கு ஆசைப்பட்டு ரெங்காதன் ஓழிந்த போது ஒரு முறை வர ஆரம்பித்தான். உபாத்தியாயர் என்ற முறையில் ரெங்காதனிடம் சந்திரா அன்பு காட்டுகிறாள் என்று எண்ணிய நடராஜன் அவனிடம் மரியாதையாக நடந்து கொண்டான். அதனால் அவனுக்கும் வருவதில் ஒன்றும் சிரமம் ஏற்படவில்லை. ரெங்காதன் இன்னொரு விஷயமும் கவனித்தான். சந்திரா நடராஜனிடம் சகஜமாகப் பழகினாள். சமயம் வந்த போது மரியாதை பிறழாமல் மட்டம் தட்டினாள். அவனும் இதை ரசித்தான். ரெங்காதன் மனதில் ஏற்பட்டிருந்த ஒரு சந்தேகம் நீங்கவே அவன் தாராளமாய் வந்து போக ஆரம்பித்தான்.

தீபாவளி அன்று முதலியார் வீட்டுக்கென்று நல்ல துணிமணிகள் எடுத்திருந்தார். நடராஜனுக்கு நல்ல சூட் ஒன்று தைக்கப்பட்டது. அவன் சுந்தரேசனுக்கும் சூட் தைக்க வேண்டும் என்று பிடிவாதம் செய்தான். சந்திரா மாமா கொடுத்ததைத்தான் கட்டிக்கொள்வேன் என்றாள். நடராஜன் கத்தரிப்பூ கலரில் ஒரு பட்டுச் சிற்றாடை நல்ல ஜரிகை வேலைப்பாடமைந்ததாக வாங்கி விட்டான்.

சந்திரா 'வேண்டாம் இந்தத் தடவை பட்டு' என்றாள். நடராஜன் "ஏன்" என்றான்?

"ரெங்காதனிடம் பழகியும் கூடவா உனக்கு இந்தப் படாடோப ஆசை போகவில்லை?"

"அவர் ஒன்றும் சொல்லவில்லையே?"

"அவர் சொல்ல வேண்டுமா?"

"ஏன் நீ அவர் சொன்னால்தான் கேட்பாயோ?

"சரி அவரை விட்டே சொல்லச் சொல்கிறேன்."

அன்று நடராஜன் ரெங்காதன் வீட்டுக்குச் சென்றான்.

"பேச்சை வளர்த்திவிட்டு,' சந்திரா உங்களிடம் வாசித்தவளா?" என்றான்.

"இல்லை, அவள் நேரடியாக என்னிடம் வாசித்ததில்லை. ஏன் எதற்குக் கேட்கிறீர்கள்?'

"இல்லை, அவள் நீங்கள் சொன்னால்தான் பட்டுப்புடவை கட்டிக்கொள்வேன் என்கிறாள். உங்களிடம் அவ்வளவு பக்தி வைத்திருக்கிறாளே என்று கேட்டேன்."

"பழக்கம் தான் காரணம். நான் சொல்லுகிறேன்!"

"கட்டாயம் சொல்லுங்கள்!" என்று சொன்ன அவனுடைய குரல் சரியாயில்லை. ரெங்காதன் கவனித்தான்; ஆனால் லட்சியம் செய்யவில்லை.

வீட்டுக்கு வந்து சும்மா இருந்து விட்டான்.

தீபாவளி ஸ்நானம் ஆனவுடன் தான் வாங்கிய பட்டாடையை எடுத்து வந்து:

"சந்திரா இதைக் கட்டிக்கொள்!" என்றான்.

குரலில் தொனித்த அதிகாரத்தைக் கண்ட சந்திரா துடித்தாள். அவள் ரெங்கநாதன் சொல்லியதற்காகக் கட்டிக்கொள்ளத் தயாராயிருந்தாள். ஆனால் இந்த அதிகாரத்தைக் கேட்டவுடன், 'முடியாது மாமா கொடுத்ததைத்தான் கட்டிக் கொள்வேன்' என்றாள்.

எடுத்த எடுப்பிலேயே, நடராஜன் 'எல்லாம் தெரியும் உன் எண்ணம் நடவடிக்கை எல்லாம்' நான் சொல்லிக்கேட்க முடியாது போனால் என்னுடன் எப்படி வாழ்வதாம்! என்றான்.

சண்டை முற்றிற்று.

"என்ன? எல்லை மீறிப்போகிறுப்போல் இருக்கிறது. என்ன வாழ்க்கைப் பிணைப்பு ஏற்பட்டா விட்டது!" என்றாள் சந்திரா.

"பின் என்ன? தாலி கட்ட வேண்டியது தான் பாக்கி. தாலி கட்டினால் தானா? மனதால் ஒரு முறை எண்ணினால் போதாதா?"

சந்திரா மேலே பேசுவதா வேண்டாமா என்று எண்ணினாள். அவள் முகம் சிவந்ததையும் உதடு துடிப்பதையும் கண்டு தாய் பயந்தாள்.

"சும்மா இரு நடராஜா. இப்படியா ஒரு பெண்ணிடம் பேசுவது! இந்த வருஷம் மாமா கொடுப்பதையே கட்டிக்கொள்ளட்டும். அடுத்த வருஷம்...!"

முதலியாரும் பேசாமல் நூல் புடவையை எடுத்துக்கொடுக்கவே நடராஜன் அடங்கி விட்டான்.

அன்று வழக்கம் போல் ரெங்கநாதன் மாலையில் வந்தான், தீபாவளி விசாரித்து விட்டுப் பத்திரிகை படித்துப் போகலாம் என்று.

வாசலில் நடராஜன் நின்றிருந்தான்.

"வீட்டில் ஒருவரும் இல்லை எல்லோரும் சினிமாவுக்குப் போயிருக்கிறார்கள்!" என்றான். சரி, என்று திரும்பிய சமயம் 'சந்திரா' ஏய் சுந்தரேசா; உங்கள் ஸார் வந்துவிட்டுப் போகிறார் கூப்பிடு. அப்பா சுந்தரேசனுடைய உபாத்தியாயர் வந்துவிட்டுப்போகிறார் அப்பா! என்றாள்.

திரும்பிய ரெங்கநாதன் 'நீங்கள் எல்லாம் சினிமாவுக்குப் போய்விட்டீர்கள்! என்றார் நடராஜன்' என்றான்.

சந்திரா நடராஜனைப் பார்த்தாள். ஒரு விழி விழித்துவிட்டு, 'ஆமாம் வெளியே போகத்தயார் செய்தோம். ஆனால் சினிமாவுக்கல்ல!' என்றாள். நடராஜன் ஏதோ சொல்ல ஆரம்பித்தான். ரெங்கநாதன் மரியாதையாக 'சரி நீங்கள் தயார் செய்யுங்கள். நான் பிறகு வருகிறேன்' என்று சொல்லிவிட்டான்.

"சரி $7\frac{1}{2}$– மணிக்கு வாருங்கள்"! என்றாள்.

பிறகு திரும்பி நடராஜனை ஒரு மாதிரி பார்த்து விட்டு அவனுடன் ஒன்றும் சொல்லாமல் உள்ளே போனாள். எதிரே வந்த தந்தை எங்கே யம்மா ரெங்கநாதன் என்றார்.

'அவர் $7\frac{1}{2}$–மணிக்கு வருகிறாராம் அதைச் சொல்லத் தான் வந்தாராம்' என்றாள்.

மாலை ரெங்கநாதன் வந்ததும் சந்திரா ஜாக்கிரதையாய் நின்று வரவேற்றாள். 'மன்னிக்க வேண்டும்' என்றாள்.

'எதற்கு?'

'வாசலிலிருந்தே உங்களைத் திருப்பிவிட்டேன்!

"நான் செய்த குற்றத்துக்கு இது உறை போடக்கூடக் காணாதே!"

"என்னக் குற்றம்?"

"நீ பேசியாவது அனுப்பினாய்! நான் அன்று ஓடி வந்த உன்னைப் பேசாமல் கூட அனுப்பினேனே!"

"அன்று நான் வந்தது பிசகு!"

"இன்று நானும் அப்படியே தான்."

சந்திரா வெலவெலத்து நின்றாள். என்ன சொல்கிறார் இவர்...?

உள்ளேயிருந்து "சந்திரீ!" இங்கே வா என்று கூப்பிட்டான் நடராஜன்.

கண்களைத் துடைத்துக்கொண்டு உள்ளே போனாள்.

அன்று முதல் நடராஜன் அவளை வெகு ஜாக்கிரதையாகக் கவனிக்க ஆரம்பித்தான். ரெங்கநாதனுடன் அவள் பேச ஆரம்பித்தால் கூடவே வந்து நின்று கொள்வான, அலலது வேறு எங்கேயாவது கூப்பிடுவான், அவசர வேலையிருப்பது போல.

இது சந்திராவுக்குத் தாளவில்லை. இவன் ஏன் வந்தான் என்று எண்ணினாள் அவள் முதலில். பிறகுதான் அவளுக்கு அதுவும் ஒரு நல்லதாய்ப் போயிற்று என்று தெரிந்தது. ரெங்கநாதன் வெறுத்தாலும் அவள் ரெங்கநாதன் பால் கொண்டுள்ள அன்பைக்குறைக்க முடியாது என்று கண்டுகொள்ள நடராஜன் வருகை, இருப்பு, முரட்டுத்தனம் எல்லாம் உபகாரமாயிருந்தன. அவள் அன்று நடராஜன் தன் நண்பனுக்கு எழுதியுள்ள கடிதத்தை எடுத்துப் பத்திரமாக வைத்துக்கொண்டாள்.

ரெங்கநாதன் சந்திராவிடமிருந்து ஒதுங்க ஆரம்பித்தான். 'சரிதானே, நடராஜன் முறைப் பிள்ளை. அவனுக்கு உரிமை உண்டு. தன் மனைவி வேறு ஒரு இளைஞனிடம் பேசுவதையும் அன்பாய் நடந்துகொளவதையும் எப்படிப் பார்த்துக் கொண்டிருபபான்?' என்று முடிவு செய்து விட்டான். சந்திரா எண்ணத்தில் வேறு ஏதாவது ஒரு சிக்கல் இருக்குமோ என்று ஒரு சந்தேகம்

அவனுக்கு ஏற்பட்டிருந்தது. அதுவும் தொலைந்த பிறகு இத்துடன் ஒதுங்குவது நல்லது என்று முடிவு செய்து விட்டான். அவளைத் தனியே விட்டால்தான் அவளுக்குத் தைரியம் ஏற்படும். நீர் ஒரு மடையில் பாய இருக்க மற்றொரு மடையைத் திறந்தே வைத்திருக்கக்கூடாது. அடைப்பதுதான் சரி. ஆனால் அவன் உள்ளே நடந்ததை அறியமாட்டான்.

ஒரு நாள் நடராஜன் வீட்டிலிருந்தான். சந்திரா மாடியறையில் ஒரு பையில் பழங்களை எடுத்துவைத்து வேலைக்காரனிடம் கொடுத்துக் கொண்டிருந்தாள்.

'இது யாருக்கு?' என்றான் அங்கே வந்த நடராஜன்.

''ரெங்கநாதனுக்கு!'' என்றாள் சந்திரா.

''எதற்காக நீ அனுப்புகிறாய்?''

''நீர்யார் கேட்க!''

''எனக்கு உரிமை உண்டு.''

''உனக்கு உரிமை ஒருவரும் தரவில்லை!''

''சும்மா உளறாதே. எனக்கு ஒருவரும் தர வேண்டாம். பிறப்பிலேயே அது எனக்குக் கிடைத்திருக்கிறது! நீ இனி ரெங்கநாதனுடன் எந்தச் சம்பந்தமும் வைத்துக்கொள்ளக்கூடாது.''

''வைத்துக் கொண்டால்...!''

''உன் நடத்தையைக் கண்டிக்க...!''

''என்ன சொன்னாய்?'' என்றாள் சந்திரா.

''சும்மா உருட்டாதே. நான் இதற்கெல்லாம் பயப்படமாட்டேன். எனக்கு உரிய சொத்தை மற்ற ஒரு பிணைதை மோந்து பார்க்க நான் விடமாட்டேன்!''

கையில் எடுத்த சாத்துக்குடியை அப்படியே எறிந்தாள். அவன் தப்பித்துக் கொண்டு சிரித்தான். ஆத்திரம் தாளாத சந்திரா 'ஐயோ அப்பா,' என்றலறினாள்.

''சந்திரா உன் சாகசம் எல்லாம் பயனில்லை. உன் அப்பா காரில் வெகு தூரம் போய் விட்டார்.''

''அம்மா...!''

''அம்மாவும் அரை மைலுக்கப்பாலிருக்கிறாள்.'' பொன்னன் விழித்தான்.

அதற்குள் ''சந்திரா'' என்று கூப்பிட்டுக் கொண்டே வந்த தந்தை அழும் புத்திரியைப் பார்த்து "இதென்ன அம்மா'' என்றார்.

அலறி ஓடி வந்து கட்டிக்கொண்டாள். உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. வியர்வையால் புடவை நனைந்திருந்தது. ''என்ன அம்மா, என்ன நடராஜா?''



''ஒன்றுமில்லை. ரெங்கநாதனிடம் நீ ஜாக்கிரதையாக நடந்துகொள்ள வேண்டும். வயது ஆயிற்று! என்றால்... ...'' என்றான்.

''அப்பா!'' என்று அவள், ''இந்தக் கயவன் என்னை நடத்தை தவறியவள் என்கிறான் அப்பா!' என்றாள்.

''பார்த்தீர்களா! இப்படிப் பேசுகிற இவள் அடங்கிவாழ்வாளா? நான் என்னக் கயமைத்தனம் செய்தேன்!''

''இதோ பாருங்கள் அப்பா தெரியும்'' என்று அன்று பாட்டியிடம் தபாலில் சேர்த்துவிடுகிறேன் என்று ஒளித்து வைத்திருந்த

கடிதத்தை எடுத்துக் கொடுத்தாள். வாசித்த அவர் "நடராஜன், நீ இனி ஒரு கணம்கூட இங்கே இருக்கக்கூடாது. இன்றே கிளம்பி விடு' என்று நூறு ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து எறிந்தார். பிறகு பொன்னனைப் பார்த்து "பொன்னு என்னடா பார்த்துக்கொண்டிருந்தாய்!" என்று அதட்டினர். அவன் மீண்டும் அதையேசெய்தான்.

அண்ணியும் அதற்குள் வந்துவிடவே "பார்த்தாயா உன் தமையன் பிள்ளை வேலையை" என்று கோபித்துக்கொண்டுவிட்டு "எல்லாம் இருக்கிற இடத்தில் இருக்கணும். மரியாதை தெரியாததை எல்லாம் இங்கே...!"

"சரிதான் மாமா சும்மா இருங்கள். பெண்ணை அடக்க வழி தெரியவில்லை; பேச வந்து விட்டார்!" என்ருன்.

முதலியாரைக் கோபம் ரௌத்திரனுக ஆக்கிற்று ஆனலும் அடக்கிக்கொண்டு 'ஏய் பொன்னு ஐயாவை உடனே சென்று பஸ் ஏற்றி விடு!' என்ருர். பிறகு எல்லோரும் கீழிறங்கினுர்கள்.

'நடராஜன் சும்மா போகமாட்டான்! என்ருன் நடராஜன். 'அவர் அது கிடக்கு அசத்து!' என்று சொல்லிச் சென்று விட்டார்.

## குரோதத்திற் குருட்டுச் செய்கை

நடராஜனை அந்த ஊரிலேயே பார்த்ததாக முதலியாருக்குச் சில அன்பர்கள் சொல்லினர், சுந்தரேசனும் ஒரு நாள் பார்த்தாள். ஆனல் அவனுடன் பேசவில்லை. மறைந்து விட்டான். சரிதான் போ, கயவாளி! என்று இருந்துவிட்டார். சந்திரசேகர முதலியார்.

அன்று காலையில் எழுந்திருந்த சந்திரா கொல்லைக்குச் சென்று சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

சுந்தரேசன் அலறி அடித்துக் கொண்டு வந்து, "அக்கா அக்கா, ரெங்காநாத ஸாரைப் பாரேன். வீட்டில் புகுந்து அடித்துக் கொன்று விட்டார்களாம்? என்ருன்.



.... ... ... என்ன அப்பா அழுகிறீர்களா? .... .... ....

பறந்தடித்துக்கொண்டு உள்ளே வந்தாள் சந்திரா. தகப்பனார் காரில் புறப்பட்டுக் கொண்டிருந்தார்.

சந்திராவும் ஏறி உட்கார்ந்தாள். போகும் போது ஒரு டாக்டரையும் அழைத்துக்கொண்டு சென்றனர்.

ரெங்கநாதன் ரத்த வெள்ளத்தில் கிடந்தான். டாக்டர் உயிருக்குப் பயமில்லை என்றார். வாயிற் கதவு உடைந்து கிடந்தது.

ஆனால் ரெங்கநாதன் மயக்கமாய் இருந்தான்.

'மண்டையில் அடி; விலாவெலும்பு நொறுங்கி இருக்கிறது. தசைகள் எல்லாம் நசுங்கி இருக்கின்றன!'

"என்ன செய்கிறது டாக்டர்"என்றாள் சந்திரா.

"அழாதே அம்மா.'

"சரி, டாக்டர் இவரை நம்முடைய வீட்டுக்குக் கொண்டு போகலாமா!"

"யார் பார்த்துக் கொள்வார்கள்?"

"நான் இருக்கிறேன்!" என்றாள் சந்திரா.

"அதைப்பற்றி உமக்கென்ன கவலை!" என்றார் முதலியார்.

போலீஸ்காரர்கள் வந்தனர். "ரெங்கநாதனிடம் பேச இப்பொழுது முடியாது. பாக்கி வேலை யைப் பாருங்கள். நான் இவரை வீட்டுக்குக் கொண்டு போகிறேன். "என்றார் முதலியார்.

"அதற்குப் பெர்மிஷன்..."

அதற்குள் ஸுபரிண்டெண்டெண்டே வந்து விட்டார். "எடுத்துப் போங்கள். நாளை வருகிறேம்!" என்றார் அவர்.

ஜாக்கிரதையாக ரெங்கநாதனுக்கு ஒரு இஞ்செக்ஷன் கொடுக்கப்பட்டது. பிறகு முதலியார் வீட்டின் முன்னறையில் கட்டிலின் மேல் கொணர்ந்து கிடத்தப் பெற்றான்.

அவனுக்கு மூர்ச்சை தெளிந்து தன் நிலை வர இரண்டு நாளாயிற்று. முதலியார் குடும்பம் இரண்டுநாளும் அவனிடமே கழித்தன. சந்திரா சங்கடப்பட்டாள். அவள் வயது அப்படி.

பிரக்ஞை வந்த சமயம் ரெங்கநாதன், "ஐயோ, ஏனப்பா என்னை அடிக்கிறாய்?" என்று கொண்டே புரண்டான்.

"ஐயோ அப்பா...!" என்று முனகினான்.

சந்திரா பக்கத்தில் இருந்தாள்.

"அசங்காதிர்கள்!" என்று சொல்லி அவன் முகத்தைப் பார்த்தாள்.

அதற்குள் போலீஸ்காரர்கள் வந்தார்கள்.

"ஏன் என்ன" என்றாள். டாக்டரிடம் அனுமதி பெற்று அவனிடம் சமாசாரம் சொல்லப் பட்டது.

பிறகு போலீஸ்காரர், அடித்தது யார் என்று தெரியுமா என்று கேட்டார்.

ரெங்கநாதன் ஒரு முறை முதலியாரைப் பார்த் தான். பிறகு சந்திராவைப் பார்த்தான்.

தெரியாது என்றான்.

"யாரிடமாவது சந்தேகப்படுகிறீர்களா?"

"இல்லை, எனக்கு ஒருவருமே சத்துரு இல்லை!"

பிறகு நடந்ததெல்லாம் தெரிய வேண்டாம். நமக்கு அவசியமில்லாத விஷயம்.

அவன் படிப்படியாகச் சௌகரியமடைந்தான். முதன் முதல் அவனுக்கு நன்றாய்ப் பிரக்ஞை வந்தவுடன் தனக்குச் சாப்பாடு கொண்டுவந்த பிராமணப் பையனைப் பார்த்ததும் 'அண்ணியைக் கூப்பிடு' என்றான்.

'அண்ணி, நீங்கள் எனக்குச் சாப்பாடு கொடுக் கக் கூடாதா? முடியாவிட்டால் சந்திரா, சுந்தரேசன் யார் வேண்டுமானாலும் செய்ய லாம்!' என்றான்.

சந்திரா அந்த வேலையையும் ஏற்றுக் கொண்டாள்,

ஒரு மாதம் சென்றது. நன்றாகக் காயங்கள் எல்லாம் ஆறிவிட்டன. ஆனால் எழுந்திருந்து நடமாட முடியவில்லை. மெதுவாக எழுந்து கட்டிலில் உட்கார்ந்தான்.

இதனிடையே ஒரு விஷயம் தீவிரமாக அவனுக் குப் புரிந்தது. சந்திரா அசட்டுத்தனம் செய்கி றாள். அதற்கு இடம் கொடுக்கக் கூடாது.

சந்திராவே காப்பி கொண்டு வந்தாள்.

"என்ன கொஞ்சம் தேவலையா!"

"நாளை வீட்டுக்குப் போகிறேன்."

"முடியாது. இனிமேல் இதுதான் வீடு. அது இருக்கட்டும். உங்களுக்கு அடித்தது யார் என்று தெரியாது?"

"தெரியும்!"




ஸன்லைட்
சோப்பினில் தான்




துணிகளை
அடித்துத் துவைக்காமலே
வெண்மையாகவும்
பிரகாசமாகவும்
சலவை செய்கிறது!

S. 205-50 TM

"பிறகு ஏன் பிசகு செய்தீர்கள்?"

"சந்திரா, இதை நீ கேட்க வேண்டுமா?"

"அப்படியானால்......!"

"ஆம். உனக்காகவேதான்...!"

"நிசமாகவா?"

"ஆம் உண்மையில் அதற்காகத்தான்!"

"நீங்கள் எனக்கு நன்மை செய்யவில்லை!"

"நீ சிறுசு. உலகம் தெரியாமல் பேசுகிறாய். என்றும் நடராஜன் உன் கணவனாக வேண்டியவன்...!"

"போதும் நிறுத்துங்கள்..."

"அழாதே சந்திரா. நீ நினைக்கிறபடி நடக்காது!"

"பின் பேச்செல்லாம் பிரமாதமாகப் பேசுகிறீர்களே! அன்று ரேடியோவில் ஜாதி பேதம் ஒழிய வேண்டும், மணத்துக்கும் சாப்பாட்டுக்கும் அது குறுக்கே நிற்கக்கூடாது. தொழிலினால் யாரும் பிராமணராகலாம் அப்பொழுது. பிறவித்தை அழியாது என்றெல்லாம் பேசினீர்கள்!"

"ஆமாம் நான் மறுக்கிறேனா?"

"என்னை ஏமாற்றியே வந்திருக்கிறீர்கள்!"

"நீதான உன்னை ஏமாற்றிக் கொள்கிறாய். நான் சொன்னதற்கு அஸ்திவாரம் சுயநலம் என்று எண்ணுகிறாயா?"

"பிறருக்கு உபதேசம் செய்து தான் ஒதுங்கி நிற்கும் பேடித்தனமா அது!"

"அசடே, ஏன் அனாவசியமாகக் கோபித்துக் கொள்கிறாய்!"

"இல்லை, பிறகு என்ன செய்யச் சொல்கிறீர்கள்? நான் உங்களைத் தவிர வேறு யாரையும் எண்ண முடியாது."

"என்னை ஆபத்துக்குள்ளாக்குகிறாயா? உனக்கு என்னிடம் இருக்கும் அன்புக்கு இது தானா முடிவு?"

"ஏன் அதில் அபாயம்?"

"என் வாழ்வை நான் வேறு விதமாக வகுத்து விட்டேன்."

"மணம் புரிந்து கொள்ளப் போவதில்லை?"

"ஆம், அதனால் சொல்கிறேன். நீ நடராஜனை மணம் செய்து கொள்!"

"அதைச் சொல்ல உங்களுக்கு உரிமை கிடையாது!"

"பின் என்ன செய்வாய்?"

"செய்து கொண்டால் உங்களை. இல்லை என்றால் நான் கன்னியாகவே காலம் கழிப்பேன்...!"

'அது..."

"முடியாது என்று எண்ணுகிறீர்களா?"

"இல்லை. அப்படிச் செய்தால் எனக்கு மிகவும் சங்கடமாக இருக்கும்!"

"இனி உங்கள் சங்கடத்தைப்பற்றி எண்ண என்னால் முடியாது. என் தர்மம் ஒன்றுஉண்டு. பாரதப் பண்பாடு அறிந்த பெண் மனதாலும் வேசைத் தனம் புரிய முடியாது"

ரெங்கநாதன் காப்பியை வாங்கிக் குடித்தான்.

"சரி. மணமாகாமல் இருப்பதால் ஒன்றும் பெரிய குறை நேர்ந்து விடாது. ஆனால் தந்தை தாய் இவர்களுடைய மனம்...!"

"அவர்களுக்குக் குறையோ அவமானமோ இதில் இல்லை. தவிர, என் அப்பா நல்லவர். அவர் ஒன்றும் சொல்ல மாட்டார்"

முதலியாரே சொல்லி வைத்தால் போல் உள்ளே வந்தார். 'சந்திரி!' என்றவர் அழுதே விட்டார்.

ரெங்கநாதன் மறுபக்கம் திரும்பிக் கொண்டான்.

"என்ன அப்பா அழுகிறீர்கள்? நான் செய்தது பிடிக்கவில்லையா?"

"இல்லை அம்மா, இவ்வளவு உயர்ந்த லக்ஷியத்துடன் என் வயிற்றில் ஏன் பிறந்தாய்?" என்றார்.

"உங்களுக்குப் பெருமையாயில்லையா?" என்றாள் சந்திரா.

"இருக்கிறது. ஆனால் இந்தப் பெருமை என்ன விலைக்கு வந்திருக்கிறது என்று என் உள்ளத்தைக் கேள்!" என்றார்.

அப்படியே அவள் தலையை வருடிக் கொண்டே கண்ணீருகுத்தார்!

மறுநாளே வேலையில் சேர்ந்த ரெங்கநாதன் டிஸம்பர் இருபத்தைந்தாம் தேதியன்று வேலையை

ராஜிநுமா கொடுத்துவிட்டான் என்று தெரிய வந்தது. அவன் எங்கேயோ போய்விட்டான். முதலியாரிடம்கூடச் சொல்லிக் கொள்ளவில்லை.

பலர் பல காரணம் சொல்லிக்கொண்டனர்.

சுந்தரேசன் அக்காவிடம் 'அக்கா, ரெங்கநாத ஸார் ஏன் வேலையை விட்டுவிட்டார் தெரியுமா?' என்றான்.

'ஏனோ? விரக்தி ஏற்பட்டிருக்கும்!' என்றாள் அவன் குணம் தெரிந்த அவள்.!

அவனுக்கு அது புரியவில்லை. அவன் சொன்னான்:

'என் கிளாஸ்மேட் முனிசிபல் சேர்மென் பையன் இருக்கிறான் பார். அவனுக்கு ஸெலக்ஷன் ஆகவில்லை. ஹெட்மாஸ்டர் ரெங்கநாத ஸாரிடம் கணக்கிலும் இங்கிலீஷிலும் அதிக மார்க்குப் போட்டுத்தரச் சொன்னாராம். அவர் முடியாது என்று சொல்லிவிட்டாராம். அதன் பேரில் இரண்டுபேருக்கும் வாக்கு வாதம் நடந்ததாம். கடைசியில் அவர் ரிஸைன் செய்து விட்டாராம்.'

சந்திரா சுவாரஸ்யமாய்க் கேட்டாள்.

'பையன் கேஸ் என்ன ஆயிற்று?'

'போகும்போது நீங்கள் வேண்டுமானால் மார்க்கை அதிகம் போடுங்கள்!' என்று சொல்லி விட்டுப் போய்விட்டாராம்.'

'பையன் ஸெலெக்ஷன் என்று சொல்லு.'

'பாஸும் ஆகிவிடுவான்'

'எப்படி?

'அவன் அப்பாவுக்குப் பட்டணத்தில் நல்ல செல்வாக்கு. பிரதம மந்திரி வரை தெரியும்.!'

'சரிதான். இந்த உலகத்திற்கும் அவருக்கும் எப்படி லாயக்குப்படும்?' என்றாள் சந்திரா.

(தொடரும்)





# அரசு முடி யாருக்கு?

வி. ஜீ. ஸ்ரீநிவாஸன்

மன்னவனுக்கு மண்டை கனத்தது, இமை கொட்டவில்லை. உறக்கம் வந்தால் தானே? காம்பரிந்து பரப்பிய மல்லிகை மலரிதழ்களைக் கொண்ட பட்டு மெத்தையிலும் முட்களாயிருந்து தைத்தன? ஆயிரக்கணக்கான சிந்தனைகள் மண்டையைக் குடைந்து கொண்டிருந்தன. "அப்பப்பா, தலை தெறித்து விடும் போலிருக்கிறதே; யார் தலையில் கிரீடத்தை வைப்பது? என்று கத்தினன் வேதனை தாளாத வேந்தன்.

அரசன் எழுந்து உட்கார்ந்தான். "இறுதியாக இந்தத் தலைவலிக்கு ஏதேனும் மருந்து இருக்கிறதா, இல்லையா? விடிவதற்குமுன்னல் என் தலை வெடித்துவிடும்! எனது உள்ளத்தை நிரப்பும் இப்பெருமூச்சு எனது அரசின் எந்த மூலையிலிருந்து கிளம்பிய முணமுணப்பின் மாற்றமோ? இன்று மணி மகுடத்திலுள்ள வைரங்களெல்லாம் வீணுகி விட்டன. உள்ளும் புறமும் ஒளியிழந்து காண்கின்றன. அந்தோ! இந்த நிரம்பிய மனையில் வெறுமையின் வாடை எங்கிருந்து வந்து தேங்கியதோ" என்று கதறினன்.

மௌனமாக அவன் வெளியே வந்தான்.

அவனது தேர் முனிவரின் ஆசிரமத்திற்கு வந்த நேரம் பார்த்து விடிந்தது. சுற்று முற்றும் பல்வகை மலர்களின் நறுமணம் சூழ்ந்தது. புள்ளினங்கள் பாடின.

ஆசிரமத்தைச் சுற்றிலுமுள்ள இயற்கை விசித்திரமானதோர் எழில் பரப்பியது. உஷையின் செங்கதிர்கள் அரண்மனைக் கோபுர உச்சியைத் தொட்டன; ஆசிரமக் கூரையின் மீதும் செம்மை தெளித்தன. ஆனல் இரண்டினுக்கும் மாறுபாடு இருக்கத்தான் செய்தது. பூங்காவில் மலர்கள் பூக்கின்றன; வனத்திலே மலர்கள் நகை செய்கின்றன.

இறைவன் திருக்கோவிலின் மணியின் நாதம், அரசவாசலின் பிரபாத கீதத்துடன் இணைந்ததானது மங்களத்தோடு மதுரமும் சேர்ந்து போலாயிற்று.

* * *

மகரிஷியின் முகத்திலே மகிழ்ச்சி தெரிந்தது. அமைதியே உருவமாகி மோனத்தே

அமர்ந்திருந்தார். தேசு துலங்கியது தெள்ளிய முகத்திலே.

அரசன் முன் வந்து கை கூப்பி நின்றான். நடுங்கும் குரலில், "மகரிஷி! இந்த மகுடம் என்தலைக்குப் பெரும் சுமையாகி விட்டது," என்று சொன்னான்.

"உண்மையாகவா?" என்று வினவிய முனிபுங்கவர் சிரித்தார். "சரிதான்; அப்படியானால், இம் மகுடத்தின் கீழே ஏழை மக்களின் எண்ணிக்கை அதிகரித்திருக்கும். மகுடத்தின் பாரத்துக்குக் காரணமான பரு வைரகற்களையெல்லாம் பெயர்த்தெடுத்து, தானமாக வழங்கிவிடு," என்றார் முற்றுந் துறந்த மெய் ஞானி!

"வைரங்களையா? என்ன சொன்னீர்கள்? விலைமதிப்பற்ற ஒளிமணிகளையா தானமாகத்தருவது?' மன்னன் பதற்றம் கொண்டான்.

"ஆம், வைரங்களைத்தான். எவ்வளவு ரத்தம் வியர்வைத் துளியாகமாறி, பின்னர் இந்த ரத்தினக் கற்களாகப் பரிணமித்துள்ளனவோ? நீ அணிந்துள்ள முத்துச் சரம் உனக்குக் கிட்டும் பொருட்டு எத்தனை அனாதையரின் கண்ணீர்த் துளிகள் முத்து முத்தாகச் சிந்தினவோ? இதைப் பற்றியெல்லாம் உனக்கேதாவது தெரியுமா? முடிவாக, பலர் வேதனைப்பட்டு வெளியிடும் முணமுணப்பின் பலன் உனது தலையைத் தாக்கத்தானே செய்யும்!" முனிவரின் குரல் உறுதி காட்டியது.

"அப்படியானால், முனிவரே! இந்த மகுடத்தின் கதி இனி என்னவாகும்?"

"இப்பொழுது நான் சொன்னபடி செய்வதுதான் மகுடத்தின் நற்கதி. கனத்திருந்தால் இறக்கிவிட வேண்டியதுதானே. இதன் காலம் மலையேறி விட்டது."

"அவ்வாறானால், பிறகு?"

"எவன் உன் தலையில் இந்த மகுடத்தை வைத்தானோ, அவனிடமே இதைத் திருப்பிக் கொடுத்து விடு."

"அவனை எங்கே காண்பது?"

"அவனைத் தேடவா வேண்டும்? அவன் எங்கே இல்லை? அவனைத் தேடுவதற்கு



முன்னால் உன் மனத்துள் தேடிப்பார். உனது ஆன்மாவின் குரல் உனது இதயம் வரை சென்றதா இல்லையா?''

அரசன் அரண்மனைக்குத் திரும்பி விட்டான். கவலை மட்டும் விலகவில்லை. ''அவனை எங்கென்று தேடுவது? மகரிஷி சுட்டிக்காட்டியது எதை நோக்கியோ? ஒன்றும் விளங்கவில்லையே,'' என ஏங்கினான்.



இன்னது செய்வது எனத் தெரியாமல் தத்தளித்தான்.

முனிவரர் மொழிந்தது மன்னவன் மனத்திடையே பதியவில்லை. ராஜ குருவைக் கூப்பிட்டனுப்பினான். எல்லா விஷயத்தையும் சொன்னான்.

''ஆசார்யரே! மகரிஷி குறித்தது எது வாயிருக்கலாம். நான் இந்தக் கிரீடத்தை யார் காலடியில் அர்ப்பணம் செய்வது?''

''மன்னவா! இறைவன் திருவடிகளில் தான், பின் வேறெங்கே?''

''அப்படியானால் அவரைக் கண்டு கொள்வது எப்படியோ? அவர் எனக்கு எங்கே தரிசனம் தருவார்?''

''புண்ணிய தீர்த்தங்களில்தான்! வேறு எங்கே?''

* * *

தீர்த்த யாத்திரைக்கு அரசன் ஆயத்தமானான். வேலைக்காரர், கால்நடை வீரர் குதிரை வீரர் என்று பலதிறப்பட்டோர் உடன் சென்றனர். மிகுந்த ஆடம்பரத்தோடு கிளம்பியது புனித யாத்திரை. நிலத்திலிருந்து கிளம்பிய புழுதிப் படலம் மேகமாக மாறியது.

அரண்மனைக்குள்ளிருந்து கிளம்பிய ரதம் அகன்ற சிங்க வாயிலை அடைந்தது. அந்தச் சமயம் பார்த்து ஏழை ஒருவனது வேதனை நிரம்பிய கதறல் காதுகளைத் துளைத்தது.

அரசனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. தலையின் மேல் ஆட்டங்கண்ட மகுடத்தைச் சரிப்படுத்திக் கொண்டான். எழுந்து பார்த்தான். கந்தல் உடுத்திய கரியவோர் ஏழையைப் படை வீரர்கள் பிரம்படி கொடுத்து, பாதை யோரத்திலே விரட்டிக் கொண்டிருந்தார்கள்.

வேந்தனின் வதனம் வெளுத்து விட்டது, ஆனால், அவனால் அங்கே நிற்க இயலவில்லை. பல்லக்கு மேலே மேலே சென்று கொண்டிருந்தது.

நான்கு திசைகளிலும் அரசனின் புகழ் பரவியது. பூரி ஜகந்நாதத்திலே லக்ஷம் பேர்களுக்கு அன்னதானம் வழங்கினான். வேறோரிடத்தில் தனது கல்லிழைத்த பொற் குடை, சாமரம் ஆகியவற்றைத் தானமாக்கி விட்டான். பிறிதோரிடத்தில் தனது செம்பொன் அணி பணிகளையும் தானமாகத் தந்து விட்டான்.

புண்ணியம் சேர்த்துச் சேர்த்துக் கைகள் களைத்துவிட்டன. உள்ளத்திலே உவகை பொங்கியது. வெறும் கட்டாந்தரைப் பிரதேசத்தைக் கண்டாலுங்கூட கோவில்களைக் காண்பது போன்ற பிரமைத் தோற்றம்

ஏற்பட்டது. அவ்வளவு கோவில்களைக் கண்டு கண்கள் பூத்துவிட்டன. ஆனால், அவனுக்குத் தரிசனம் கிட்டவில்லை; அமைதியும் ஏற்படவில்லை.

புஷ்பங்கள், பிரசாதங்கள் என்று எவ்வளவோ ஏற்றான். உள்ளத்துள்ளே மட்டும் குறைபாடு இருக்கத்தான் செய்தது. புண்ணியத்தின் புனிதப் பெருவெள்ளம் அலை அலையாக வந்து மோதியபோதிலும் இதய மூலை மட்டும் வெறுமை பூண்டது. தலைக்கு வலி அளித்த முடியும் தலையிலே தானிருந்தது.

அரசன் அரண்மனையை அடைந்தான். தங்கத் தட்டிலே வைக்கப்பட்டிருந்த அருமையான அறுசுவை உண்டி ஒரு சுவையும் தரவில்லை.

ராஜகுருவை அழைத்தான் அரசன். "குருநாதா! எனக்குத் தரிசனம் கிடைக்கவில்லை சாந்தியும் கிட்டவில்லை. என்ன காரணம்?" என்றான்.

"மன்னவா! யாத்திரையைத் தடுத்து நிறுத்துவதற்கான துணிவு எனக்கு வரவில்லை. ஆனால், சிங்க வாயிலில் ஏற்பட்ட அபசகுனத்தின் காரணமாக என் மனத்திலே சந்தேகம் எழுந்ததுண்டு."

"இதென்ன, இப்படிச் சொல்கிறீர்கள்!" என்றான் அதிசயமுற்ற அரசன்.

"நம் முன்னே எதிர்ப்பட்டானல்லவா, அந்த, கருத்த கருமரோகியைத்தான் சொல்கிறேன். அந்த, நிர்வாண மூர்க்கன்தான் புனித யாத்திரைக்கு அபசகுனம் விளைத்தவன்."

விடையேதும் விளம்பவில்லை வேந்தன். இறைவனைத்தேடி அலைந்ததெல்லாம் வீண்தானா? தலைவலி விடவில்லை.

இரவு இமைக்கக்கூட வில்லை. பசி எடுக்கவில்லை. விந்தையானதோர் சூன்யம் சூழ்ந்தது.

* * *

**வை**கறை புலர்ந்தது. மறுமுறையும் மன்னவன் முனிவரின் குடிலுக்குச் சென்றான், என்ன விந்தை! மகரிஷியின் ஆசனத்திலே அமர்ந்திருந்தான் அதே கருத்தழிந்த ஏழை! அவனது முகத்திலிருந்து அற்புதமான தேஜஸ் சிந்திக்கொண்டிருந்தது. இதைக் கண்ணுற்ற வேந்தன் திடுக்கிட்டான்.

"யார் நீ?" என வினவினான் வேந்தன்.

"நீ யாரைத்தேடி அலைந்தாயோ, யாரைத் தீர்த்தக் கரைகளிலுள்ள மணலையெல்லாம் அரித்துப் பார்த்தாயோ அந்த 'அவன்' தான். நான்!"

"நீ........? இறைவனா? இல்லை, இல்லை. எனது தீர்த்தயாத்திரைத் தொடக்கத்திலே எனது வாசலில் வந்து நின்ற அபசகுன ஏழையல்லவா? நீ!"

"நீ என்னைத் தெரிந்துகொள்ளவில்லை. உனது கண்களிலே கொழுப்புப் படர்ந்திருந்தது. ஏழைதானே கலியுகத்தின் கல்கி அவதாரம்!"

"எப்படித் தெரிந்துகொள்ள முடியும்? இது சாஸ்திரத்திலே குறித்தபடியுள்ள இறைவனது திருஉருவமாக இல்லையே! உனது சங்கு சக்கரமெல்லாம் எங்கே?"



"இந்த யுகத்தில் என்னுடைய உருவம் இதுதான். சாஸ்திர உருவம் பழசாகி விட்டது."

"ஆனால் இந்த உருவத்தை யாரும் எங்கும் கண்டதாக உண்டா?"

"ஏன் இல்லை?" எல்லாரும் பார்க்கவே செய்கிறார்கள், ஆனால் லக்ஷத்திலே ஒருவன் தான் தெரிந்து கொள்கிறான். கௌதமன் இந்தக் கோலத்தில் தானே அரசுச் சுமையை இறக்கி வைத்தான்! மறந்தனையா?"

"அப்படியானால் கோவில்களில் காணும் மூர்த்திகளெல்லாம் என்னவாம்?"

"அவையெல்லாம் கலை வல்லோர் தம் மனம் போல வடித்துக் கொடுத்த பாவை கள்; நானல்ல."

"அவ்வாறெனில், புரோகிதர், பண்டிதர் முதலானவர்களெல்லாம்......?"

"பாவம், அப்பாவிகள் என்ன செய்வார் கள்? அவர்களுக்கெல்லாம் மூர்த்தி உணவு. அவர்கள் கடைக்கு விளம்பரச் சரக்கு!"

"நன்றாயிருக்கிறது! இதெப்படி! தங்க ளது பக்தர்கள் இதே மூர்த்தியைத் தான்......"

"எனது உண்மையான பக்தர்கள் சாதா ரணமாக என்னை எல்லா உருவத்திலும் எப்போதும் காண்கிறார்கள் — குறிப்பிட்ட ஒரு பொருளில் தான் என்றல்ல."

"பின்னர் தங்களை அடைவதற்கு வழி எதுவோ?"

"எனக்குப் பணி புரிவது தான்!"

"நான் தான் பற்பல ஆண்டுகளாகத் திருப்பணி செய்து வருகிறேனே!"

"நீ செய்தது பிழை. நீ கல்லுருவினைப் பூசித்தாய் — மனித உருவினையல்ல. இறை வன் கோவில்களுள் பிரதிஷ்டை பெறவில்லை— மனித உடலுள்தான் நிலை பெற்றுள்ளான். 'எல்லா உடலும் இறைவன் ஆலயமே' என்பதை நினைவில் வைத்துக்கொள்."

"முனிவரே! நான் என்ன பிச்சைக் காரனிடம் பிச்சை ஏற்பதா? அந்த ஏழை எனக்கு என்ன தரமுடியும், பாவம்?"

"அவன் ஏழையென்று நீ நினைக்கிறாய். ஆனால், அவன் அளித்த கொடை தான் உன் மணி மகுடமாகத் துலங்குகின்றது. மகாபலியும் வாமனனை ஏழையென்றுதான் எண்ணினான்; பாதாளத்துக்கல்லவா போய்ச் சேர்ந்தான். யாரை நீ காப்பதாக நினைக் கின்றாயோ, அவன் தான் உன்னைக் காக் கின்றான்! நீ கடவுளைப் பட்டினி போட்டு விட்டாய்; அதனால் தான் உனக்குப் பசி யெடுக்கவில்லை. நீ அவனது ஆசியைப் பெற வில்லை; அதனால் தான் உனது மனக்கவலை மாயவில்லை."

"பெரியவரே! எனக்கும் பசியெடுத்தால், நானும் கண்ணுறங்கினால், ஆகா! எவ்வளவு நன்றாயிருக்கும்!"

"மகுடத்தினடியில் உறக்கமா? இது முடியுமா? உனது பசியை மக்கள் கொண்டு விட்டனர்."

அரசன் சிந்தனையில் ஆழ்ந்தான்.

"ஞானியரே! நான் இனி ஜனத்தை ஜனார்த்தனனாக மதிப்பேன்; நரனை நாராய ணனாகக் கொள்வேன். இருந்தபோதிலும் இறைவனுக்குள்ள சக்தி அவனிடம் இருக்குமா?"

"பேசாதே! நீ இன்னும் அவனது விராட் ரூபத்தைப் பார்க்கவில்லை!"

அரசன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அவ்வுருவம் அந்தர்தானமாகி விட்டது.

* * *

அரசன் தன் வழி திரும்பினான். கோட்டையருகே வந்தான். நான்கு புறங்களிலும் பசியால் வாடிய ஏழை மக்கள் படைபோலப் பரவியிருப்பதைக் கண்டான். அவர்கள் எழுப்பிய தீனக்குரல் பாம்பு போலிருந்தது. அந்த ஓசையில் அரண்மனைக் கூடகோபுரங்கள் கூட ஆட்டம் கண்டன. அரண்மனை வீரர்களால் அவர் களை எதிர்க்கவோ, தடுக்கவோ, நிறுத்த வோ முடியவில்லை. அவர்களது கூட்டம் மேலும் மேலும் வெள்ளம்போல் பெருகிக் கொண்டிருந்தது.

அரசனுக்கு விராட் ரூப தரிசனம் கிடைத்துவிட்டது! அவன் பிரமித்துவிட்டான்.

அதே அவலக்ஷணம்கொண்ட ஏழைக் கரியன் முன்னே வந்து நின்றான்.

"தன்னுடைய ரதசாரதியின் விராட் ரூபத்தைக் கண்டவுடன்தான் அர்ஜுனன் தெரிந்து கொண்டான் – அவன் தேர்ப்பாகனல்ல, இறைவனே என்று!. உனது தேரைச் செலுத்தும் சாரதியர் உனது பிரஜைகளே! பார்த்தாயா பேருருவை?" என விளக்கம் செய்தான் அவன்.

அரசனது மயக்கம் தெளிந்தது. அறிவு துலங்கியது.

மணி மகுடத்தைத் தலையிலிருந்து அகற்றினான். ஏழையின் காலடிகளில் வைத்தான்.

"உனது பொருளை, இறைவனே! உன்னிடமே ஒப்படைத்தேன்!" (த்வதீயம் வஸ்து கோவிந்தம் துப்யமேவ ஸமர்பயே) என மொழிந்தான் பணிந்த மன்னவன்.

(ராஜா ராதிகா ரமண பிரஸாத சிங் எழுதிய ஹிந்திக் கதையின் மொழிபெயர்ப்பு)



# புத்தக விமர்சனம்

## தென்னிந்திய கோயிற் சாசனங்கள்

பாகம் 1 பக்கம்--541 பக்கங்கள் விலை ரூ. 18-8-0

[சென்னை சர்க்கார் கீழ்த் திசைக் கையெழுத்துப் பிரதி நூல் நிலயப் பிரசுரம்.]

தென்னிந்தியச் சரித்திரத்தின் கோவையில் விட்டுப்போன சில பகுதிகளைக் கோயிற் சாசனங்கள் மூலமாகவே ஊகித்துக்கூட்டி நிர்மாணிக்க வேண்டியிருக்கிறது. இத்துறையில் சர்க்கார் 'எபிகிராபி' இலாகா சிறந்த தொண்டு இயற்றிச் சாசனங்களைச் சரிபார்த்து, புத்தக வடிவில், பிரசுரித்திருக்கிறது. அவர்களுக்கும் அகப்படாமல் சில சாசனங்கள் இருந்திருக்கின்றன. இந்த விவரம் நமக்கு இந்நூல் வாயிலாக அறியக் கிடக்கிறது. தேவஸ்தான எபிகிராபிஸ்டான ஸ்ரீ T. N. சுப்ரமணியம் அவர்கள் பரிசோதித்துப் பதிப்பித்திருக்கிற இந்நூலில் 547-சாஸனங்கள் அடங்கியிருக்கின்றன. இவை தென்னார்க்காடு, வடஆர்க்காடு, இராமநாதபுரம், கோயம்புத்தூர். செங்கற்பட்டு ஆகிய ஐந்து ஜில்லாக்களில் உள்ளவைகளின் பிரதிகள். இவைகளை முதலில் பிரதி செய்வித்தவர் லெப்டினண்ட் கர்னல் காலின் மக்கென்ஸி. அவர் கிழக்கிந்தியக் கம்பெனியில் அமர்ந்து சென்னை ராஜதானியில் 1782-முதல் 1818-வரையில் வேலைபார்த்து வந்தபொழுது தம் உபயோகத்துக்காகப் பணம் செலவு செய்து ஆள்களை அமர்த்தி, கோயிற் சாசனங்கள் அனைத்தையும் பிரதி செய்வித்து, தம் வயமே வைத்திருந்து, 1821 ஆம் வருஷம் காலமாகி விட்டார். கவர்னர்ஜெனரலாக இருந்த ஹேஸ்டிங்க்ஸ் பிரபுவின் முயற்சியால் கிழக்கிந்தியக் கம்பெனி பதினாயிரம் பவுன் கொடுத்து அவைகளை விலைக்கு வாங்கி, எச். எச். வில்ஸன் அவர்களைக்கொண்டு பட்டியல் தயாரித்தது. பிறகு தென்னிந்திய மொழிகளிலும் எழுத்துக்களிலும் உள்ள பிரதிகள் எல்லாம் சென்னைக்கே வந்து சேர்ந்தன. ரெவரெண்டு வில்லியம் டெய்லரும், ஸி. பி. பிரௌன் என்பவரும் அவைகளைச் சோதித்துப் புத்தக ரூபமாகச் செய்தனர். மக்கென்ஸி திரட்டிய சாசனங்களில் தமிழ் எழுத்திலும் மொழியிலும் உள்ளவை ஏறக்குறைய ஆயிரம் இருக்கும் பெரும்பாலும் அவைகளைச் சர்க்கார் சாசன இலாகா பிரதி செய்துவிட்ட போதிலும் அவர்களுக்கு அகப்படாத சுமார் 160 சாசனங்கள் மக்கென்ஸி திரட்டிலிருந்தே அறிய வேண்டியிருக்கிறது என்று ஸ்ரீ சுப்ரமணியம் எடுத்துக் காட்டுகிறார். சாசனங்களைக் கண்டுபிடித்துப்பிரதி செய்வதில் எவ்வளவு கஷ்டங்கள் இருந்தனவோ அவ்வளவு அவைகளைப் பொருள்படத் திருத்தி அமைப்பதிலும் இருந்திருக்கிறது. தமிழ் சரியாக எழுதத் தெரியாத சிலர். சாஸனங்களை எழுதியிருப்பதால் அவைகளின் உருவை நிர்ணயிக்க அறிஞர்களான சுப்ரமண்யம் முதலியவர்கள் வெகுபாடுபட்ட பின்னரே வெற்றிகொண்டிருக்கிறார்கள். இந்நூலில் சாஸனத்தின் பாடம், அதன் இலக்கம், அதன் திருத்திய பாடம், அது பொறிக்கப்பட்ட கல் இருக்கும் இடம், அந்தத் தானம் செய்த அரசன் விவரம், அவரது மற்றைய தானங்கள் யாவும் குறிப்பாக உணர்த்தப்பட்டிருக்கின்றன. இதே போல் அடுத்த பாகத்தில் மற்றைய ஜில்லாக்களில் அகப்பட்ட சாஸனங்கள் பிரசுரிக்கப்படும் என்று தெரிகிறது. சாஸனங்களில் தானத்தை விட அதை வழுவாது காத்துவருவது மிகவும் முக்யமானதென்பது வற்புறுத்தப்பட்டிருக்கிறது. குளம் கோயில்களின் பழுது பார்த்தலுக்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தது நன்கு விளங்குகிறது.

## கர்நாடக ராஜாக்கள் சவிஸ்தார சரித்திரம்

சென்னை சர்க்கார் பிரசுரம். விலை ரூ. 3—8—0

[ஸ்ரீ V. R. ராமச்சந்திர தீக்ஷிதர் அவர்கள் பரிசோதித்துப் பதிப்பித்தது.]

இதுவும் மக்கென்ஸி தொகுப்புக் கையெழுத்துப் பிரதிகளைச் சேர்ந்தது. அந்நாளில் ஆர்க்காடு ஸுபா கலெக்டராயிருந்த கர்னல் வில்லியம் மக்லாய்ட் துரையின் வேண்டுகோளின்படி செஞ்சி வாசியான நாராயணன் என்பவரால் எழுதப்பெற்றது. செஞ்சியின் வரலாறு, தேசிங்கன் சரிதம், நவாபு அநவர்த்திகான் வம்சம், ஹைதரலி, திப்புசுல்தான் இவர்களது சூழ்ச்சிகளும் எதிர் சூழ்ச்சிகளும் யாவும் விஸ்தாரமாகக் காணப்படுகின்றன. ஸ்ரீ தீக்ஷிதர் குறிப்பிட்டிருப்பதுபோல் ஆனந்தரங்கம் பிள்ளை டயரியுடன் இந்நூலையும் கூட்டிச் சேர்த்துப்பார்த்து, சரித்திரக்காரர்கள் பயன் படுத்திக்கொள்ளலாம். Prof C. S. ஸ்ரீநிவாஸாச்சாரியார் எழுதிய A History of Gingee and its Rulers என்னும் புஸ்தகத்துக்கு இந்நூல் மிகவும் உதவியாக இருந்திருக்கிறது. முஸ்லீம் ஆட்சியின் எதிரொலி இந்நூல் வசன நடையில் காணலாம், உதாரணமாக87ஆம்பக்கம் "பௌவுசுதாரி தம்முடைய சவாரியோடே அம்பாரிபேரிலேறிக்கொண்டுசகலமான பேரும் முபாரகபாதிகொடுக்க, பின்னாலே வந்த குதிரைக்காரரையும் பார்த்துச் சந்தோஷப்பட, சில்லா போய்ச்சேர்ந்தான். அப்பால் இதாயத்து மோதீன்கானுக்குத் தக்கினவசாரத்துப் பட்டம் சகலமானபேரும் கூடி கட்டினபிறகு தண்டு

அத்திலே நின்றது. கர்நாடகம் பௌவுசுதாரி சந்தா சாகிபுவிற்குத் தானே திட்டம் பண்ணிஞர். பாரிஷகும்பினிக்குஜாகீர் திட்டம் பண்ணி, தமக்கு மூசேபூசி பாளயம் கானக் காடிதி அசனுக்திகான்; முசபரகான் கும்மக்கா சேவகம் பண்ண திட்டம் பண்ணிக்கொண்டு சகல அமீரகளும் தம்முடைய தாபே தாரியில் ஆனுர்கள்" இருந்தாலும் எழுதியவர் ஸ்ரீவைஷ்ணவர்போலும். முதல் அத்தியாயமாக 'வைணவமும் இராமானுசரும் என்னுந்தலைப்பில் ஆழ்வார்கள், ஸ்ரீ ராமாநுஜர், கூரத்தாழ்வார், வில்லிபுத்தூரார் இவர்களைப் பற்றிய கதைகளையும் சேர்த்திருக்கிருர்.

## பரத சித்தாந்தம்

[ சென்னை சர்க்கார் ] கீழ்த் திசை நூல்நிலயப் பிரசுரம் விலை 3-2-0 Prof. P. ஸாம்பமூர்த்தி அவர்கள் பதிப்பித்தது.

ஸ்ரீ ஸாம்பமூர்த்தி அவர்களது முன்னுரையிலிருந்து ஒரே ஒரு பிரதியாகக் கிடைத்த இந்நூலைப் பேராசிரியர் அவர்கள் பரிசோதித்து வெளியிட்டிருப்பதாகத் தெரிகிறது. இது நாட்டிய சாஸ்திரத்தைப் பற்றியது. ஸம்ஸ்கிருத சுலோகங்களும் தமிழில் செய்யுள்களும் மிகுந்து காணப்படுகின்றன. இந்நூலில் காணப்படும் கலைச்சொற்கள ஆராய்ச்சிக்குரியனவாகும். 108 தாளங்களும் பிரிவுகளும் அங்கங்களும் ஆடல் சம்பந்தமான நுட்ப விஷயங்களும் வாத்யங்கள் அமைக்க வேண்டிய முறைகளும் இதர நூல்களில் காணப்படாத, தாளஸம்பந்தமான விஷயங்களும் ஹஸ்த ஸம்பந்தமான விஷயங்கள் பலவும் இந்நூலின் சிறப்பியல்புகளாகும். கேரள தேசத்தவர் ஒருவர் தாம் கண்ட முறைகளைச் செய்யுள்களிலும் சுலோகங்களிலும் அமைத்து நூலாகத் தொகுத்து வைத்தார் போலும்.

## CASEMENT BOOKLETS

1. Science and the People
2. Facts or Fiction
3. Chinese Puzzle
4. Art & Idiology    As. 4 each

Casement Publication L td oak chambers, 11, oak lane Fort Bombay-1.

பிரசாரத்துக்காக எழுதப்படும் எல்லா நூல்களின் பேரிலும் நமக்கு இன்றைய சூழ்நிலையில் சந்தேகம் ஏற்படுவது சகஜம். ருஷ்யர்கள் குவிக்கும் பொய்களை விழுங்குவதா, அமெரிக்கர்கள் திட்டும் சித்திரங்களில் சிக்குவதா என்று தவிக்கிறோம். முன் ஒரு காலத்தில் கார்தேஜின் செல்வத்தைக்கண்டு பொருமி அதை அழிக்கப் பிரசாரம் செய்த ரோம ஸாம்ராஜ்யத்தின் Cato (Major) ஸம்பந்தா ஸம்பந்தமில்லாமல் தம் ஒவ்வொரு பிரஸங்கத்திலும் Delenda-est Carthago என்று வீர முழக்கம் செய்வாராம். அதேபோல் இன்று ருஷ்யாவை-அல்ல-ருஷ்ய கம்யூனிஸ்ட் கொள்கையை நேர் முகமாகவோ மறை முகமாகவோ தாக்கியும் இகழ்ந்தும் புஸ்தகங்கள் அனேகம் வெளி வந்து கொண்டிருக்கின்றன. ஸ்டாலினுடன் ஸ்டாலினிஸம் மறைந்ததாக நம்பாத ஐரோப்பியர்கள் ஷீ பிரசார யுத்தத்தைத் தொடர்ந்து நடத்தி வருகிருர்கள்.

ஆனுல் கேஸ்மெண்ட் பப்ளிகேஷன்காரர்கள் அப்படிப் பச்சையாகப் பிரசாரப் போரில் இறங்கியவர்களல்ல. சில விஷயங்களைப் பொறுக்கி எடுத்துக் கோவையாக நமக்குக் கொடுத்துவிட்டு, தங்கள் அபிப்பிராயத்தை அப்பட்டமாகச் சொல்லாமல் முடிவை நம் அறிவுக்கு விட்டு விடுவார்கள் —

சைனுவில் கம்யூனிஸம் மக்கள் மீது திணிக்கப்பட்டு மேயோவைக் கடவுளாகப் போற்றிப் பணிந்து வரவும் அதற்கேற்பப் பள்ளிக்கூடங்களில் முதலே பிரசாரம் செய்யப்படுவதும்; கம்யூனிஸ்ட் கொள்கைப்படி சரித்திரத்தையே அப்பொழுதுக்கப்பொழுது மாற்றி மாற்றி எழுதி, ஆளும் குழுவினரைக் கொண்டாடவே கலைகளையும் கற்பனைகளையும் கம்யூனிஸ்ட் நாடுகள் துஷ்பிரயோகம் செய்து வருவதையும், பேராசிரியர்கள்கூட ஸ்டாலினைக் கொண்டாடுவதற்காகத் தங்கள் ஆராய்ச்சிகளை மாற்றி வெளியிடுவதும், ஆகவே வாழ்க்கையின் ஒவ்வொரு பகுதியிலும் சர்க்கார் பிரவேசித்து, தங்கள் விருப்பத்தை மக்கள் தலையில் சுமத்தி, அடிமைத் தளையைப் பூட்டி அதுவே மக்களின் விருப்பமும் ஆட்சி முறையும் என்று பறைசாற்றி வருவதும், 2, 3, 4, பிரசுரங்கள் நன்கு எடுத்துக் காட்டுகின்றன.

முதல் பிரசுரமான "விஞ்ஞானமும் மக்களும்" என்பதில் இன்று விஞ்ஞான வளர்ச்சிக்காகவும் ஆராய்ச்சிக்காகவும் செலவிடப்படும் பணம் மக்களின் பணம், அதனுல் மக்கள் தங்களுக்குத் தற்சமயத்துக்கு உபயோகப்படக்கூடிய அன்ருட வாழ்க்கைக்கேற்ற வசதிகளையும் யுத்தத்துக்கு உரிய ஆயுத தளவாடங்களையும் விஞ்ஞானிகள் வகுத்துத்தர வேண்டும் என்று விரும்புவது சகஜம் என்றும் ஆனுல் அவ்விதம் விஞ்ஞானிகள் இறங்கி விட்டால் ஆளும் குழுவினருக்கு அடிமைகளாகி விஞ்ஞானத்தின் உண்மை வளர்ச்சி குன்றிவிடும் என்றும் விஞ்ஞானத்தின் உயர்ந்த தொண்டு இயற்கை எவ்வாறு வேலை செய்கிறது என்பதை அறிவதே ஒழிய, இயற்கையை எவ்வாறு நமக்கு இயங்க வைக்கலாம் என்பதல்லவென்றும், விஞ்ஞான மோஹத்தில் நாம் கலைகளுக்கும் மதங்களுக்கும் கடவுள் நம்பிக்கைக்குப் பதிலாக விஞ்ஞானத்தைப் போற்றத் தொடங்கலாகாதென்றும், விஞ்ஞானத்தை, ஜ்யோதிடமாக்கி எத்தகைய நங்கையை காதலிக்கலாம், எந்த அரசியல் கக்ஷிக்கு 'ஓட்' செய்யலாம் என்பதுபோன்ற பிரச்னைகளுக்கு விடை சொல்லும் கருவியாக்காமல் காக்க வேண்டியது மக்கள் கடமை என்பது வலியுறுத்தப்படுகிறது.




4

ஐந்தாறுமெழுகு வத்திகள் காற்றிலே அசைந்தாடிய வண்ணம் எரிந்து கொண்டிருந்தன. அந்த வெளிச்சத்தில் புரட்சி வீரர்கள் பதின்மூவர் மிகவும் முக்கியமானவர்கள் கூடியிருந்தனர். எப்பொழுது எந்த வீரன் முக்கியமான ஒரு செயலைச் செய்து முடித்தாலும் அவர்கள் அந்தச் சம்பவங்களை யெல்லாம் அவன் வாய்மூலமாகவே விரிவாகக் கேட்பது வழக்கம். இன்று மகேசன் தன் செயல்களைச் சொல்லும்பொருட்டு அங்கே வந்திருந்தான். அவன் டெல்லியில் செய்த விஷயம் பரவியதும் ஒவ்வொருவரும் அவனை நேரில் கண்டு பாராட்டத் துடி துடித்தனர். பகைவனை ஒழிப்பது கொலையல்ல என்பதுதான் அவர்கள் கட்சி. இதற்கு முன் ஒருவரும் இவ்வளவு பெரிய அதிகாரியைக் கொன்றதில்லை.

இந்தக்கூட்டம் ஒரு காட்டிலே கூடியிருந்தது. இந்த மாதிரி சபைகளில் முக்கியமாக ஒவ்வொருவரும் கையில் கீதையை வைத்துக் கொண்டு 'முன்பு கூடியதிலிருந்து நாங்கள் பவித்திரமாக இருக்கிறோம். சங்கத்தின் எந்த நியமத்தையும் நாங்கள் மீறியதில்லை' என்று சபதம் செய்வார்கள். இன்றும் அப்படியே எல்லோரும் மிகுந்த ஆவேசத்தோடு சபதஞ் செய்தார்கள். ஆனால் கடைசியில் மகேசனது முறை வந்தபொழுது அவன் குரல் தழுதழுத்தது. ஆச்சரியத்தினால் மலர்ந்த கண்களுடன் அவனை ஏறிட்டுப் பார்த்தனர் மற்றவர்கள். ஆனால் இந்தக் கொலையின் காரணமாக அவன் குழம்பியிருக்கிறான் என்று நினைத்தனர்.

தலைவரின் கட்டளைப்படி மகேசன் எழுந்து நின்று தன் கதையைச் சொல்லத் தொடங்கினான். ஊர்வலம் தொடங்கியது முதல் வெடிகுண்டு எறிந்தது வரையில் உண்மையில் நடைபெற்றவைகளையேதான் சொல்லி வந்தான். ஆனால் அதற்குமேல் நடந்தவைகளை உள்ளபடி சொல்ல விரும்பவில்லை, ஆகவே பின்வருமாறு சொல்லானான்: "என் இராணுவ உடையுடன் சாந்தினி சவுக்கின் நடுவே புகுந்து செங்கோட்டையை நோக்கி நடந்தேன். இந்தச் சமயம் நாற்புறமும் பிடி! பிடி! என்று கூக்குரல் எழுந்தது. நான் மெதுவாய் நடந்து வேளியேறினேன்." கூட்டத்தில் சிரிப்பின் அலை பரவிற்று. போலீசார் புலிகள்தான் என்று இகழ்ச்சியுடன் கூடிய வார்த்தைகளும் எழுந்தன.

அவன் மேலும் பேசலானான். அங்கே சாந்தினி சவுக்கில் குதிரைப் படைகள் எல்லா வீடுகளேயும் சூழ்ந்துகொண்டன. நான் செங் கோட்டைப் பக்கம் வந்து ரயில்வே லயனைத் தாண்டித் திரும்பவும், செங்கோட்டையி லிருந்து ஏறச்குறைய நூற்றைம்பது சிப் பாய்கள் துப்பாக்கியுடன் கிளம்பினார்கள். நான் பயந்தே போனேன். இருந்தாலும் சமா ளித்துக் கொண்டு ஆங்கிலத்திலே உரத்த குரலில் 'சேனாதிபதியை எந்தப் பாவியோ கொன்றுவிட்டான்' என்று கூவினேன். உடனே அவர்கள் 'ஃபாலின்!' என்று சொல்லி அணிவகுத்து, சாந்தினி சவுக்கை நோக்கி விரைந்தனர்.

அவன் சீக்கிரமே கதையை முடிக்க விரும்பியவனாய், "அவர்கள் போனபிறகு மறு படியும் பயமாக இருந்தது. அங்கேயிருந்த ஒரு ஓட்டைப் பீப்பாய்க்குள் புகுந்து கொண்டேன். மறுபடியும் சேனைகள் வந்து விட்டன. தப்பியோட வழியில்லை. இரண்டு நாள் அந்தப் பீப்பாயினுள்ளேயே அடைந்து கிடந்தேன்" என்றான். தலைவன் "அடடா! என்ன துணிவு! என்ன சாகஸம்!" என்று புகழ்ந்தான். தலைவன் வாயினால் புகழுரை கேட்பது பெரிய பதவிக்குச் சமானம். ஆகவே கூட்டம் கோஷித்தது.

அவன் மட்டும் இந்தப் புகழுரையில் மகிழ வில்லை. ஆனந்தத்திற்குப் பதில் சோகத்தின் சாயை அவன் முகத்தில் பதிந்திருந்தது. "கடைசியாக அங்கிருந்து கிளம்பி இங்கே வந்தேன்" என்றான். ஆனால் கடைசி வாக்கியத்தைச் சொல்லும் பொழுது அவன் குரல் நடு நடுங்கியது. "ஏன் உனக்கென்ன உடம்பு சுகமில்லையா?" என்றான் தலைவன். "ஆம்!" என்று தலையசைத்தான் மகேசன்.

* * *

இந்துமதியின் நெஞ்சிலே மகேசனது மோகன வடிவம் குடிகொண்டு விட்டது. அவள் அவனை மீண்டும் சந்திக்க முடியாவிட்டாலும் அன்பைச் சுமந்துவரும் அவன் கடிதங்கள் அவளுக்குப் புத்துயிர் அளித்தன. ஆனால் அவை வந்த முறைகள் தான் விசித்திரம். ஏதாவது ஒரு பொருள் ரிஜிஸ்தர் தபாலில் வரும். அதற்குள் இந்தக் காதற்கடிதம் இருக்கும். அவளும் இம் மாதிரி மறைமுகமாகவேதான் தன் கடிதங் களையும் அனுப்ப வேண்டியிருக்கும். இப் படியே சில நாட்கள் நடந்தன. பிறகு படிப்படியாய்க் குறைந்து நின்று போயிற்று. நாள்தோறும் அந்தப் பார்ஸல்களுக்காகக் காத்துக் காத்து அவளுக்கு அலுத்துப் போயிற்று. நாட்கள் செல்லச் செல்ல எந்தப் பயங்கரமான புதிய விபத்தில் சிக்கிக் கொண்டானோவென்றும் அல்லது பழைய சம்பவம் கண்டு பிடிக்கப்பட்டு எந்த இரகசியப் போலீசாரிடம் கைதியாகி, காவலில் இருக்கிறானோ என்றும் கலங்குவாள் இந்து. உண்மையான காரணம் எதுவோ யாருக்கு என்ன தெரியும்?

அவனோ புரட்சிக் கூட்டத்தில் சேர்ந்த வன். பல வருஷங்களாக அவன் எதைப் பலஹீனத்தின் அறிகுறி என்று நினைத்தானோ அந்த வழியிலே இன்று விதிவசமாகத்தானே இழுத்துச் செல்லப்பட்டான். சூழ்நிலையின் சக்தியினால் இந்த நிலை நீடித்து நிற்க வில்லை. புதிய மோகத்தின் சக்தி அவனு டைய பழைய உறுதியான எண்ணங்களைச் சிதறச் செய்யவில்லை.

கடந்த சிலநாட்களாக எத்தனையோ விபரீதங்கள் நடந்து விட்டன. அவை களையே அவன் பெரும் வெற்றி யென்றும் கருதினான். கூட்டத்தில் தலைவன் என்ற பதவிக்கு உயர்த்தப் பட்டான். அது மற்ற எல்லோரும் அவன் கட்டளைக்குப் பணியக் கூடிய பதவி. ஆனால் பதவியினால் அவனுக் குச் சந்தோஷம் உண்டாகவில்லை. மனம் தெளிவின்றிக் குழம்பிக் கொண்டேதானிருந் தது.

எதிர் பாராத சந்தர்ப்பங்களினால் நான் பிரதிக்ஞையை இழந்து விட்டேன். கையிலே கீதையை வைத்துக் கொண்டு முழுப் பொய் சென்னேனல்லவா? என்ற எண்ணம் அவன் மனதுள் தோன்றித் தோன்றி, மறைந்து கொண்டேயிருக்கும். இந்துமதியின் இன் முகமும் அதை யொட்டிய இன்ப நினைவு களும் கூடவே எழும். பெருமூச்செறிவான். இவளால்தான் சபதத்தை முறித்துப் பொய் யும் சொன்னேம் என்றும் தோன்றும்.

இதனால் தான் கடிதம் எழுதுவதையும் நிறுத்தி விட்டானோ? காதலின் உண்மைத் தத்துவத்தை யறிந்தவர்கள் இதை அவ னுடைய பலஹீனம் என்றோ கோழைத்தனம் என்றோதான் சொல்லுவார்கள். இந்த விஷயத்திலே இந்துமதி அவனை விட எவ்வளவோ உயர்ந்த நிலையில் இருந்தாள்.

## 5

வெடி குண்டு வீச்சு விஷயமாகப் போலீசார் வெகு மும்முரமாகப் புலன் விசாரித்து வந்தனர். இந்தியாவின் மற்றப் பகுதிகளிலுள்ள ஸி. ஐ. டி. புலிகள் எல்லோரும் டெல்லிக்கு அழைக்கப்பட்டனர். டெல்லியைச் சுற்றிலுமுள்ள வட்டாரங்களில் முந்நூற்றுக்கு அதிகமான இளைஞர்கள் சந்தேகத்தின் பேரில் கைது செய்யப்பட்டனர். போலீசாரும் கை தினவு தீரும் வரையில் அடித்து நொறுக்கினார்கள். இந்த மகா புருஷர்களுடைய அபரிமிதமான கருணையினால் பல வீடுகளில் வெடி குண்டுகள் செய்யக்கூடிய தடையங்கள் இருந்ததாகச் சொல்லிக் கைப்பற்றி நாசமாக்கப்பட்டன. இது மட்டுமா? ஊர் பெயர் தெரியாத அப்பாவிகளின் வீட்டிலெல்லாம் இந்த வழக்கின் சம்பந்தமான கடிதங்கள் கண்டுபிடிக்கப்பட்டனவாம்!

இந்தக் கடிதங்கள் சம்பந்தமாக மீரட், லக்னௌ முதலிய இடங்களிலும் துழாவத் தொடங்கினார்கள். கடிதத்திலுள்ள குடும்ப விவகாரங்களுக்கெல்லாம் விபரீத வியாக்கியானம் கற்பித்து, அது அரசியல் சம்பந்தமானது என்று முடிவு செய்தார் ஒரு போலீஸ் மேதாவி!

போலீசார் இவ்வளவு தடபுடல்களும் தடியடித் தாண்டவங்களும் செய்தும் மேலதிகாரி வில்லியமும் உதவிக் கமிஷனர் மிஸ்டர் போஸும் திருப்தியடையவில்லை. இவர்கள் வேண்டாதவைகளைப் பிரமாதப் படுத்திப் போலீசாரிடம் பொது ஜனங்களுக்கு அதிருப்தி ஏற்படும் முறையில் நடந்து கொள்ளுகிறார்கள். இதனால் தகுந்த முறையிலே புலன் சேகரிக்க முடியாமல் தடைகள் ஏற்படுகின்றன என்று குறை கூறினார்கள்.

வில்லியம் பிட் துரையும் இப்படித்தான் நினைத்தார். அவலை நினைத்துக்கொண்டு உரலை இடிப்பதுபோலப் புரட்சிக்காரர்கள் மீதிருந்த கோப வெறியை ஊர்ப்பொது ஜனங்கள் மீது காட்டத் தொடங்கினார்கள். ஒரு வேளை புரட்சிக்காரர்கள் இவர்களிடமிருந்துதானே தோன்றியிருக்க வேண்டும் என்ற எண்ணமோ என்னவோ?

அகில இந்தியாவிலும் உள்ள ஸி. ஐ. டிக்களுக்குள் பேரும் புகழும் பெற்றவர் போஸ், அவருடன் உதவியாளாகக் கிருஷ்ண காந்தன் என்று ஒரு இளைஞன் இருந்தான். அவன் மத்திய மாகாணத்தான். வேலையிலே அசகாய சூரன். அவனைத் தட்டிக்கொடுத்து உயர்ந்த பதவிகள் கொடுப்பதாக ஆசைகாட்டித் தம்முடைய இந்த வேலைக்கு உதவியாக நியமித்துக் கொண்டார் போஸ். அவன் தோற்றத்திலும் நடத்தையிலும் பெரிய கௌரவமுள்ள பரம்பரையைச் சேர்ந்தவன் போல் காணப்பட்டான். போஸின் ஆலோசனைகளின்படி அவன் சில சமயங்களில் பெரிய வீட்டுப் பிள்ளையைப் போலவும், வைதீகப் பிராம்மணன் போலவும், பெரிய மைனர் போலவும் நடிக்கத் தொடங்கினான். இரவு போஸைச் சந்தித்துத் தான் அறிந்த செய்திகளைச் சொல்ல வேணுமென்பது ஏற்பாடு.

ஒரு நாள் வெடி குண்டு வீசப்பட்ட அன்று ஒரு அழகிய வாலிபன் தாசி தாராவின் மகள் இந்துமதியின் வீட்டிலே தங்கியிருந்ததாகச் செய்தி கொணர்ந்தான். இரண்டு நாட்கள் இந்துவின் வீட்டிலே தான் தங்கியிருந்திருக்க வேணுமென்று தீர்மானித்தான் அவன்.

"அது யாரப்பா அந்த இந்துமதி" என்றார் போஸ்.

அவன் விவரமாய்ச் சொன்னான். அவருக்கு ஏற்கனவே இந்துவின் வாழ்க்கையைப்பற்றி ஓரளவு தெரியும். போஸின் மகள் தாராவும் இந்துவும் ஒன்றாய்ப் படித்தவர்கள். இருந்தாலும் அவர் தமக்கு அவளைப்பற்றி ஏற்கனவே தெரியுமென்பதைக் காட்டிக் கொள்ளவில்லை. அவர் முகத்திலே ஆனந்தம் தாண்டவமாடிற்று. மறுநாள் அவர் ஒரு பிச்சைக்கார வேஷம் பூண்டு அவள் வீட்டிற்கருகே சுற்றிக்கொண்டிருந்தார்.

அவள் இந்துமதி, ஒரு சன்னலின் அருகே உட்கார்ந்து சிந்தையில் ஆழ்ந்திருந்தாள். தன் கையிலுள்ள ஏதோ ஒரு பொருளைப் பார்த்துக்கொண்டிருப்பது தெரிந்தது. போஸ் அவளைச் சில வருஷங்களுக்கு முன் பார்த்ததுண்டு. அவள் முன் போல் உற்சாகமாயில்லை என்பதை அவருடைய கழுகுக் கண்கள் நொடியில் கண்டு கொண்டன. இருந்தாலும் அவளைக் கவனியாதவர் போல் முன்னும் பின்னும் நடந்த வண்ணம் தீனமான கெஞ்சும் கண்களோடு அவளை ஏறிட்டுப் பார்த்தார். அதே சமயம் அவள் தலையின் மீதுள்ள முக்காட்டைச் சரி செய்து

கொள்ளும் பொருட்டு இடது கையைத் தூக்கினாள். அவள் ஒரு புதிய தங்க மோதிரம் அணிந்திருப்பது அவருக்குப் புலனாயிற்று. மிகுந்த உற்சாகத்துடன் திரும்பினார் அவர்.

## 6

இந்தச் சம்பவம் நடந்த ஒரு வாரத்திற்கெல்லாம் இந்துவின் காந்தள் விரல்களை அலங்கரித்த அந்த மாயமோதிரம் மறைந்து போயிற்று. அப்பொழுதுதான் ஒரு புதிய வேலைக்காரி அமர்ந்திருந்தாள். அவள் ஒரு ஏழைக் கிழவி. அவளை ஒருவரும் சந்தேகிக்கவுமில்லை. இந்து ஒரே விசனத்தில் ஆழ்ந்துபோனாள். அந்த மோதிரம் சேரவேண்டிய இடத்தைச் சேர்ந்துவிட்டது. அதில் மஹேசன் என்ற பெயரைப் பார்த்தவுடனேயே தம்முடைய பழைய நோட்டுப் புத்தகத்தைப் புரட்டினார் போஸ். ஏதோ ஒரு பழைய சம்பவத்தின் அடியில் உள்ள பெயர்களின் குறிப்பில் பல பெயர்களுக்கு இடையே மஹேசசந்திரன் என்ற ஒரு பெயர் காணப்பட்டது. அதில் நான்கு முக்கியமான அடையாளங்கள் இருந்தன. இளைஞன். அழகன். துணிச்சலுள்ளவன், புரட்சிக்காரன் என்பவைகளே.

போஸின் இதயம் ஆனந்த மிகுதியினால் துடி துடித்தது. எது எப்படி இருந்தாலும் அவன் இந்தச் சம்பவத்திலே ஈடுபட்டுத்தானிருப்பான் என்று முடிவு செய்தார் அவர்.

ஆனால் இந்த மஹேசசந்திரனைப் பற்றி எப்படித் துப்பு விசாரிப்பது? என்ற சிந்தையிலேயே இரண்டு மூன்று நாட்கள் மூழ்கிக் கிடந்தார். அவருக்கு இந்துவை நன்றாய்த் தெரியும். அவள் குணவதி, குலவதி, என்றும் தெரியும். சாதாரண்மான ஒரு தாசியாயிருந்தால் பணத்தைக்கொண்டு சில காரியங்களைச் சாதிக்க முடியும் இவ் விஷயத்தில்? —— வேறு எந்தத் தந்திரத்தைக் கையாளலாம். ... ... ... உண்மையிலேயே அந்த இந்துமதி போற்றத்தக்கவள்தான் என்று நினைத்தார்.

சின்னஞ்சிறு குழந்தைப்பருவம் முதல் தாம் கண்டும் கேட்டுமிருந்தவள் இந்து. உலகம் அவளது குணத்தைப் புகழ்ந்தபொழுது அவரும் அவளைப்பற்றிக் கௌரவமாகவே தான் நினைத்தார். மதித்தார். அவள் வாழ்நாள் முழுவதையும் தனிமையாகவே கழித்து விடுவாளோ என்றும் அவர் நினைத்ததுண்டு.

ஆனால் நடந்ததென்ன? முன்பின் பரிச்சயமில்லாத ஒருவன் மீது அன்பைப் பொழிந்திருந்தாள். அந்த அதிசயமான காதலனோ இரண்டே நாளில் அவளைப் பிரிந்து போனான். அவன் மீண்டும் வருவானோ? வராமலே இருந்துவிடுவானோ? யாருக்குத் தெரியும்? ஆனால் மிஸ்டர் போஸ் மட்டும் அவள் மீண்டும் அவனை அழைக்கமுடியாது என்றுதான் நினைத்தார்.

போஸுக்குச் சாமான்ய மனோ தத்துவங்கள் நன்றாய்த் தெரியும். உண்மைக்காதல் தியாகத்தை அடிப்படையாகக் கொண்டதே தவிர, போகத்தை அடிப்படையாகக் கொண்டதல்ல என்பதுதான் அவர் கட்சி. காதலும் தன்னலமும் ஒரே நெஞ்சில் இடம் பெறா. அவள் ஒரு உண்மையான காதலியாயிருந்தால் அவனைக் காட்டிக் கொடுப்பாளா? ஒருநாளுமில்லை —— என்று நினைத்தபொழுது அவர் சிந்தனை தடைபட்டது.

எந்த விதமாய்த்தான் அவனைக் கண்டு பிடிப்பது? என்ற ஒரே கவலைதான் அவருக்கு. வாரம் ஒன்றாயிற்று. இரண்டும் ஆயிற்று. நல்லயோசனைகள் ஒன்றுமே தோன்றவில்லை அவருக்கு. கடைசியில் உண்மைக் காதலர்களையும் தோல்வியுறச் செய்யும் ஒரு தந்திரத்தைக் கண்டுபிடித்தார் அவர்.

"இனாம்! இனாம்!! இனாம்!!! இருபத்தையாயிரம் ரூபாய். சென்ற பிப்ரவரி மாதம் இருபத்து மூன்றாம் தேதி சாந்தினி சவுக்கில்......ரைக் கொலை செய்த மஹேசசந்திரன் எங்கேயோ ஒளிந்திருக்கிறான். நல்ல சிவப்பு. உருண்டை முகம், பெரிய கண்கள், நல்ல வாட்ட சாட்டமான உடல். பார்ப்பதற்குக் கண்ணியமான இளைஞனைப் போல் காணப்படுவான். இந்த மனிதன் அலகாபாத்திலுள்ள ஒரு தாசியின் வீட்டில் பிடிபட இருந்தான். தற்செயலாய்த் தப்பி ஓடி விட்டான். மூன்று நாட்களாய் அந்தத் தாசிப்பெண்ணையும் காணோம். ஒரு வேளை அவன் இருக்குமிடத்திற்கே போயிருக்கலாம். அந்தப் பெண் நல்ல கட்டழகி. அவளது இடது கை மணிக்கட்டின் மேல் ரஹ்மத் உன்னீஸா என்று பச்சை குத்தப்பட்டிருக்கும். இவ்விருவருக்கும் உள்ள நட்பைப்பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. மஹேச சந்திரனை உயிருடன் பிடித்துக் கொடுத்தாலும், அல்லது அவனைப்பற்றிய தகவல்களைத் தெரிவித்

தானும் ரூபாய் இருபத்தையாயிரம் இனும். ரஹமத் உன்னீஸாவைப் பிடிப்பவர்களுக்கு ரூபாய் ஐயாயிரம்.

என்று முக்யமான பத்திரிகைகளிலெல்லாம் விளம்பரப் படுத்தப்பட்டிருந்தது. இந்த விளம்பரங்கள் மாஜிஸ்டிரேட்டின் கையெழுத்துடன் கொட்டை எழுத்தில் சுவர்களிலும் ஒட்டப்பட்டன. இம்மாதிரி யான ஒரு சுவரொட்டி இந்துமதியின் வீட்டிற்கு எதிர் வீட்டுச் சுவரிலும் ஒட்டப்பட்டது.

சாயங்காலம், இந்துமதி பொழுது போகாமல் வீதியின் புறமுள்ள சன்னலின் அருகே வந்து உட்கார்ந்தாள். தற்செய லாய் எதிரேயுள்ள விளம்பரம் அவள் கண்ணில் பட்டது.

இந்த விஷயங்களைப் படிக்கும்பொழுது அவளது கைகளும் கால்களும் வில விலத்தன. முகம் வெளுத்தது. ஆலகால விஷத்தைக் குடிப்பவள் போல் காணப்பட்டாள். முழுவதையும் மீண்டும் மீண்டும் பன்முறை படித்தாள். படித்து முடிந்ததும் தன் கண் களையே அவள் நம்பவில்லை. இந்த வாச கத்திலும் அவளுக்கு நம்பிக்கை ஏற்பட வில்லை. இதென்ன? கனவா? நினைவுதானா? என்று மீண்டும் படித்தாள். அதே விஷயம், அதே வாக்கியங்கள். ஐயோ! என்று அலறினாள் அவள். மூர்ச்சித்துக் கீழே விழுந்து விட்டாள். அன்பினால் நிறைந்த அவள் இதயம் இப்பொழுது சந்தேகம், பொறாமை என்ற விஷங்களினால் நிறைந் தது. இதயம் தூள் தூளாய்ச் சிதறிப் போவதுபோல் தோன்றிற்று.

அவள் மூர்ச்சித்து விழுந்த சத்தம் கேட்டுப் பணிப்பெண்கள் ஓடி வந்தனர். முகத்திலே தண்ணீரை வாரி இறைத்துத் தூக்கிப் படுக்கையில் கிடத்தினார்கள் ..... இடையிடையே சிறு முணகல், பிதற்றல்... அடாடா! ... துரோகம்... மனிதன் கேவலம் இவ்வளவு அற்பனா? துரோகி... எண்ணவும் முடியவில்லையே... என்றெல்லாம் உளறினாள். இம்மாதிரியான பல பிதற்றல்களுக்கிடையே மஹேசனது இருப்பிடமும் வெளிவந்தது.

மிஸ்டர் போஸ் எதிர்பார்த்தபடி சந்தேக மென்னும் விஷயத்தின் மூலம் மெய்யன் பையும் எதிர்த்து வெற்றி பெற்று விட்டார். அந்தத் தெய்வீகக் காதலை ஒரு நொடியிலே தூள் தூளாகச் சிதறிப்போகும்படி செய்து விட்டார். அவருக்கு வேறென்ன வேண்டும். இந்துவிடம் எதிர் நின்று விசாரிக்க வேண் டிய அவசியமே இல்லாமல் விலாசமும் கிடைத்து விட்டது.

* * *

**ம**று வாரம் தினசரிகளில் புரட்சிக்காரா களுள் மிகவும் பயங்கரமானவனான மஹேச சந்திரன் கோரக்பூரில் கைதி செய்யப்பட்டான் என்ற செய்தி வெளியாகி இருந்தது. மேலே சொல்லுவானேன்! அவ்வளவு தான்!



# பட்டணம் பார்!

**ஆர். பி. அய்யங்கார்**

கல்யாணம் பண்ணியும் பிரும்மச்சாரி என் பார்களே அப்பேர்ப்பட்டவர்கள் பட்டணத்தில் ஏராளம். சாப்பாடு ஹோட்டல்களில் அவர்களை ஸகஜமாகப் பார்க்கலாம். வெளித்தோற்றத்தைக் கண்டு ஏமாந்துவிடலாகாது. ஹாய்யாகப்பொழுதைப் போக்குகிறார்களென்றே படும். ஆனால், உள் வேதனை அவர்களை உருக்கியெடுக்கும். குடும்பம் வைக்கக் கொள்ளை ஆசை. குதூகலமாக வாழ்க்கை நடத்தலாமென்ற கனவுகள் வேறு. குடிக் கூலிக்கு இடம் கிடைக்காமல் தான் த்ரிசங்கு ஸ்வர்க்கிகளாகத் திண்டாடுகிறார்கள்! ஓய்வு நேரங்களில் வீட்டுக்காகத் தேடி அலைவதே அவர்களது பொழுதுக்கும், பாடுக்கும் சரியாய் விடுகிறது. கல்லோ, மண்ணோ, காரமோ, புளிப்போ, வெந்ததோ, வேகாததோ எதுவானாலும் வேண்டா வெறுப்பாக விழுங்கி, ஹோட்டலே கதியென நாட்களை ஓட்டிக்கொண்டிருக்கிறார்கள். வீட்டுப் பஞ்சத்தால் ஹோட்டல்களில் வியாபாரம் சக்கைப் போடு. ஆனால், உட்கொள்ளும் ஆகாரம் உடம்புக்கு ஒத்துக் கொள்ளாமல் காலச் சுழலில் வாடிக்கைக் காரர்களே சக்கைகளாக வெளியே தள்ளப் பட்டுவிட்டால், அப்புறம்?

ஹோட்டலிடமே திரும்பத்தஞ்சம் புகுவது பிசகு. அதற்கு ஒரு கும்பிடு (முழுக்குப் போடச் சொல்லவில்லை!) போட்டுவிட்டு, ஏதாவது ஒரு வீட்டையோ, அதன் பகுதியையோ சம்பளத்துக்கு ஏற்றபடி பேசி முடிக்க வேண்டியதுதான். சகல சௌகரியங்களும் நிறைந்த, நேர்த்தியான, ஜாகைக்குக் கச்சிதமான வீடு, வாடகைக்கு அகப்படுவது சுலபமல்ல. சுயமாகக் கட்டினாலொழிய எதிலும் சொத்தல், பொத்தல் இருக்கத்தானிருக்கும். ஒன்றுக்கொன்று ஒவ்வொரு விதத்தில் 'ஒன்றரைக்கண்' தான்! பட்டணத்தை நம்பி வாழ வந்த பிறகு 'பல்லைப் பிடித்துப்பார்ப்பது' எதற்கு?

நகரில் ஜனத்தொகை நாளுக்கு நாள் ஏறிக் கொண்டேயிருக்கிறது. தற்போது பதினைந்தரை லக்ஷத்துக்குக் குறைவில்லை. எறும்புப் புற்றுபோல் மண்டிக்கிடக்கின்றனர் மக்கள். வீடுகளின் எண்ணிக்கையோ ஆமை வேகத்தில் வளருகிறது.

ஜனங்கள் பல ரகம், வீடுகளும் பலவிதம். பலதரப்பட்டவர்களின் வாழ்க்கையை எடுத்துக் காட்டும் குறுக்குக் கீற்று திருவல்லிக்கேணியே. குபேர வாழ்வும், குசேலப் பிறப்பும் பின்னிக்கொண்டிருக்கும். வீடு, வீடாகவே தோன்றாது. புறாக்கூண்டு என்று அழைத்தால் பொருந்தும். ஒரு சில வீடுகள் மட்டுமே, விஸ்தாரமாக இல்லாவிட்டாலும், வெளிக் காம்பவுண்டுடன் பங்களா பாஷனில் புதிதாகக் கட்டப்பட்டிருக்கின்றன. பழங்கால வீடுகளோ நெருக்கமாக 'தோளோடு தோள், நின்று புதுமையின் 'தான்தோன்றித் தனத்தை' பரிகசிப்பது போலிருக்கும்.

ஸ்ரீரங்கம் கோவிலில் 'ஐந்துகுழி மூன்று வாசல்' பிரசித்தம். திருவல்லிக்கேணியிலோ வாடகை வீடுகள் அநேகமாக அப்படியே! ஒரே வீட்டில் ஒன்பதிலிருந்து பன்னிரண்டு ஒண்டுக்குடித்தனங்கள்கூடப்பார்க்கமுடியும். குறைந்தது ஒரு குடும்பத்துக்கு மூன்றுபேர் என்று கணக்கிட்டாலும் பன்னிரண்டு குடித்தனத்துக்கு முப்பத்தாறு பேர்கள்! என்ன தான் பெரிய வீடாக இருந்தாலும் அவர்கள் 'க்யூ' வில் நிற்காமல் எதையும் செய்ய முடியாது. 'எண்ஜாண்' உடம்பை ஒடுக்கி, நடமாட்டங்களையும் குறைத்துக் கொண்டால் சங்கடமிராது. இல்லையோ உள்பூசல் உபத்திரவம் ஓங்கும்.

புதுத்தம்பதிகளாகஇருந்தால் பிச்சுப்பிடுங்கல் மட்டு. பிறருக்கும் அவர்களால் அதிகத் தொந்தரவு இராது. பெரும் குடும்பஸ்தர்களுக்கோ 'பரிவாரங்களை' கட்டி மேய்ப்பதற்குள் பொறுமை விடை பெற்றுச்சென்று விடும்! பிறகு அமளிக்குக் கேட்பானேன். கூச்சலும், குழந்தைகளின் அழுகையும் துரித கதியில் உச்சஸ்தாயிக்குத்தாவி, தெரு வழியே போகிறவர்களை நிறுத்தக்கூடிய அளவுக்குத் தண்டோரா போட்டுவிடும். படிப்படியாக இரைச்சல் தணிந்து, முணகலெல்லாம் முடிய அரை மணியாவது ஆகும். ஒண்டுக் குடித்தனங்கள் உள்ள வீட்டில் இத்தகைய நிகழ்ச்சிகளைத் தவிர்க்க முடியாது. ஈடு கொடுத்துத்தான் இழைந்து போக வேண்டும்.

பலபேர் கூடி வாழ்வதற்கேற்பத் திருவல்லிக்கேணியில் சௌகரியமாக வீடுகள் இருப்பதாகத் தோன்றவில்லை. ஏதோ அடைந்து கிடக்கிறார்களேயொழிய எவரிடமும் ஆத்ம திருப்தி காணோம். 'குழாயில் ஜலம் வருவதில்லை, காற்றோட்டம் போதாது, சூரிய வெளிச்சமே விழுவதில்லை, கக்கூஸ்கள் குறைவு'—இவ்வாறெல்லாம் அவரவர்களுக்குள்ளக் குறைகளைக் கிளிப்பிள்ளை மாதிரி சொல்லிக்கொண்டே காலத்தைக் கடத்துகிறார்கள்.

பொதுவாகத் திருவல்லிக்கேணியில் ஜலக் கஷ்டம் கிடையாதென்றாலும் மேட்டுப் பாங்கான வீடுகளில் குழாய்கள் 'மக்கர்' செய்வது வாஸ்தவமே. உருமி, இருமி, விக்கி, கடைசியாக ஜலத்தைக் கொஞ்சம், கொஞ்சமாகக் கக்குகிறது! குறை குடம் நிறையக் கால் மணி ஆகிறது. வீட்டுக்காரருடன் ஒண்டுக் குடித்தனம் இருப்பவர்கள் இஷ்டப்படி ஜலம் பிடிப்பது இயலாது. அவருக்கெனப் பிரத்யேகக் குழாய் இருக்கும். அதைத் திறந்து விட்டால் குடித்தனக் காரர்களுக்குள்ள பொதுக் குழாயில் ஜலம் மயிரிழையாக இளைத்து விடும்! சாதாரண குழாய்களுக்கே இந்தப்பாடு. இவற்றைவிட மோசம் 'அடிக்கிற பம்புகள்'. அடியாத மாடு படியாது. ஆகவே, முன்னும் பின்னுமாகவோ, மேலும் கீழுமாகவோ அடிக்காது போனால் ஜலம் வராது. கைப்பிடியை அசக்கி வேகமாக ஆட்டினால் (ஆட்டுவது அடிப்பது போலத்தான் சத்தம் கேட்கும்) குழாய் வாயிலெடுக்கும்! அதாவது ஒரே சீராக விழாது. 'குபக் குபக்' கென்று விட்டு விட்டுக் கொட்டும். மாடி வீடாக இருந்தால் ஜலத்தை அடித்து மேலேற்றுவதற்குள் பிராணன்மேல்லோகத்துக்குப்போய், திரும்பி விடும்! மாற்றுக்கை போட்டுப் பிடியை விடாதிருந்தால் தண்ணீர் தடங்கலின்றிப் பாயும். கொஞ்சம் அசந்து போனாலோ ஜலம் கீழ் மட்டத்துக்கு நழுவிவிடும். பழையபடி மேலே கொண்டுவர முயற்சிப்பதைவிடக் கீழேயே இறங்கி, அசௌகரியத்தைப் பாராமல் காரியங்களை முடித்துக் கொள்வது மேல். திருகு குழாய், 'அடிபிடி குழாய்' இரண்டுமே ஸ்டிரைக் செய்தால் கிணறுகள் இருக்கவே இருக்கு. ஆழத்தில் இருந்தாலும் ஆபத்துக்கு உதவும் சுரப்பு ஊற்றுகள் அவையே. வெயிலில் நின்றால்தான் நிழலின் அருமை தெரியும். கஷ்டம் வந்தால்தான் கிணற்றின் பெருமை புரியும். நாகரிக வாழ்க்கைநொடியும்போதெல்லாம் கர்நாடக குண விசேஷமுள்ள வசதிகள் 'உறவை விட்டுக் கொடுப்பதில்லை' என்பதற்கு இப் பட்டணத்துக் கிணறுகளே போதிய சான்று.

வீடுகள் இடம் விட்டுக் கட்டப்படாததாலும், எதிரும்புதிருமாக நிற்பதாலும் காற்றோட்டத்துக்கு வழி கிடைப்பதில்லை. ஜன்னல்கள் ஒன்றுக்கு நான்காக இருந்தாலும் புழுக்கம் பிழிந்தெடுக்கும். சொந்த வீட்டுக்காரர்கள் மின்சார விசிறிகளை முடுக்கிவிட்டு விச்ராந்தியாக வாழலாம். ஆனால் சாதாரணப்பட்டவர்கள் திணறிக் கொண்டிருப்பார்கள். பீச் அருகே உள்ளவர்கள் சமுத்திரக் காற்று வாங்க முடியும். எட்டியிருப்பவர்களோ வாரத்துக்கு ஒரு நாள் அதுவும் ஞாயிறு விடுமுறையில் கடற்கரைப் பக்கம் தலை காட்டி நல்ல காற்றை உள்ளிழுப்பார்கள்!

சில வீடுகளுக்குள் சூரிய கிரணங்கள் பிரவேசிப்பதே கிடையாது. எக்கச்சக்கமாக, அடர்த்தியான இடத்தில் அவை அகப்பட்டுக் கொண்டிருப்பதே இதற்குக் காரணம். முன்னாலோ, பின்னாலோ, பக்கத்திலோ பெரும் மாடிவீடுகள் இருக்கும். இவை வெளிச்சத்தை விடாமல் தடுத்துவிடும். அப்படித் தப்பித் தவறி நுழைந்தாலும் வாசல் வராந்தாவோடோ, நடு முற்றத்தோடோ நின்று விட்டு மறைந்து போகும். பிறகு உள் கூடம், சமையல் கட்டு, சாமான் அறை எல்லாமே இருட்டுத்தான். விளக்கேற்றினாலொழிய காரியங்களைச் செய்ய முடியாது. என்ன விசித்திரமான வாழ்வு?

பசையுள்ள பேர்வழிகள் பணத்தை வாரி இறைத்து நல்ல வீடுகளாக வாடகைக்கு அமர்த்திக்கொள்கிறார்கள். ஏழைக் குமாஸ்தாக்களும், அவர்களுக்குக் கீழ்ப்பட்டவர்களும் குடிக்கூலிக்குக் காசைக்கொட்டி அளந்து விட்டால் அப்புறம் வயிறு காயவேண்டியது தான். அட்வான்ஸ் தொகை அதிகம் கொடுக்கக் கூடாதென்கிறது சட்டம். தடையைத் திரை மறைவாக நின்று தாவிக் குதித்தால் அப்பேர்ப்பட்டவர்களை என்ன செய்யமுடியும்? உணவுக் கட்டுப்பாடு எடுபட்டதில் நன்மை காண்கிறோம். அதே போல் ஜாகை வசதிக் கட்டுப்பாடும் நீங்கினால் நகரவாசிகள் பெரும் மூச்சுவிட இடம் ஏற்படும்.



# உறவு

கே.வி.கே.

ஐந்நூறு நோயாளிகள் தங்கியிருந்தும் அமைதியுடன் விளங்கிய அந்த க்ஷயரோக ஆஸ்பத்திரியின் கட்டிலொன்றில் அவன் படுத்திருந்தான். தேக சுகம் பெற்றிருந்த புற உலக மக்களுடன் வாழ்ந்திருந்ததைவிட, இந்நோயாளிகளுடன் இருந்து நோயை அனுபவிப்பதில் அவனுக்கு ஆறுதல் இருக்கத்தான் செய்தது. ஒரு வருடமாக நோயையே துணையாகக்கொண்டு படுத்திருந்தவனுக்கு அந்நோயைப் பிரியக்கூட மனமில்லாமல்தானே போய்விட்டது. உடன் பிறந்தது அவ்வளவு சுலபமாக உடலைவிட்டுப் பிரிகிறதா! இந்த நோய்க்கு இருக்கும் அத்தனை பாசம்கூட மனிதர்களுக்கு இல்லாமல்தானே பிரிந்துபோய்விடுகிறார்கள்! வறுமையிலும் துன்பத்திலும்கூட கடைசிவரை கைவிடாமல் இந்நோய் நிற்கவில்லையா—உற்ற நண்பனைப் போல!

கட்டிலில் புரண்டு படுத்தவன், அருகில் மருந்துடன் நர்ஸ்வந்துநிற்பதை உணர்ந்தான். அஸ்வாரஸ்யமாய் வாயைத்திறந்தவன் அப்போதே அந்நர்ஸை உற்று நோக்கினான். இவ்வளவு நாட்களாய் இருந்தவள் மாறி, இன்று புதிதாய் வந்திருந்த இவளைக் கண்ட அவன் கண்கள் அகல விரிந்தன. வியப்பின்மிகுதியால் அவன் வாயில் ஊற்றப்பட்ட மருந்தைக்கூட விழுங்க முடியாதவனாகிவிட்டான் சற்றுநேரம்.

மாலதி! ஆம். நாலைந்து வருஷங்களுக்கு முன் அவனுடன் படித்தவள். எப்படி மாறிவிட்டாள்! குறுகுறுப்பும், சிரிப்பும் சதா பொங்கும் அவள் முகம் இப்போது சலனமற்றுச் சாந்தியுடன் விளங்கவில்லையா. அவள் அணிந்திருந்த ஆஸ்பத்திரி உடைகூட அவள் தோற்றத்திற்குக் கண்ணியமான அமைதியை அளித்திருக்கிறதே!

அவள் அவனை அடையாளம் கண்டுகொள்ளவில்லை. ஒட்டி உலர்ந்த முகமும், குழிந்துவிட்ட கண்களும், அடர்ந்த தாடி மீசையுமாய் இருந்த அவனை யார்தான் அடையாளம் கண்டுகொள்ள முடியும்!

மருந்தைக்கொடுத்துவிட்டு நேராகத் தன்னிடத்திற்குச் சென்றுகொண்டிருந்த அவளை வெறித்து நோக்கிய அவன் ஒரு கணம் அவளைப் பெயர் கூறி அழைக்க எண்ணினான். ஆனால் ஏனோ உடனேயே அவ்வெண்ணத்தை மாற்றிக்கொண்டு கட்டிலில் முனகலுடன் திரும்பிப் படுத்தான். தன்னை இன்னானென்று அறியாமல் கடமையைச் செய்யும் அவளிடம் தான் யார் என்பதைக் கூறி அவள் மனத்தில் சலனத்தை ஏற்படுத்தவா வேண்டும்! ஏற்கனவே ஒரு முறை அவள் மனதைச் சிதைத்தது போதாதா! அதன் விளைவுதானே இன்று இவள் இப்பணியில் ஈடுபட்டிருக்கிறாள்! தளிர் போன்ற அவள் உள்ளம் காகிவிட்டதில்தானோ என்னவோ அவன் வாழ்வே கருகிக்கொண்டிருக்கிறது!

இப்போது நடப்பது போல்தான் இருந்தது. அவன் அவளுடன் சேர்ந்து படித்துக் கொண்டிருந்தான். எத்தனையோ மாணவ மாணவிகளின்

மத்தியில் அவர்கள் இருவர் மட்டும் எப்படித்தான் ஒருவரை யொருவர் புரிந்து கொண்டனரோ தெரியாது. வெகு சீக்கிரத்திலேயே அவர்கள் நட்புப் பழுத்துவிட்டது. பாட புத்தக சம்பந்த மாகப் பேச்சுத் தொடங்கி, பொது விஷயங்களைப் பேசித் தீர்த்து, கடைசியில் சொந்த விவகாரங் களில் ஒருவருடன் மற்றவரும் ஈடுபட ஆரம்பித் தனர். சிட்டாகப் பறந்து சென்ற அந்நாட்களில் அவர்கள் தம் மனோ நிலையைக்கூட ஆராயப் பொழுதற்றவர்களாகத்தான் இருந்தனர்.

குதூகலத்துடன் எப்போதும் மலர்ந்திருந்த அவள் வதனம் அவனை ஆட்கொண்டு விட்டிருந் தது. குழந்தையுள்ளத்துடன் வெளுத்ததெல்லாம் பாலாக எண்ணிப் பேசும் அவளிடம் அவன் பூரண பாசத்தையும் சொரிந்திருந்தானே யன்றி, காதல் என்ற எண்ணித்திற்கே இடமில்லாமல் தான் இருந்தான். ஆம்! அவனுக்காக மாமா பெண் ஜயந்தி காத்துக்கொண்டிருக்கவில்லையா! ஈருடலும் ஓருயிருமாய் இளமை முதல் சேர்ந்து ஆடிப்பாடி வளர்ந்த அவ்விருவரும், ஒருவருக் காக மற்றவர் படைக்கப்பட்டவராகத்தானே எண்ணி வந்தனர். அவர்கள் மத்தியில் மாலதி குறுக்கிடமுடியுமா?

ஆனால் அவன் மனத்தை மாலதி அறிந்து கொண்டாளா! அவளையே விழுங்கி விடுபவன் போல் பார்க்கும் அவன் கண்களில் அன்பு வெள்ளத்தையே கண்டாள் அவள். அவன் பேச்சிலும் நடையிலும் தோன்றிய கனிவு அவள் இருதயத்தின் ஆழத்தைத் துழாவின. ஆண் சிங்கம்போல் விளங்கிய அவனிடம் தன் மனதை அப்படியே பறிகொடுத்து விட்டிருந் தாள். அவனில்லாத வாழ்வு பயனற்றது என்றே அவளுக்குப்பட்டது.

உற்சாகமான நாட்கள் கடைசியில் ஒரு முடி வுக்கு வந்துதானே ஆகவேண்டும். அந்த வருஷத் துடன் அவன் தன் படிப்பை முடித்துக்கொண்டு ஊருக்குப் புறப்பட ஆயத்தம் செய்து கொண் டிருந்தான்.

அவள் மனதில் ஏக்கம் குடி கொள்ளத் தொடங்கியது. அவனைப் பிரிந்து அவள் இருப் பதா! இத்தனை நாட்கள் சேர்ந்து ஓடியாடி மகிழ்ந்ததெல்லாம் இதற்குத்தானு! அவன் என்னவோ ஒரு நாள் கூட இப்பிரிவைப்பற்றிப் பிரஸ்தாபிக்கவில்லை! அதற்காக வருத்தமடைவ தாகக்கூடக் காண்பித்துக்கொள்ளவில்லை! உண் மையில் அவனுக்கு வருத்தமேயில்லையா! அவன் வாழ்வில் அவள் முக்கியத்துவம் பெறுமலேயே இருந்திருக்கிருள்!

துணிந்து அவனிடமே இதைக்கேட்டுவிட்டாள் ஒரு நாள்.

"சந்தர்! ஊருக்குப் போகப்போகிறீர்களா!"

"ஆமாம். மலாதி! போகத்தானே வேண்டும்! இனி இங்கென்ன வேலை..."

ஒரு நிமிஷ மௌனத்திற்குப்பின் அவள் கேட்டாள்.

"இங்கு வேலையே இல்லையா, நிச்சயமாய்...!"

அவன் தலை நிமிர்ந்து நோக்கினுன். பீச்சுக் கரையோரத்தில் உட்கார்ந்திருந்த அவர்கள் ஏறக்குறைய ஏகாந்தமாய்த்தான் இருந்தனர். அவள் மணலில் ஏதோ எழுதி எழுதி அழித்துக் கொண்டிருந்தாள்.

"ஏன் மாலதி, இங்கு என்ன காரியம் இருக் கிறது என்கிறுய்...? உனக்கு ஏதேனும் ஆக வேண்டுமா...!"



அவள் சிரித்தாள் வேறு பக்கம் தலையைத் திருப்பிக் கொண்டு. மறுபடியும் அவள் திரும்பியபோது அவன் கண் களில் நீர் மின்னியது. வியப் புடன் அவளையே வெறித்துப் பார்த்தவனிடம் பெருமூச்சு டன் கூறினுள்.

"ஒன்றுமில்லை, சந்தர்! எனக்கு ஒன்றும் ஆகவேண் டாம்...! மாருத உங்கள் அன்பு மட்டும் இருந்தால் போதும்...!"

"ஒரு நாளும் என் அன்பு மாருது..." என்று கூறியவன் சட்டென நிறுத்தி அவளையே உற்று நோக்கினுன் ஒரு நிமி ஷம். அவள் குரலும் தோர ணையும், விரக்தியும் அவன்

மனத்தில் ஐயத்தை உண்டாக்கின. தான் அவள் மேல் வைத்த பாசத்திற்கும், அவள் தன் மேல் கொண்ட அன்புக்கும் வித்தியாசம் இருக்கிறதா என்ன! கடவுளே! அவள் வேறு விதமாகவா எண்ணி வந்திருக்கிறாள் இத்தனை காலம்!

"மாலதி! என்ன இது! ஏன் இப்படி அழுகிறாய்! உன் மனதைத்தான் திறந்து கூறேன்...!"

அவளிடமிருந்து விசும்பல்தான் வெளிப் போந்தது. இதைவிட இன்னும் எப்படி மனதைத் திறந்து காட்டுவது!

"சந்தர்! நீங்கள் இல்லாமல் என்னால் இருக்க முடியாது! உங்களையே நம்பினேன்!"

அவன் அசந்து விட்டான். தான் பயந்தபடியே தானே நடந்து விட்டது. கள்ளம் கபடமற்ற மாலதி அவனை இரகசியத்திலேயே காதலித்து வந்திருக்கிறாள்! அவள் காதலைப் புறக்கணித்து விட்டு எப்படி அவன் போவது!

சோர்ந்திருந்த அவள் முகத்தைப் பார்த்த அவனுக்குப் பச்சாத்தாபமேற்பட்டது. பாவம். அவள் இளம் உள்ளத்தை அவன் பறித்துக் கொண்டு அவளைத் தனியே விட்டுத்தானே போகிறான்!

அவள் அவனுக்கு உயர்ந்தவள்தான். ஆனால் அதற்காக ஜயந்தியை அவன் கைவிட்டுவிட முடியுமா! குழந்தைப் பருவம் முதல் அவனுடனேயே வளர்ந்த அவளுக்கு அவன்தானே எல்லாம்.

"மாலதி! ஊரில் ஜயந்தி எனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறாளே...!"

அவள் சட்டெனத் தலை நிமிர்ந்தாள்.

"ஜயந்தியா...! யார் அது......?"

"என் மாமா பெண்..."

அவள் சற்றுநேரம் யோஜனையில் ஆழ்ந்து விட்டாள்.

"நீங்கள் இவ்வளவு நாள் என்னிடம் இதைக் கூறவேயில்லையே...!"

"அதற்குச் சந்தர்ப்பம் எங்கே வந்தது......? இன்றுதானே நீ இப்படி அசடு மாதிரி பேசுகிறாய்...!"

அவள் பதிலே பேசவில்லை. அசடு! ஆம் அவள் அசடாகவே இருந்து மனதைப் பறிகொடுத்து விட்டாள்—அவன் எண்ணத்தைப் புரிந்து கொள்ளாமல்!

அவன் ஊருக்குச்சென்ற பிறகுகூடப் பலமுறை அவளைப்பற்றி எண்ணியதுண்டு. ஆனால் ஜயந்தியின் பிணைப்பில் கட்டுண்டிருந்த அவன் மாலதியின் காதலைப்பற்றி விசேஷமாக நினைக்க முடியவில்லை. இள மனது படைத்த அவள் சீக்கிரத்திலேயே இதெல்லாம் மறந்து வேறு தகுந்த இடத்தில் மணமுடித்துக் கொள்ளாமலா போய் விடுவாள்! வாழ்வில் நமக்கு ஏற்படும்—ஏற்படுவதாகத் தோன்றும்—காதலும் அதைத் தொடரும் சோகமும், உண்மையில் சந்தர்ப்பக் குழப்பத்தினால் நாமே உண்டாக்கிக் கொள்ளும் கற்பனைகள் தாமே! கற்பனை கலைந்து நிஜ வாழ்வுக்கு வரும்போது சோகத்திற்கு அங்கு இடமேது.

ஆயினும் மாலதியின் காதல் ஆழத்தை அவனால் பிறகுதானே அறிய முடிந்தது. ஒரு வருஷம் கழித்து அவன் சென்னைக்கு வந்திருந்தான். தனக்கும் ஜயந்திக்கும் நடக்கவிருக்கும் விவாகத்திற்கு ஆடையாபரணம் வாங்குவதற்குத்தான் வந்தான். அப்போது அவளைச் சந்தித்தான்.

முன்போலவேதான் அவள் இருந்தாள். ஆனால் அவள் கண்கள் மட்டும் ஏதோ பழைய கதையைக் கூறுவதுபோல் தோன்றின. கையில் நோட்புத்தகமும் பேனாவுமாக அவள் கலாசாலைக்குப் போய்க்கொண்டிருந்தாள்.

"மாலதி......!"

அவள் நின்று திரும்பினாள். சோர்ந்திருந்த அவள் முகம் சற்று மலர்ந்தது. புன்னகையுடன் அவனை விசாரித்தாள்.

அவன் ஏதோ கூறினான். அவள் கையிலிருந்த புஸ்தகமும் பேனாவும்தான் அவன் கவனத்தைக் கவர்ந்தன.

"என்ன மாலதி! இன்னுமா கலாசாலைக்குப் போகிறாய்......? விவாகம் செய்துகொள்ளவேண்டாமா...!"

அவள் வழக்கம்போலவே சிரித்தாள். விவாகம்! அதுதான் அவள் வாழ்விலே அர்த்தமற்றதாய்ப் போய்விட்டதே!

"இல்லை சந்தர்! நான் நர்ஸ் தொழிலுக்குப் படிக்கிறேன்! விவாக உறவைவிட நோயாளிகளின் உறவு ஆறுதலாக இருக்குமல்லவா......!"

அவன் அதற்குமேல் ஒன்றும் கேட்கவில்லை. அன்றிரவே ஊருக்குத் திரும்பிவிட்டான்.

அதற்குப் பின் அவன் அவளைப் பற்றி நினைக்கக்கூட நேரம் கிடைக்கவில்லைபோல்தான் தோன்றிற்று. அவன் விவாக ஏற்பாடுகள் துரிதமாக நடந்தன. இன்னும் பதினைந்து தினங்களில் ஜயந்தியின் கழுத்தில் அவன் தாலி கட்

யாக வேண்டும். அப்போதுதான், மனக் கிலேசம் அடையும்படியான அந் நிகழ்ச்சி ஏற்பட்டது.

சிறிது நாட்களாகவே சற்று இளைத்திருந்த ஜயந்திக்கு அடிக்கடி ஜ்வரம் வந்துகொண்டிருந்தது. அதோடு ஓரிரு இருமலும் தொடர்ந்தது. முதலில் அலட்சியமாக இருந்தவர்கள் கடைசியில் டாக்டரிடம் காண்பித்ததில் உண்மை தெரிந்தது. அவளுக்கு க்ஷயரோகம் கண்டிருந்தது. தக்க வைத்தியம் செய்யாவிட்டால் அவள் உயிருக்கே ஆபத்து என்று கூறிவிட்டார் டாக்டர்.

எல்லோரும் பதறிவிட்டனர். கல்யாண ஏற்பாடு அதோடு நின்றது. மாமா 'ஓ'வென்று அழுதேவிட்டார்.

'அப்பா, சுந்தர்! தாயில்லாப் பெண்ணுன அவளை எத்தனையோ செல்வமாக வளர்த்தேன். இந்த விஷ வியாதி வந்து விட்டதேயப்பா...! என்ன செய்வது...!''

அவனும் கலங்கித்தான் விட்டிருந்தான். எப்பாடு பட்டாவது அவளைக் காப்பாற்றி விட வேண்டும் என்று அவன் மனம் துடித்ததை யார் தான் அறிவார்கள்.

அன்று முதலே அவளுக்கு வைத்தியம் செய்ய ஆரம்பித்தான். சிறந்த மருந்துகளுக்கும், டானிக்குகளுக்கும் பணத்தை வாரி இறைத்தான். தன் கையிலிருந்த பொருள்கள் யாவையும் விற்று அவளுக்காகச் செலவிட்டான்.



மாமாவால் ஒன்றும் செய்ய ஓடவில்லை. எல்லாவற்றையும் அவன் பொறுப்பில் விட்டு விட்டு வாளாவிருந்தார்.

கட்டிலில் படுத்திருந்தவன் இருமலுடன் மறு பக்கம் திரும்பிப் படுத்தான். வார்டுக்கு வெளியே நின்ற வேப்ப மரம் அசைந்து சலசலத்தது. இதே வேப்ப மரத்தடியில் அக்காலத்தில் அவன் எத்தனை நாட்கள் தங்கியிருக்கிறுன் ஜயந்திக்காக.

எத்தனையோ பிரயாசைப்பட்டுத்தானே அவன் அவளை இந்த ஆஸ்பத்திரியில் சேர்த்திருந்தான். அவள் பிழைக்கவேண்டுமென்று எவ்வளவு பாடு பட்டான். ஒரு நாளா, இரண்டு நாளா! இரண்டு வருஷ காலம் இராப்பகலாக இந்த ஆஸ்பத்திரியே கதி என்று கிடக்கவில்லையா! ஜயந்தியின் மீட்சியே குறிக்கோளாகக் கொண்ட அவன் வேறு எதைத்தான் லட்சியம் செய்தான்! எவ்வளவு இரவுகளை அந்த வேப்ப மரத்தடியில் கழித்திருப்பான். கொஞ்சம்கூட சலிப்போ, அருவருப்போ இல்லாமல் சதா அவளிடமே இருந்து அவளை நமன் வாயிலிருந்தல்லவா மீட்டான்,

கடைசியில் பூரண குணமடைந்த அவளை எல்லையற்ற உற்சாகத்துடன் ஊருக்கு அழைத்துச் சென்ருன். நன்றியும், பூரிப்பும் பொங்க மாமா அப்போது அவனை அப்படியே தழுவிக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார்.

''தெய்வம்போல் என் பெண்ணைக் காப்பாற்றிணுயே அப்பா, அவள் உன் சொத்து......!'' என்று பலவாறு பிரலாபித்தார்.

ஜயந்தி மட்டும் மகிழ்ச்சிகொள்ளவில்லையா! வாழ்க்கையிலேயே மறு பிறப்பு எடுத்துவிட்டது போன்ற உவகை அவளை என்னவெல்லாம் பேச வைத்தது.

''அத்தான்! நீ எனக்கு வாழ்வை அளித்த தியாகி! உன் சௌகரியத்தைக் கொஞ்சம்கூடக் கவனிக்காமல் எனக்காகவே பாடுபட்ட உன்னைக் கோவிலில் வைத்துத்தான் கும்பிட வேண்டும்! என்னுல் என்ன கைம்மாறு செய்ய முடியும் உனக்கு! உன் உடல் துரும்பாய் இளைத்து விட்டதே...!''

அவன் மனம் அப்போது பெருமையால் பூரித்தது. உடல் இளைத்தால் என்ன; உள்ளம் பருத்து நிற்கவில்லையா...!

மேலும் ஆறு மாதங்கள் சென்றதும் ஜயந்தி நன்ருகத்தேறி பூரிப்புடன் விளங்கினுள். அவன் செய்த சேவைக்குப் பரிசாக மாமா அவளை அவனுக்கே அளித்து விட்டார். ஆடம்பரம் அதிகமின்றியே அவர்கள் விவாகம் நடந்தேறியது.

ஆனுல் அவன் பெற்ற பரிசு அவள்மட்டும் தானு! இரண்டு மூன்று வருஷங்களாக அவள்

நோயை எதிர்த்துப் போராடி வெற்றிகண்ட அந்நோயின் பயங்கரக் கோபத்திற்கு ஆளாகி விட்டான் போலும்!

வாடி மெலிந்திருந்த அவன் சரீரம் மேலும் உருகியது. காய்ச்சலும் இருமலும் தலைகாட்டின. பிறகு கேட்பானேன்! டாக்டர் ஒரே வார்த்தை யில் கூறிவிட்டார். வியாதி கடுமையாக வந்திருக் கிறது! உடனே கவனிக்க வேண்டும்!

கையிலிருந்த பணம் யாவும் போய்விட்டு, சரீர பலமும் குறைந்து, மனுஷ சகாயமுமற் றிருந்த அவன், ஊரிலே ஆறுமாத காலம் அவஸ்தைப்பட்டான். மாமாவுக்கு அலுப்பும் விரக்தியும் ஏற்பட்டு விட்டன. ஜயந்தி செய லற்றுப் பேசாமல் இருந்துவிட்டாள். ஏற்கனவே அவள் வியாதியாயிருந்து தேறி இருந்ததால், அவன் அருகே வருவதற்குக்கூட அவளுக்குத் துணியவில்லை. மறுபடியும் தனக்கு வந்து விட்டால்!

வியாதியுடன் தவித்த அவன் மனம் தளர்ந்து பிறகு கல்லாயிற்று. தன் உயிரையே கொடுத்துக் காப்பாற்றிய ஜயந்தி இப்போது தன் அருகே கூட வரமுடியாதபடி அவ்வளவு பாபியாகவா அவன் ஆய்விட்டான்! அவள் அளித்த பரிசு தானே இது! அந்தப் பரிசையே கண்டா அவள் அஞ்சுகிறாள்! அல்லது இப்பரிசடைந்து விட்ட அவனிடம் பொறுமை கொண்டு விட்டாளா!

பல துன்பங்களுடன் அவன் எவ்விதமோ அதே க்ஷயரோக ஆஸ்பத்திரியில் இடம் பெற்றான். ஒரு துணையுமின்றி ஏகாங்கியாய் ஊரைவிட்டு வந்தவன், கட்டிலில் சாய்ந்து இன்று ஒரு வருஷம் ஆகிவிட்டது. அப்பப்பா! இதற்கு நடுவில் எத்தனை துன்பம், எத்தனை அவஸ்தை! எவ்வளவு நாள் அவன் பிரவாகமாய் இரத்தத்தைக் கக்கி ஆவி பிரியும் நிலையில் இருந்திருக்கிறான்! ஏன் என்று கேட்பார்கூட இல்லாமல் நாதியற்றுக் கிடந்த அவனை இன்று வரை தெய்வம் உயிருடன் எதற்காகத்தான் வைத்திருக்கிறது.

ஆஸ்பத்திரியை அடைந்த அவனுக்கு முதல் நாலைந்து மாதங்கள் மாமாவைப் பற்றியோ, ஜயந்தியைப் பற்றியோ எந்தத் தகவலும் எட்ட வில்லை. மனமுடைந்து கிடந்த அவனுக்கு அதற்குமேல் இரண்டு மாதங்கள் கழித்துத்தான் கடிதம் வந்தது. அலுப்பும் சலிப்புமாக மாமா எழுதியிருந்தார். வியாதிக்காரனை அவனுக்குப் பெண்ணைக் கொடுத்து விட்டு அவர் தீராத கஷ்டத்தை அனுபவிப்பதாக ஏதேதோ வரைந் திருந்தார்.

முறிந்த அவன் மனம் கொந்தளித்தது. சே! என்ன உலகமிது! இதற்காகவா அவன் வாழ்வை விடாமல் பற்றிக் கொண்டிருந்தான் இத்தனை காலமும்! மாமாவும் ஜயந்தியுமே உலகம்

என்று பூரித்து அவர்களுக்காகத் தன்னையே பலியிட்டுக் கொண்டான்!

மேலும் இரண்டு மாதங்களுக்குப் பிறகு ஜயந்தியிடமிருந்து ஒரே ஒரு கடிதம் மட்டும் வந்தது. பெண்கள் மனத்தைப் பிரதிபலிக்கும் கடிதமாகத்தான் அது இருந்தது.

"உங்களை மணந்து எனக்கு என்ன சுகம்! என் வாழ்வு முழுதும் கஷ்டப்படவேண்டியதுதான்! நீங்கள் குணமாகி வந்தால்கூட எப்படி நாம் சேர்ந்து வாழ முடியும்! அதை நினைத்தாலே எனக்குப் பயமாய் இருக்கிறது...!"

பயம்! அவன் குணமடைவதில் கூட அவளுக்குப் பயம்! அட ஈசுவரா! அவள் குணமடைந்த காலத்தில் அவன் பயந்தானில்லை! தன் லட்சியமே நிறைவேறிப் பூத்து விட்டதைப் போலல்லவா பெருமைப் பட்டான்!

எப்படியோ காலம் ஓடிக் கொண்டிருந்தது. இனிமேல் எது எப்படிப் போனால் என்ன! ஜயந்தியும் மாமாவும் அவன் வாழ்வில்லை. அவன் குணமடைந்தால் என்ன, ஆகாவிட்டால் தான் என்ன! அதற்காக யாரும் கவலைப்படப் போவதில்லையே!

கட்டிலின் பக்கத்தில் பூட்ஸ் சப்தம் கேட்கவே தலை நிமிர்ந்து நோக்கினான். வழக்கம் போல் பெரிய டாக்டரும், சின்ன டாக்டரும் ஒவ்வொருவராகப் பார்த்துக் கொண்டே அவனிடம் வந்து நின்றனர். அவனை ஏற இறங்க ஒருமுறை பார்த்த பெரிய டாக்டர் தலையை அசைத்தவாறே கூறினார்.

"அப்பா, உன் வியாதி கட்டுக்கடங்காமல் போய்விட்டது! உனக்குச் செய்ய வேண்டியதெல்லாம் இங்கு செய்து விட்டோம்! இனி ஒன்றும் செய்வதற்கில்லை! நீ உன் ஊருக்கே போய்ப் பார்த்துக்கொள்...! இங்கு கட்டிலாவது காலியாகட்டும்...!"

அவன் ஒன்றும் பதில் கூறவில்லை. நோயாளியைத்தான் காப்பாற்ற முடியவில்லை; கட்டிலையாவது காப்பாற்றலாம் என்று தோன்றி விட்டது போலிருக்கிறது அவர்களுக்கு!

அன்று மாலையே அவன் புறப்பட்டு விட்டான். தள்ளாடியவாறே கட்டிலை விட்டு எழுந்து வந்தவன், நர்ஸ் மாலதி அமர்ந்திருந்த இடத்தை அடைந்ததும் சற்று நின்று அவளையே உற்று நோக்கினான். அவள் ஏதோ எழுதிக் கொண்டிருந்தாள்.

அவன் நெஞ்சு விம்மி, தொண்டையை அடைத்தது. காதலில் தோல்வியடைந்து வாழ்நாள் முழுதும் நோயாளிகளுக்குச் சேவை செய்து ஆறுதல்பெற நினைக்கும் இவளும் பெண்தானே! தன் காதலில் வெற்றியடைந்த ஜயந்தி தன் கணவன் வியாதியைக்கூட ஏறெடுத்தும் பார்க்கத் துணியவில்லையே!



தலை நிமிர்ந்து அவனைப் பார்த்த மாலதியின் கண்கள் பச்சாத்தாபத்துடன் கனிந்தன.

"என்னப்பா! இந்த உடல்நிலையோடு நீ எப்படிப் போவாய்! உனக்கு உற்றார், மனைவி என்று யாரும் இல்லையா! அவர்கள் ஏன் வரவில்லை...?"

அவன் உதடுகளில் தேய்ந்த சிரிப்பு தேங்கியது. அவனை ஏக வசனத்தில் அவள் அழைத்ததுகூட அவனுக்கு வேடிக்கையாகத்தான் இருந்தது. தான் யார் என்பதை அறிந்தால் அவள் அப்படி அழைப்பாளா!

நீண்ட நேரத்திற்குப் பின்பே அவன் பதில் கூறினான்:

"எனக்கு யாரும் கிடையாதம்மா...! என் பாபமும் நோயும்தான் எனக்கு உறவு...!"

ஆஸ்பத்திரியை விட்டு அவன் அசைந்தாடி வெகுதூரம் சென்றுவிட்ட போதும், ஏனோ அவனையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள் மாலதி.

# டால்டா வனஸ்பதி எல்லா சமையல்களுக்கும் மிகச்சிறந்தது

"நான் இப்பொழுது டால்டா உபயோகித்துச் சமைப்பதால் என் குடும்பத்தினர் ஒருபொழுதும் அவ்வுணவைச் சாப்பிடத் தவறுவதில்லை."












## சிறந்த தின்பண்டமான சேம்பு இலை வடை

### தயாரிக்க டால்டா செய்முறைக் குறிப்பை தவறவிடாதீர்கள்!

½ கப் கடலைமாவு, சிட்டிக்கை பேகிங் பௌடர், மஞ்சள் பொடி, ருசிக்குத்தேவையான உப்பு இவை களைக்கலந்து கெட்டியான தோசைமாவுப்பருவத் திற்கு தயாரித்துக்கொள்ளவும். சேம்பு இலையில் மாவைப்பரத்தி துருவிய தேங்காயைத் தூவவும். இலையின் ஓரத்தை மடக்கி சுருட்டவும். பிரிந்து விடாமலிருக்க கிராம்பைக் குத்தவும். ½ மணி நேரம் ஆவியில் வேகவும். பரிமாறுவதற்கு முன் துண்டு களாக குறுக்கே வெட்டி குழிவு குறைந்த வாணலி யில் சிறிது டால்டாவில் பொரிக்கவும்.

முக்கிய அறிவிப்பு: டால்டா சமையல் புத்தகம் – தமிழ், வங்காளி, ஹிந்தி, ஆங்கிலம் என்ற நான்கு பாஷைகளில் இப்பொழுது கிடைக்கிறது – 300 செய்முறைக் குறிப்புகள் – ரூ. 1/- தபால் செலவு அணா 10 தனி. இன்றே எழுதுங்கள்: தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ், தபால் பெட்டி நெ: 353, பம்பாய் 1






# டால்டா

எல்லாச் சமையல்களுக்கும் உகந்த ஆதர்ச சமையல்-வஸ்து

10, 5, 2, 1 பவுண்டு டின்களில் கிடைக்கிறது

201-X52 TM

# என்ஸைம் ஆராய்ச்சி

*சி. வி. ராமகிருஷ்ணன்*

அமெரிக்காவிலிருந்து திரும்பிய பிறகு கிராமத்தைப் பார்க்கச் சென்றேன். இயந்திர நாகரிக வாழ்க்கைக்குப் பின் அமைதியான கிராம வாழ்க்கையை நாடியதில் வியப்பில்லை. பல வருஷங்களுக்கு முன் எப்படி இருந்ததோ அதே மாதிரி அழுது வடிந்துகொண்டிருந்தது ரெயில்வே ஸ்டேஷன். பாடாவதி ரோடில் கட்டை வண்டியில் ஏறி ஐந்து மைல் செல்ல வேண்டும். வீடு செல்லும் நேரத்தில் விமானமாயிருந்தால் இரு நூறு மைல் போயிருக்கும்! வண்டி ஓட்டும் கண்ணுசாமி இப்பொழுது கிழவனாக இருந்தான், அவ்வளவுதான். சூழ்நிலையில் வேறு ஒரு வித்தியாசமும் தெரியவில்லை. வண்டிகூட அதே பழைய வண்டிதான். சாலையில் இருபுறமும் மரங்களும் வயல்களும். பச்சைப்பசேலென்று கண்ணுக்குக் குளிர்ச்சியாகவும் அழகாகவும் இருந்தன. அவற்றைப் பார்க்க முயற்சித்தால் வண்டிவேறு தலையில் லொட் லொட் என்று இடித்தது. குடை சாயாமல் பத்திரமாக என்னை வீடு சேர்த்ததற்காக நாலணு அதிகமாகவே கொடுத்து அனுப்பினேன். வண்டிக்காரனுக்கு. வண்டிநின்ற சப்தத்தைக் கேட்டு வெளியே வந்த என் பாட்டி, "அப்படியே நில்லு" என்று ஒரு அவசரத்தடையுத்தரவு போட்டுவிட்டு உள்ளே ஓடினாள். வெற்றிகரமாகத் திரும்பியதற்காக வடநாட்டுப் பாணியில் ஆரத்தி எடுக்கப் போகிறாளா என்ன என்று நினைத்துக்கொண்டிருக்கும் பொழுதே ஒரு கங்கைச் சொம்பை உடைத்து ஒரு குடம் ஜலத்தில் கொட்டி, அந்தக் குடத்து நீரை என் தலையில் கொட்டினாள்! காரணம் கடல் கடந்ததால் அசுத்தனாக இருந்தேனாம்! 'பாவம் வயதானவள் எப்படியாவது ஆறுதலடையட்டும்" என்று அவளுக்கு ஒரு நமஸ்காரம் பண்ணினேன். அவளுக்கும் பேரன் இவ்வளவு 'பதவிசாக' இருப்பதில் திருப்தி என்பது அவள் பொக்கைவாய்ச் சிரிப்பிலேயே தெரிந்தது. ஊரைப்பற்றிக் குசலப்பிரச்னம் ஆயிற்று. என்னுடைய பால்ய நண்பர்கள் ஒருவர்கூட ஊரில் இல்லை. கிராமத்தில் இருந்தவர்கள் மாதாமாதம் மணியார்டரை எதிர்பார்த்திருக்கும் அம்மாக்களும் பாட்டிகளும் பென்ஷன் வாங்கும் ஓய்வு பெற்ற உத்தியோகஸ்தர்களும் கலியாணமாகாத கன்னிப் பெண்களுந்தான்.

"ஏன் பாட்டி ஊரே காலிபோலிருக்கிறதே" என்றேன். "ஆமாண்டாப்பா ஆமாம். வரவர காலங்கெட்டுப் போச்சு. இந்த காலத்துப் பசங்க தலையெடுக்கறச்சேயே சுருட்டு பிடிக்கறதுகள், கடவுளேயில்லைங்கறது, கலி முத்திப் போச்சு. அதுதான் பெய்யற மழைகூட பெய்ய மாட்டேங்கறது" என்றாள். காங்கிரஸ்காரர்கள் எந்த விஷயத்தைப்பற்றிப் பேசினாலும் கடைசியில் பிரசங்கத்தை காந்திப்பேச்சில் முடிப்பதுபோல, பாட்டி எதைப்பற்றிப் பேசினாலும் கலிகாலமும் கடவுளும்தான் பல்லவி! இதற்குள் எதிர் வீட்டு அத்தை வந்தாள் (அவள் ஊருக்கே அத்தைதான். அதையொட்டி நானும் அவளை அத்தையென்றே அழைப்பது வழக்கம்!) அவள் எழுதப் படிக்கத் தெரிந்தவள் என்ற ஹோதாவில் பாட்டிகள் மகாநாட்டில் அவள்தான் செய்தி மந்திரி!

"ஏண்டா, ராமு எப்படா வந்தே? என்ன ஒரேடியா இளைச்சுப் போயிருக்கயே— சீமையிலிருந்து திரும்பறவன் ஒவ்வொத்தனும் கொழுகொழுன்னு இருக்கான். நீ என்னடான்னா இப்படி தேய்ந்து போயிருக்கயே?" என்றாள்.

என் பாட்டி, குறுக்கிட்டு "ஆமாம் அவன் கண்ட பசங்க மாதிரி பன்னியும் ஆடும் திங்கறானுக்கும், கிடுகிடுன்னு ஊளச்சதை வைக்க. இப்படி இருக்கறதுதான் பாந்தமா இருக்கு. வந்த அலைச்சல் இளைப்பா தெரியறது. ரெண்டு நாளானா சரியாய்ப் போயிடும். நல்லவேளை வெயில் வீணாய்ப் போகாமல் ஊரைச்சுற்றியடிக்க அவன் சிநேகிதர்கள் யாரும் இல்லை" என்றாள்.

அதற்குள் கோடியாத்து கோமுப் பாட்டி கடலை உருண்டை நான்கை அருமையாக

ஒரு காகிதத்தில் பொட்டலம் கட்டிக் கொண்டு வந்தாள். எப்பொழுதோ அவள் கடலை உருண்டை கொடுத்ததை "ரொம்ப ஜோராயிருக்கிறது. இதற்குப் பவுன் தரலாம் விலையாக" என்று சொல்லி வைத்தேன். அதிலிருந்து அவள் எப்பொழுது ஊருக்குப் போனாலும் எனக்குக் கடலை உருண்டை கொடுக்கத் தவறுவதில்லை. யார் செய்த பூஜை காரணமோ அல்லது காளான்களின் குண விசேஷந்தானோ, அவள் வீட்டுப் பூஞ்சக்காளம் பிடித்த கடலை எவ்வளவோ வயிற்றுக்குள் போயும் இன்னும் ஜீவித்திருக்கிறேன்! இப்பொழுது காளானிலிருந்து தானே வைட்டமின்களும் பெனிசிலினும் எடுக்கிறார்கள்!

"ஏண்டா ராம, கலெக்டர் பரீட்சை பாஸாயிருத்தா?" என்று கேட்டாள் கோமுப் பாட்டி. அவளுக்கு இன்னமும் கடல் கடந்து போவதென்றால் கலெக்டர் பரீட்சைக்காகத்தான் என்ற நினைப்பு! மேலும் தொடர்ந்து, "இந்த ஊருக்கே கலெக்டரா வந்து விட்டால் நன்றாயிருக்கும்" என்றாள்.

"இந்த ஊரிலே வீடுகள்கூட வரி கட்டுவார் இல்லாமல் வெறிச்சென்றிருக்கே, பாட்டி. இல்லாவிட்டால் பில்கலெக்டராக வந்துவிடலாம்" என்றேன்.

"கலெக்டராவது கிலெக்டராவது—அவன் விஞ்ஞான ஆராய்ச்சிக்காகத்தான் அமெரிக்கா போயிருந்தான். அதுகூட தெரியாதா உனக்கு?" என்றாள் அத்தை.

"இதுக்காகவா இவ்வளவு பணத்தைச் செலவழிச்சுண்டு அங்கே போகணும். இப்பதான் எல்லா காலேஜிலும் என்னமோ 'எக்ஸ்பிரிமெண்ட்'னு இருக்காமே. எம் பேரன்கூட சொன்னான். அந்த ஆராய்ச்சியை இங்கேயே பண்ணிக்கக்கூடாதோ', என்றாள் கோமுப் பாட்டி.

"ஆராய்ச்சியிலே என்ன சாதிக்கமுடியுமாம? இவாளாலே இப்ப மழையைக் கொண்டுவந்துவிடமுடியுமா? பத்ரிநாத்துக் கம் ரிஷிகள் கிட்டபோய் ஏதாவது மந்திரம் தெரிஞ்சுண்டு வந்தாலும் உண்டு" என்றாள் அந்தச் சமயம் உள்ளே வந்த நாணுப் பாட்டி. அவளுக்கு வாழ்க்கையில் பத்ரிநாத் போகவேண்டுமென்ற ஒரே லட்சியந்தான்.

மூழு 'கோரம்' இருப்பதைப் பார்த்த சரோஜி நாலு பலகை குழவிகளும் ஒரு அடுக்கு நிறைய அப்பளத்து உருண்டையும் கொண்டுவந்து கூடத்தில் வைத்துவிட்டாள். வந்திருந்தவர்களும் சமூகத் தொண்டில் ஈடுபட்டுக்கொண்டே மகா நாட்டிலும் ஊக்கம் காட்டினார்கள். (அப்பளம் இட்டுத் தருவதும் ஒரு சமூகத் தொண்டுதானே!)

"இல்லை, பாட்டி! அங்கே ஆராய்ச்சி பண்ண நல்ல வசதியிருக்கு. அதுமாதிரி நம் ஊரில் இல்லை" என்றேன்.

'அதுதான் அங்கே குபேரபுரி மாதிரி ஐசுவரியம் கொட்டிக் கிடக்காமே—அதுவுமில்லாமே அவாளெல்லாம் என்னென்னமோ புதுப்புது விஷயங்களெல்லாம் வேறே கண்டுபிடிச்சிண்டிருக்கா" என்றாள் பாட்டி.

"ஏண்டாப்பா நீயும் அங்கே போய் பிரமாதமாய் என்ன கண்டுபிடிச்சே அதைத் தான்சொல்லேன்" என்றாள் கோமுப் பாட்டி.

"அதெல்லாம் இங்கிலீஷிலே படிச்சவன் தமிழிலே எப்படிச் சொல்றது" என்றாள் என் பாட்டி.

"நன்றாயிருக்கு நீ சொல்றது – ராஜாஜி காந்தியெல்லாம் எத்தனையோ பெரிய பெரிய விஷயங்களெல்லாம் நம்ம பாஷையிலே அழகாச் சொல்லலையோ—தான் படித்ததைத் தன் பாஷையிலே சொல்லத் தெரியாமெ அப்படி என்ன படிப்பு?" என்றாள் எதிர்வீட்டு அத்தை.

எங்கே இவர்களுக்குச் சண்டை வந்து அப்பளக் கச்சேரி கலைந்துவிடப் போகிறதோ என்று எனக்குப் பயமாய்ப் போய்விட்டது! காரணம், எனக்கு வேலைக்கு நான்கைந்து அப்பளமாவது வேண்டும்! அமெரிக்காவிலிருந்து திரும்பிய பின் கூட இந்த ஆசை நிறைவேறாவிட்டால்?

"பாட்டி, கோவிச்சுக்காதேங்கோ. அவ்வளவு சுலபமாகச் சொல்லக்கூடிய சக்தி எனக்கு இல்லாவிட்டாலும் ஏதோ முடிந்தவரை சொல்கிறேன்" என்று ஆரம்பித்தேன்.

"நாம் சாப்பிடும் ஆகாரம் ஜீரணமானுல் தான்–" "உடம்பில் ஒட்டும்" என்ருள். பாட்டி.

"உணவு ஜீரணமானபின்தான் இரத்தத்தில் கலக்க முடியும். பிறகுதான் அந்த உணவுச்சத்து உபயோகப்படுகிறது. ஜீரணமாவதற்குக் காரணமாயிருக்கும் பொருள்களில் சிலவற்றை என்ஸைம்கள் என்கிருர்கள். இவை உணவைச்சிறுதுணுக்குகளாகத் துண்டித்து இரத்தத்தில்கலக்க ஏற்றதாகச் செய்கின்றன. இவை உணவைப்பிரிககின்றனவேயொழிய அவை அடையும் மாறுபாடுகளில் கலந்து கொள்வதில்லே."

"கிச்சிலிக்காய் மாதிரி—அது எல்லாவற்றையும் ஜீரணமாக்குமே ஒழிய அது ஜீரணமாகாமல் ஏப்பம் ஏப்பமாக வரும்" என்ருள் அத்தை.

"ஏணி, தோணி, கிச்சிலிக்காய் என்று வசனம் சொல்றதில்லேயோ என்ருள் பாட்டி.

"ஜீர்ணமாவது என்ருலே துணுக்குகளாக நைந்து போவது என்றுதான் பொருள். துணி ஜீர்ணமாகிவிட்டது என்கிருேம். சில துணிகள் லேசில் கிழியாது. சில சீக்கிரம் கிழிந்து போகும். உணவிலும் எத்தனேயோ வகைகள். சாதம், கடலே உருண்டை, எண்ணெய் எல்லாம் ஒரே மாதிரியில்லே."

"இதுகூட சொல்லணுமா என்ன? 'அன்னமயம பிராணமயம்' என்பார்கள். சாதம் சிறு குழந்தைகூட சாப்பிடும். கடலே உருண்டையெல்லாம் லேசில் ஜீரணமாகாது." என்று குறுக்கிட்டாள் கோமு.

"இரு அவன் சொல்லட்டுமே" என்ருள் அத்தை.

"சாதத்தில் மாவுச்சத்து அதிகம். பருப்புதான் வளர்ச்சிக்குக் காரணம் என்பீர்கள். கடலே, பருப்பு இவற்றில் புரதம் அதிகம். எண்ணெயில் கொழுப்புச் சத்து அதிகம். இவற்றை ஜீரணமாக்க வெவ்வேறு என்ஸைம்கள் வேண்டும். வயிற்றில் சுரக்கும் ஜடராக்னி நீரில் மாவும் புரதமும் ஜீரணமாவதற்கு வேண்டிய என்ஸைம்கள்தான் இருக்கின்றன. கொழுப்புச்சத்து வயிற்றில் ஜீரணமாவதில்லே. சிறு குடலுக்குச் சென்ற பின்தான் ஜீரணமாகிறது. சிறு குடலில் கணேயத்திலிருந்து சுரக்கும் 'லேபேஸ்' என்ற என்ஸைம்தான் கொழுப்புச் சத்து ஜீரணமாகக் காரணம். கொழுப்புச்சத்தை வபை என்று சொல்லுவார்கள."

"அதுதான் நெய்யோ எண்ணெயோ அதிமாகச் சேர்த்துக்கொண்டால் ஜரிக்காமல் ஏப்பம் ஏப்பமாக வருகிறது" என்ருள் பாட்டி.

"இந்த வபை லேபேஸின் உதவியால் க்ளிசரின் என்ற பொருளாகவும் வபை அமிலமாகவும் பிரிகிறது.

[வபை→க்ளிசரின்+வபை அமிலம்]

க்ளிசரினும் வபை அமிலமும் சிறுகுடலில் உள்ள 'எபிதீலியல்ஸெல்' சளால் கிரகிக்கப் பட்டு (Ephithelialcells) அங்கே லேபேஸ் உதவியால் அவை மறுபடி ஒன்றுசேர்ந்து சில குழாய்கள் மூலம் (thoracic duct) இரத்தத்தில் கலந்து உடலின் பல பாகங்களுக்கும் செல்கிறது. இரத்தத்தில் வபை அதிகமாகச் சேர்ந்து விட்டால் கெடுதியை விளேக்கும்."

"அப்படின்னு நெய் கூடவா அதிகமாகச் சாப்பிடக் கூடாது" என்ருள் பாட்டி.

"ஆமாம், நீ பேரன் கொழுத்துப் போக வேண்டும் என்ற ஆசையில விழுந்து விழுந்து நெய் பரிமாறுவதை இனிமேலாவது நிறுத்திக்கொள்!" என்றேன்.

"அளவுக்கு மிஞ்சினுல் அமுதமும் விஷம்" என்ருள் கோமுப் பாட்டி.

அதற்குள் அந்த ஊர் எலிமெண்டரி ஸ்கூலில் எட்டாவது படித்துக் கொண்டிருந்த சரோஜி தன் ஸயன்ஸ் புத்தகத்தை எடுத்துக் கொண்டு வந்தாள். "இதோ பார் பாட்டி! இதுதான் கணேயம், இது தான் சிறு குடல்" என்று அன்னப்பாதையின் படத்தைக் காட்டி, தனக்குத் தெரிந்த விஞ்ஞானத்தை விளக்க ஆரம்பித்தாள். நல்லதாகப் போயிற்று என்று புத்தகத்தை என்கையில் வாங்கிக் கொண்டு மேலும் தொடர்ந்து சொல்ல ஆரம்பித்தேன்.

"பருப்பிலுள்ள புரதம் இரைப்பையில் சுரக்கும் பெப்ஸின் என்ற நொதியின் உதவியால் ஓரளவு ஜீரணமாகிறது– அதாவது dipeptide' ஆக மாறுகிற[illegible] சிறுகுடலில் 'ட்ரிப்ஸின்' என்று இன்[illegible] என்ஸைம் அதை அமிலமாக மாற்று[illegible]

புரதம்
பெப்ஸின் ↓
டைபெப்டைட்
ட்ரிப்ஸின் ↓
அமினோ
ஆஸிட்

இந்த அமிலம் சிறு குடலில் உள்ள ஜவ்வு வழியாக ரத்தத்தில் கலந்து உடலின் பல பாகங்ளுக்கும் செல்கிறது. அங்கங்கு இந்த அமிலங்கள் வெவ்வேறுவிதமாக என்ஸைம் களின் உதவியால் சேர்ந்து, மறுபடி புரதமாக மாறுகின்றன. இந்தப் புரதச் சத்துத்தான் உடல் வளர்ச் சிக்குக் காரணம். புரதம் ஜீரணமாவதற் கும் என்ஸைம்கள் தேவை. அது மறுபடியும் பலவேறுவகைப் புரதங்களாக மாறி வளர்ச் சியை உண்டாக்குவதற்கும் என்ஸைம்கள் தேவை. தலைமயிர், நகம் எல்லாம் வளர் வதற்குக்கூட ஒருவகைப் புரதம்தான் கார ணம்.

"தலைமயிர் வளரும் புரதம் உண்டாக என்ன சாப்பிடவேண்டும்?" என்று கேட் டாள் சரோஜி. அவள் கேசவர்த்தினியை உபயோகித்து அலுத்துவிட்டாள் பாவம்!

"அப்படி எதிலிருக்கும் புரதம் எதை உண்டாக்குகிறது என்று விவரமாகத் தெரிந்துவிட்டால் நம் இஷ்டப்படி எல்லாம் மனிதர்களைச் சிருஷ்டித்து விடலாமே! விஞ் ஞான ஆராய்ச்சி அவ்வளவு தூரம் முன் னேறவில்லை. இந்த அமினோ அமிலங்களில் கிளைசின், மெத்தியோனின் என்று சுமார் நூறுவிதம் இருக்கின்றன. இவைகள் ஒன்றோடொன்று வெவ்வேறு வகையில் சேர்வதால் பலவிதப் புரதங்கள் உண்டா கின்றன. பலசெங்கல்களால் வீடு அமைவது போல் நம் உடல் பல 'ஸெல்'களாலானது— ஆனால் இந்த ஸெல் வளரும், இரண்டாகப் பிரியும், அழியும்—ஒவ்வொரு ஸெல்லுக்கும் வேண்டிய புரதம் இரத்தம் மூலம் வரும். அமினோ அமிலங்களிலிருந்து என்ஸைம் களின் உதவியால் தயாரிக்கப்படுகிறது.

"அதேமாதிரி நாம் சாப்பிடும் உணவி லுள்ள மாவுப்பொருள் வாயில் உமிழ் நீருடன் கலக்கும்பொழுது உமிழ்நீரிலுள்ள டயலின் என்ற என்ஸைம் ஓரளவு மாவுப்பொருளைச் சர்க்கரையாக மாற்று றது. வாயில் அரிசி முதலிய பொருள்களைக் [illegible]ஞ்சநேரம் மென்றுகொண்டேயிருந் [illegible] அவை தித்திக்கும்."

"அதுதான் சரோஜி பிடிச்சு பிடிச்சா அரிசியை வாயிலே போட்டு அரச்சுண்டே யிருக்காளே" என்று புகார் செய்தாள் என் பாட்டி.

"பாட்டிக்கு ஓயாமல் என் பிரதாபம் தான். நீ மேலே சொல்லு" என்றாள் சரோஜி.

"அதுசரி நீயும் அரிசியைச் சும்மா தின்னாதே. அப்புறம் சாப்பிடும்பொழுது ஜீரணத்துக்கு வேண்டிய என்ஸைம்கள் இருக்காது—மாவுப் பொருளில் ஒரு சிறு பகுதிதான் வாயில் ஜீரணமாகிறது. மீதி பாகம் சிறுகுடலில் 'அமிலாப்ஸின்' என்னும் என்ஸைமின் உதவியால் "க்ளூகோஸ்" (Glucose) என்ற சர்க்கரையாகப் பிரிக்கப் படுகிறது.

மாவுப்பொருள்
ப்டயலின் ↓
சர்க்கரை
அமிலாப்ஸின் ↓
க்ளூகோஸ்.

சிறு குடலில் க்ளூகோஸ் ரத்தத்தில் கலக் கிறது. ரத்தத்திலுள்ள க்ளூகோஸை, கல்லீ ரல் 'க்ளைகொஜன்' (Glycogen) மாற்றி, சேகரித்து வைத்திருந்து அவ்வப்பொழுது ரத்தத்திற்கு வேண்டிய அளவு க்ளூ கோஸை விடுவிக்கிறது. இந்தச் சர்க்கரைச் சத்தாகிய க்ளூகோஸ்தான் நமக்கு வேலை செய்யச் சக்தியைத் தருகிறது. யந்திரத் திற்குப் பெட்ரோல் அல்லது கரி எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் உடலுக்கு 'க்ளூகோஸ்.'

"இந்தக் காலத்திலே உடம்பு சரியா யில்லேன்னா தொட்டதுக்கெல்லாம் குளூ கோஸ் கொடுக்கச் சொல்றாளே" என்றாள் கோமுப்பாட்டி.

"பலஹீனமாக இருக்கும்பொழுது உணவு ஜீரணமாகாது. க்ளூகோஸாகவே கொடுத்துவிட்டால் சீக்கிரம் ரத்தத்தில் கலந்துவிடும். ஒருவன் உண்ணாவிரதம் இருக்கும்பொழுது உடம்பில் சேகரித்து வைக்கப்பட்டுள்ள புரதம், வபை, சர்க் கரைப் பொருள் முதலியன மறுபடியும் என்ஸைம்களால் பிரிக்கப்படுகின்றன. அதனால் பட்டினி இருந்தால் சிலகாலம் உடம்பிற்கு வேண்டிய சக்தி கிடைக்கிறது. ஆனால் நாளாக ஆக, சேகரிக்கப்பட்டுள்ள

பொருள்களும் தீர்ந்துபோய்விடுகின்றன, என்ஸைம்களும் சக்தியிழந்து விடுகின்றன - இதன் விளைவு மரணம்தான். இந்த நிலை வருவதற்கு முன் உணவு உட்கொண்டால் உயிர்ப்பிக்கப்படுகிறான்."

"அப்படியானால் பட்டினி கிடக்கும் பொழுதுதான் சேகரித்து வைக்கப்படும் உணவுச்சத்துச் செலவழிகிறது—

அது நல்லதா?" என்று கேட்டாள் சரோஜி.

"இதில் சந்தேகம் என்ன? எப்பொழுதாவது ஒரு முறை பட்டினி கிடந்தால் குடல் சுத்தமாவதுடன், சேகரமான உணவு செலவழிகிறது. பிறகு உணவு அருந்தும் பொழுது புதிதாக உணவுச் சத்து சேமித்து வைக்கப்படுகிறது. ஊறுகாயெல்லாம் அவ்வப்பொழுது காலிசெய்துவிட்டு ஜாடியைச் சுத்தம்செய்து வேறு ஊறுகாய் போட்டால்தானே நன்றாயிருக்கும்? அதுமாதிரி தான்."

"அதனால்தான் நாங்களெல்லாம் ஏகாதசி, அமாவாசையென்று விரதம் இருக்கிறோம்" என்றாள் கோமுப் பாட்டி.

"நீங்கள் சொல்வது சரிதான். ஆனால் விரதம் என்று சொல்லிக்கொண்டு ஏகப்பட்ட நெய்யைவிட்டு அடை தட்டித் தின்பதில் பிரயோசனமில்லை. அதனால் இன்னும் கொஞ்சம் மந்தந்தான் உண்டாகும்"

இதற்குள் பக்கத்திலிருந்த அப்பளத்து உருண்டையெல்லாந் தீர்ந்துவிடவே பாட்டி இன்னும் நூறு உருண்டைகளைக்கொண்டு வந்துபோட்டாள்.

"நீ என்னவோ என்ஸைம், என்ஸைம் என்கிறாய்; எங்காத்து பேரனோ எப்பப் பார்த்தாலும் வைடமின், வைடமின்னு சொல்லிண்டேயிருக்கான்" என்றாள் அத்தை.

"அது என்னவோ, இப்ப ஹார்மோனியம்னு ஒன்று புதுசாக் கண்டுபிடிச்சுருக்காளாமே" என்றாள் கோமுப் பாட்டி.

"அது ஹார்மோனியம் இல்லை. 'ஹார்மோன்!' வைட்டமின்களும், ஹார்மோன்களும்தான் உடல் வளர்ச்சிக்குக் காரணம். தேகத்திலுள்ள சில சுரப்பிகள் அநேக ஹார்மோன்களைச் சுரக்கின்றன. இந்த ஹார்மோன்கள் போதுமான அளவு சுரக்காவிட்டாலும் அதிகமாகச் சுரந்தாலும் கோளாறுகள் ஏற்படும். ஹார்மோன் கோளாற்றினால்தான் மிகவும் குட்டை மனிதர், நெட்டை மனிதர் முதலிய விசித்திரப் பிரகிருதிகள் தோன்றுகிறார்கள். சுறுசுறுப்பு, உற்சாகம் முதலியவற்றுக்குக்கூட ஹார்மோன்கள்தான் காரணம். கரு ஆணாகவோ பெண்ணாகவோ ஆவதற்கும் ஹார்மோன்கள்தான் காரணம். காம இச்சைக்குக்கூட ஒரு வகை ஹார்மோன்கள்தான் காரணம்"

"வயதானப்புறம் ஏன் இச்சை இருப்பதில்லை" என்று கேட்டாள் பாட்டி.

"வயதானபின் ஹார்மோன் உற்பத்தி குறைந்துவிடுகிறது. நம் நாட்டில் உணவைக் கட்டுப் படுத்துவதன் மூலம் இந்த ஹார்மோன் உற்பத்தியைத் தடுக்கப் பார்க்கிறார்கள். பழைய காலத்தில் வெங்காயம் முதலிய பொருள்களை விலக்கியதற்கு இதுதான் கரரணம். மேல் நாட்டில் வயதான பின்னும் இச்சைக்குக் காரணமான ஹார்மோன்களை உண்டாக்க மருந்துகளைச் சாப்பிடுகிறார்கள். பெண்கள் மாதவிடாய் நின்றுபோகாமல் நீடிப்பதற்கு மருந்து சாப்பிடுகிறார்கள்.

"ரொம்ப அழகாயிருக்கிறது — சீமை லண்டிகளோல்லியோ என்ன வேண்டுமானாலும் செய்வார்கள். நம் ஊரில் பார், அழகாக ஒரு ரிஷி பஞ்சமி விரதம் செய்யும் காலம் எப்பொழுது வரும் என்று காத்துக் கொண்டிருக்கிறார்கள்" என்றாள் பாட்டி.

"சீமையிலே யாரோ ஒரு பெண் ஆணாக மாறிவிட்டாளாம். ஏதோ பத்திரிகையில் பார்த்தேன்" என்றாள் சரோஜி.

"கன்னா பின்னான்னு இந்த மாதிரி சமாசாரமெல்லாம் தெரியறத்துக்குத்தான் பத்திரிகை படிக்கிறாயாக்கும்?" என்று அவள் மீது பாய்ந்தாள் பாட்டி.

"பத்திரிகையிலே போட்டுட்டா நம்பிடலாமா? இது மாதிரிகூட நடக்குமாக்கும். 'கேழ்வரகிலே நெய் ஒழுகியது என்றால் கேட்பாருக்கு மதியெங்கே போயிற்று?" என்றாள் அத்தை.

"இல்லை. இதுமாதிரி வாஸ்தவமாக நடந்திருக்கிறது. நம் ஒவ்வொருவர் உடம்பிலும் ஆண் ஹார்மோன்கள் பெண் ஹார்மோ[ன்]கள் என்ற இருவகைகளும் இருக்கின்[றன]. ஓர் ஆணின் உடம்பில் ஆண் ஹார்[மோன்]கள்தான் அதிகம். மீசை முளைப்ப[து,] குரல் முதலியவற்றுக்கு இ[ந்த]

காரணம். இதே மாதிரி பெண்ணுக்கேற்ற குணங்களை இன்னொரு வகை ஹார்மோன்கள் தருகின்றன. ஒரு பெண் உடம்பில் பெண் ஹார்மோன்களின் வளர்ச்சி குறைந்து ஆண் ஹார்மோன்களின் வளர்ச்சி அதிகமாகிவிட்டால் அவள் ஆணாக மாறி விடுவாள். அதே மாதிரி ஆண் பெண்ணாகவும் மாறலாம். இந்த ஹார்மோன்கள் தான் சில ஆண்கள் பெண் மாதிரி இருப்பதற்கும் சில பெண்கள் ஆண்களைப்போல் கருகருவென்று மீசையுடன் ஆண் குரலில் பேசுவதற்கும் காரணம்”

“நன்னாச் சொல்லுடப்பா—அதுவும் இந்தக் காலத்திலே சில ஸ்திரீ ஜன்மங்களுக்குப் புருஷ லக்ஷணம்தான் பிரதானமாயிருக்கு. நீ சொல்றதைப் பார்த்தால் மகா விஷ்ணு மோகினியாக மாறினதுகூட நிஜமாய் நடந்திருக்கலாம்போல் இருக்கே” என்றாள் அத்தை.

“பரமசிவனை அர்த்தநாரீசுவரர் என்று சொல்றாளே—ஒவ்வொருவரிடமும் ஆண் அம்சமும் பெண் அம்சமும் இருப்பதைத் தான் அப்படிச் சொல்லியிருக்கிறார்கள்”

“ஆமாம்—நீ சொன்னியே அந்த என்ஸைம்களுக்கும் ஹார்மோன்களுக்கும் என்ன சம்பந்தம்?” என்றாள் சரோஜி,

“வைட்டமின்களும் ஹார்மோன்களும் ஒன்று என்ஸைம்களாக இருக்கவேண்டும், இல்லை, அவை நன்றாக வேலைசெய்ய உதவும் துணை என்ஸைம்களாக (Co-enzymes) இருக்கவேண்டும். அல்லது ஹார்மோன்களும் வைட்டமின்களும் என்ஸைம்களின் ஒரு பகுதியாக இருக்கலாம். இதைப்பற்றின ஆராய்ச்சிமேல்நாடுகளில் நடந்து வருகிறது. இத்துறையில் பிரசித்திபெற்ற என்ஸைம் ஆராய்ச்சிக் கழகத்தில் வேலை செய்வதற்குத்தான் நான் போயிருந்தேன். பாஸ்வரம் போன்ற தாதுச் சத்துக்கள்கூடச் சில என்ஸைம்களின் பகுதிகளாக இருக்கின்றன. என்ஸைம்கள் வேலைசெய்ய இந்தத் தாதுக்கள் அவசியம்”

“இந்த என்ஸைம்கள் இல்லாவிட்டால் நாம் உயிருடன் இருக்கமுடியாதா?” என்று கேட்டாள் பாட்டி.

இத்தனை நாழி சொல்லிக் கொண்டிருந்...து பின் என்ன? உதாரணமாக—நாம் ...சிப்பதால் தான் உயிருடன் இருக்கி... மூச்சு நின்றுவிட்டபின் உயிர் ... சுவாசகோசத்தின் மூலம் பிராண... உட்கொண்டு கரியமிலவாயுவை வெளியிடுவதுதான் சுவாசித்தல். ஆனால் இது நடைபெறுவதற்குச் சரீரத்திலுள்ள ஒவ்வொரு ஸெல்லும் இரத்தத்திலிருந்து பிராணவாயுவைக் கிரகித்து, கரியமில வாயுவை வெளியிடவேண்டும். சுவாச கோசம் ஒரு தபாலாபீஸ்தான். உண்மையான கடிதப் போக்கு வரவில் சம்பந்தப் பட்டவர்கள் வேறு. அதேமாதிரி உண்மையான சுவாசித்தல் ஸெல்களில்தான் நடைபெறுகிறது. அதனால்தான் இரண்டு சுவாச கோசங்களில் ஒன்றை ஆபரேஷன் செய்து எடுத்துவிட்டால்கூட உயிர் வாழ முடிகிறது. இரத்தத்தில் உள்ள ஹெமோக்ளோபின் என்ற தாதுச்சத்து சுவாச கோசத்திலுள்ள பிராணவாயுவைக் கிரகித்து ஸெல்களுக்கு எடுத்துச் செல்கிறது. ஸெல்களில் உள்ள உணவுச் சத்து பிராண வாயுவின் உதவியால் நிதானமாக எரிக்கப் படுகிறது. அப்பொழுது உண்டாகும் உஷ்ணசக்தியால்தான் நாம் வேலைசெய்ய முடிகிறது, கரி எரிவதால் யந்திரம் வேலை செய்வதைப்போல, உணவுச் சத்து எரிவதற்குமுன் அமிலங்களாக என்ஸைம்களால் பிரிக்கப்படுகின்றன. இவை எரியும் பொழுது கரியமிலவாயுவும், உண்டாகின்றது. அவை இரத்தத்தினால் சுவாசகோசங்களின் மூலம் வெளியேற்றப்படுகின்றன. இந்த மாதிரி செலவழிந்துபோகும் சக்தியை மறுபடி சேகரித்துவைக்க மற்றொரு வகை என்ஸைம்கள் பாஸ்பரஸ் சேர்ந்த ஒரு பொருளை உற்பத்தி செய்கின்றன. (Oxidative-phosphorylation) இந்த இரண்டு கிரியைகளும் ஒரே சமயத்தில் நடக்கின்றன. இது நின்றுபோனால் உயிர் இல்லை. ஆக, மனிதன் மூச்சு விடுவதற்கே என்ஸைம்கள் அவசியம்.

Carbohydrates
↓ Fermenting Enzymes
Glucose-6-Phosphate ← hexokinase ← (+Glucose) ATP+CoA
↓ Enzyme
Pyruvate
↓ DPN, CoA, Pyruvic oxidase
+ P
Acetyl-CoA ——→ P-CoA + acetate (+ADP → ATP+CoA)
↓
oxalacetate
Citrate → $CO_2 + H_2O$

இந்த மாதிரி பல படிகளில் மாறுதல் நடக்கிறது. ஒவ்வொரு மாறுபாட்டுக்கும் என்ஸைம்கள் அவசியம். நடுவில் ஒரு என்ஸைம் சரியாக வேலை செய்யா விட்டால்கூட இந்தக் கிரியைகள் தடை படும். இவை சரியாக வேலை செய்யா விட்டால் எரிதல் நடக்கும்பொழுது விஷப் பொருள்களும் உண்டாகின்றன. விளைவு வியாதிதான். இதைக் கவனிக்காவிட்டால் எரிதல் கிரியை மிகவும் சீர்கெட்டுப் போவதால் மரணமடைகிறான்."

"அப்படின்னா இப்பொழுது நீ டாக்ட ருக்குப் படிச்சிருக்கேன்னு சொல்லு" என்றாள் அத்தை.

எனக்கு டாக்டர் பட்டம் உண்டே ஒழிய வைத்தியத்தொழில் கிடையாது, பாட்டி! டாக்டர்கள் உடற்கோளாறு களைக் கவனித்துச் சிகிச்சை செய்கிறார். இக்கோளாறுகளின் காரணத்தையும் நிவர்த்தியையும் இரசாயன சாஸ்திரி ஆராய்ச்சி செய்கிறான். உயிர்களைப்பற்றிய இரசாயன அமைப்பை ஆராயும் துறையை உயிர் இரசாயனம் (Bio. chemistry) என்று சொல்கிறார்கள். இருவரும் ஒத்து ழைத்தால்தான் வைத்தியத் துறையில் முன்னேற்றம் ஏற்படும்.

ஒரு வியாதிக்கு மருந்து கண்டுபிடிக்கப் போய் அதனால் வேறு கோளாறுகளை வர வழைத்துக்கொள்வதில் லாபமில்லை. அமெரிக்காவில் கான்ஸர், ஹிருதய நோய் இரண்டும் அதிகம். ராக்கிபெல்லர் ஸ்தாபனமும் அமெரிக்க அரசாங்க மும் இந்த இரு வியாதிகளைப்பற்றியும் ஆராய வருஷந்தோறும் கோடிக்கணக்கான பணம் செலவழிக்கிறார்கள். முக்கியமாக இந்த வியாதிகளால் என்ஸைம்களின் வேலை எவ்வளவு தூரம் பாதிக்கப்படு கிறது என்று ஆராய்ச்சி நடக்கிறது. வைத்திய ஆராய்ச்சி நடக்கும் ஒவ்வொரு ஸ்தாபனத்திலும் என்ஸைம் ஆராய்ச்சியும் கூடவே நடக்கிறது. உலகத்திலேயே பெரிய என்ஸைம் ஆராய்ச்சிக் கழகம் மாடிஸன் என்ற ஊரில் இருக்கிறது. அமெரிக்க அரசாங்கம், விஸ்கான்ஸின் ராஜ்யம், ராக்கிபெல்லர் ஸ்தாபனம் மூவரும் சேர்ந்து இதை நடத்துகிறார்கள். ஹிருதய நோய்களைப்பற்றி ஆராய்ச்சி செய்கிறார்கள்."

"இப்பதான் யாரைப்பார்த்தாலும் 'ஹார்ட் வீக்' என்று சொல்றாளே — அதிருக்கட்டும், உனக்கு அவ்வளவு பெரிய இடத்தில் எப்படி வேலை கிடைத்தது? நம்ப ஊராயிருந்தாலும் ஏதாவது சிபார்சு, கிபார்சு பார்க்கலாம்" என்றாள் யதார்த்த வாதியான கோமுப்பாட்டி.

"அது தான் நமக்கும் அவர்களுக்குமுள்ள வித்தியாசம். இந்த என்ஸைம் ஆராய்ச்சிக் கழகத்தில் உலகின் பல பாகங்களிலிருந்தும் திறமை வாய்ந்த விஞ்ஞானிகளைக்கூப்பிடு கிறார்கள். இதுவரை அங்கே நம் நாட்டி லிருந்து நான்கு பேர் அங்குச் சென்று போற்றத் தகுந்த ஆராய்ச்சிகளைச்செய்து திரும்பி வந்திருக்கின்றனர். அதே மாதிரி நம் நாட்டிலும் ஒவ்வொரு வைத்தியக் கல்லூரியிலும் என்ஸைம் ஆராய்ச்சி நடக்கவேண்டும். க்ஷயம், குஷ்டம், ஈரல் கட்டி முதலிய வியாதிகளில் என்ஸைம் மாறுபாடுகளை ஆராயவேண்டும். இந்த என்ஸைம்களைத் தனியாகப் பிரித்தெடுத் தால் தேவையான என்ஸைமமருந்தாகவோ இஞ்செக்ஷனாகவோ கொடுப்பதன் மூலம் வியாதியைத் தீர்க்கலாம்.

"அப்படின்னா நம் நாட்டிலே இந்த ஆராய்ச்சி யெல்லாம் நடக்கவில்லையா?" என்று கேட்டாள் அத்தை.

"போதுமான அளவில் நடக்கவில்லை. ஏனென்றால் ஆராய்ச்சிக்கேற்ற சாதனங் கள் வேண்டும். வேலை செய்யும் அறை பனிக்கட்டியைவிடக் குளிர்ந்த உஷ்ண நிலை யில் இருக்கவேண்டும். என்ஸைம்களைப் பிரிக்க மின்சாரத்தினால் வேகமாகச் சுழலும் மத்துப்போன்ற கருவி, (high speed Centrifuge) சுலபமாக அவற்றின் இரசாயனக்கிரியைகளை ஆராயும் (Beck-mann spectr phot meter, Warburg-manometer) முதலியன வேண்டும், இரு-தயம், சிறுநீர்ப்பை, ஈரல் முதலிய பாகங் களை தனித்தனியாகப் பிரித்து அவைகளில் உள்ள என்ஸைம்களைப் பற்றி ஆராய வேண்டும்"

"இருதயத்தை யெல்லாம் தனியாகப் பிரிக்க வேண்டுமென்றால் அது எங்கே யிருந்து கிடைக்கும்?" என்று குறுக்கி[illegible] டாள் கோமுப்பாட்டி.

"செத்துப் போனவர்கள் இரு[illegible] எடுத்துக்கொள்வார்கள்" என்ற[illegible]

"அதெல்லாம் இல்லை பாட்டி. மெடிகல் காலேஜில் பிணத்தை அறுப்பதாகக் கேள்விப்பட்டு அப்படிச் சொல்கிறீர்கள். பன்றி, குரங்கு முதலிய பிராணிகளின் பாகங்களை ஆராய்ச்சிக்காக எடுத்துக் கொள்கிறார்கள்.

"அட, சிவ சிவா" என்றாள் கோமுப் பாட்டி.

"இந்த என்ஸைம்களை மருந்தாகக் கொடுப்பதற்கு அதிகமாக உற்பத்தி செய்யவேண்டுமென்றால்?" என்று குறுக்கிட்டாள் சரோஜி.

"மண்ணில் காளான், பூஞ்சைக் காளான் பாக்டீரியா முதலியவை தோன்றுகின்றன. அவைகளைத் தனித்தனியாகப் பிரித்தெடுத்து ஆராய்ச்சிச் சாலையில் சர்க்கரை முதலிய சாதனங்களில் அவற்றை வளரச் செய்தால் அவற்றிலிருந்து என்ஸைம்கள் வைட்டமின்கள், கொழுப்புச்சத்து, புரதம் முதலியவற்றைத் தயாரிக்கலாம். இன்னும், இந்தமாதிரி காளான்களிலிருந்து வியாதிக் கிருமிகளைக் கொல்லும் பெனிஸிலின், ஸ்ட்ரெப்டோமைஸின் போன்ற மருந்துகளைக் கண்டுபிடித்திருக்கிறார்கள்."

"இந்தக் காளான்களை வைக்கோல், மரத்தூள் முதலியவற்றில் வளர்த்தும் சாப்பிடலாமாமே. ஒரு பத்திரிகையில் போட்டிருந்தது" என்றாள் சரோஜி.

"வாஸ்தவம். காளான் உணவைக் கடந்த உலக மகாயுத்தத்தின்பொழுது ஜெர்மானியர்கள் அதிகமாக உற்பத்தி செய்து உண்ண ஆரம்பித்தனர். காளான் ஆராய்ச்சியின் மூலம் உணவுப் பற்றுக்குறையை ஓரளவு தீர்க்கமுடியும்."

"முதலில் என்ஸைம்கள் எப்படி உடம்பில் உண்டாகின்றன?" என்று கேட்டாள் நாணுப்பாட்டி

"ஏது, நீங்களே ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்து விடுவீர்கள் போல இருக்கிறதே! கரு உருவாகும்பொழுதே என்ஸைம்களும் கூடவே வந்திருக்கவேண்டும்; அல்லது அவை உண்டாவதற்குக் காரணமான பொருள்கள் வந்திருக்கவேண்டும்."

இதற்குள் கமகமவென்று காபி கலக்கும் வாசனை வந்தது. சரோஜி பாட்டிகளுக்கெல்லாம் காப்பி கொண்டுவந்து கொடுத்தாள்.

"ஏது பேரன் அமெரிக்காவிலிருந்து வாங்கிக்கொண்டுவந்த காபிப் பொடியா என்ன? வாசனை ஜமாய்க்கிறதே?" என்றாள் கோமுப் பாட்டி.

"நம்ப ஊரிலிருந்துதான் அவாளுக்கே காப்பி டீ யெல்லாம் போகிறது பாட்டி" என்றாள் சரோஜி. பலகையைப் பார்த்தேன். அப்பளத்துருண்டைகளெல்லாம் காலி. பாட்டி கெட்டிக்காரிதான். பேச்சோடு பேச்சாக ஐந்நூறு அப்பளாம் இட்டு வாங்கிக்கொண்டுவிட்டாள். எனக்குத் தின்ன கடைசி உருண்டை கிடைத்தது. பாவம் அந்தப் பாட்டிகளின் உடல்களில் உள்ள என்ஸைம்களுக்கு ஏராளமான வேலை. இதற்குள் சந்தியாகால ஆராதனைக்குக் கோவில் மணி அடித்தது. "நீ இவ்வளவு நாழி பேசியிருக்கே பாவம் 'ரெஸ்ட்' எடுத்துக்கோ. படிப்பு ஜாஸ்தியானால் பதவிசாயிருக்கா. அரைகுறைப் படிப்புகள்தான் ஏதாவது கேட்டால் பெரிய ஜம்பம் பண்ணிக்கிறதுகள்" என்று சொன்னாள் கோமுப்பாட்டி. இந்த வந்தனோபசாரத்துக்குப் பின் பாட்டிகள் கோஷ்டி கோவிலை நாடிச் சென்றுவிட்டது.

நானும் ஈஸிச்சேரில் சாய்ந்துகொண்டு தனிமையின் அமைதியை ரசிக்க ஆரம்பித்தேன்.

# வாழ்வுப் பாதையில்.........

## ஆர். சுப்பிரமணியன்

குளத்தங்கரையில் சிறு பையன்கள் முதல் பெரியவர்கள் வரையில் ஒவ்வொருவர் ஒவ்வொரு காரியம் செய்து கொண்டிருந்தார்கள். ஒரு பக்கத்தில் துணி துவைத்துக் கொண்டிருந்தார்கள். ஒரு பக்கம் தண்ணீர் எடுத்துக் கொண்டிருந்தார்கள். சிறு பையன்கள் மீன் குஞ்சைப்போலத் தண்ணீரை வாரி யிரைத்து நீந்தி, துவம்ஸம் செய்து கொண்டிருந்தார்கள்.

நானும் ஒரு காலத்தில் இப்படியெல்லாம் இருந்தவன்தான். இந்தப் படித்துறைக்கு என்னைப் பச்சை குழந்தைப் பருவத்திலிருந்து தெரியும். இப்போது நான் இந்தக் குளத்தங்கரையில் வேர் விரித்துத் தழைத்து அசைந்தாடி நிற்கும் அரசமரத்தைப்போல பெரியவனாகி முதிர்ந்து கிழவனாகிவிட்டேன். தலைமயிர் மூலையில் எட்டிப்பார்க்கும் வெள்ளி நிலவைப்போல வெளுத்துப் போய்விட்டது. கடிக்கும் பற்கள் பெரும்பாலும் போய்விட்டன. பிள்ளைகள், பெண்கள், முறையெல்லாம் முடிந்து பேரன்களுக்கும் பேத்திகளுக்கும் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறேன். வாழ்க்கையின் அஸ்தமனத்தின் அருகில் வந்துவிட்டேன். அறுபதைக் கடந்துவிட்டேன். அவர்களுக்கு வாழ்வு இப்போது உதயமாகியிருக்கிறது. ஆசைகளிலும் பாசத்திலும் பிணிக்கபட்டு, துன்பத்தையும் இன்பத்தையும் ஆழ்ந்து அனுபவித்துவிட்டுக் கிட்டத்தட்ட வாழ்வின் எல்லையை அடைந்து விட்டேன்.

கடந்துவந்த பாதையைப் பார்த்து அலசி ஆராய எனக்கு விருப்பமில்லை. அதனால் படிப்பினைப் படித்து என்னைத் திருத்திச் செப்பனிட்டுக் கொள்ள எஞ்சி நிற்கும் கொஞ்சநாள் வாழ்க்கை போதாது என்ற காரணத்துக்காக மட்டும் இல்லை. பற்கள் விழுந்த இந்த நாளில் என்மேல் நான் வைத்திருந்த நம்பிக்கையும் ஓரளவு விழுந்துவிட்டது. குணத்தையும் குற்றத்தையும் ஆராய்ந்து சலித்துப்பார்க்க வேண்டிய ஆற்றல் எனக்கு இருக்கிறதா என்ற சந்தேகம் என்னை அலைக்கழிக்கிறது. அந்தச் சல்லடையின்மேல் குணம் என்பது ஓரளவுக்காகிலும் எஞ்சி நிற்குமோ நிற்காதோ என்ற பயத்திலும் கோழை மனம் நடுங்குகிறது.

பழுத்த பழம் என் தகப்பனார். உடலும் ...ணர்வும் சுருங்கி, ஆசையும் ஆவலும் ஒடுங்கி ...ர் என் வீட்டில் திண்ணை ஓரத்தில் அமர்ந்...கிறார். ஒளி யிழந்த கண்கள், சுவை இழந்த ...கேட்கும் சக்தியை இழந்த செவிகள், இவ்... கூடி அவர், தொண்ணூறு வயதை ...ந்து முதுமையின் சின்னமாக—வெற்... விளங்குகிறார். அறுபது வயது கடந்த முதியவன், செயலும் உணர்வும் சுருங்கியவன், நான் அவர் தாளடிகளில் சிறு குழந்தையைப்போல உணர்கிறேன். அவர் பாதம் பதிந்த புழுதியில் என் சிரம் சாய்க்கிறேன்.

இவ்வளவு நாட்கள் வாழ்க்கையைச் செலவழித்துவிட்ட நான் அவரைப்பற்றி எப்படியெல்லாம் நினைத்திருந்தேன்? ஒவ்வொரு வயதிலும் என் மன நிலை எப்படியிருந்தது? அந்தப் பெருந்தகையைப் பற்றிய என் எண்ணங்கள் என் சிந்தனையில் விரிகின்றன. என்னை யறியாமல் பணிவிலும் பக்தியிலும் என் மனம் தோய்ந்துவிடுகிறது.

தேய்ந்துபோன சிந்தனைச் சக்கரத்தில் எனக்கு நினைவிருக்கும் ஆதிநாட்கள்: வாழ்வின் அஸ்திவாரத்தில் கழித்த பருவம். எனக்கு நினைவிருப்பது என்னுடைய ஆறுவது வயதிலிருந்து தான். பிஞ்சு மனதில், வாழ்வின் மாசுபடியாத மனத்தில் படிந்த நினைவுதான் என்ன? 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்று பாடம் சொல்லியது. கண்முன் நின்ற தெய்வம், தந்தையிடம் எனக்கு எத்தகைய மதிப்பு இருந்தது? அவர் எனக்கு எல்லாமாகத் தோன்றினார். அவரால் செய்யக்கூடாதது ஒன்று இருப்பதாக நான் நினைத்ததில்லை. அவர் தவறு செய்ததாகவே நான் எப்போதும் கருதியதில்லை. அவர் முன்னிலையில் தெய்வத்தின் முன் நிற்கும் மனிதப்பிறவிக்கு உண்டாகும் பக்தியும் ஆச்சரியமும் தான் என் மனதில் படர்ந்தன. அவர் எனக்கு வழிகாட்டியாக இருந்தார். அவர் எனக்குச் சொன்ன புத்திமதிகள், எடுத்துக்காட்டிய படிப்பினைகள், ஒவ்வொன்றும் எனக்கு இருளில் வைத்த விளக்கு ஒளியைப்போலத் தோன்றின.

பதினைந்து வயதுப் பையனாக இருந்த சமயம். என் மனம் சற்றே மாறியது. எனக்குள்ளே என்னையறியாமல் ஒரு கேள்வி விழுந்தது. உண்மையில் என் தந்தை நான் அவரைப்பற்றிக் கருதிய அளவுக்கு உயர்ந்தவர்தானா? அவர் செய்கைகளில் குற்றம் இருக்க முடியாதா? அவர் தவறு செய்யாதவரா? வாழ்க்கையில் அடிபட்ட அவர், அதன் இன்ப துன்பங்களில் உழன்றவர், என்னைக் கைதூக்கிவிடக்கூடிய அளவிற்கு, அனுபவம் வாய்ந்தவர்தானா? அவர் புத்திமதிகள் எல்லாம் அப்படியே ஏற்றுக்கொள்ளக்கூடியவைகள்தானா? என் மனதில் சந்தேகம் நிழலிட்டது. சில சமயங்களில் அவர் சொன்னவை, அவர் காட்டிய வழி என் கோபத்தைத் தூண்டின. அவர்மேல் எனக்குஇருந்த பக்தியும் அன்பும் கூடச் சிற்சில சமயங்களில் சற்றே குறைந்தன.

இருபத்து இரண்டு வயதில் நான் காலேஜில் படிப்பை முடிக்கும் தறுவாயில் இருந்தேன். வாலிபப் பருவத்தின் பரிணமிப்பு அனைத்தும் என் உடலைப் பரிமளிக்கச் செய்தது. என் மனம் புதுப்புதுக்கொள்கைகளைப் பின்பற்றியது. அந்த நோக்கம், அந்த முன்னேறிய பண்பாடு ஏன் பெரியவர்களுக்குப் புரியவில்லை என்பது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. அதைப்பற்றி நான் தகப்பனாரிடம் சொன்னபோது அவர் மெதுவாகச் சிரித்துக்கொண்டே, "உன் உடல் வளர்ச்சி யடைந்த அளவிற்கு உன் உள்ளம் வளரவில்லை அப்பா?" என்று சொல்லிக்கொண்டே கோர்ட்டுக்குப் போய்விட்டார். என் மனம் குமுறியது. அவரைப் பிற்போக்கானவராகக் கருதினேன். அவர் கொள்கைகள் உளுத்துப் போன பழம், சமுதாயத்துக்கே ஏற்றவை என்று முடிவு கட்டினேன். அவரை வழிகாட்டியாக ஏற்க என் மனம் மறுத்தது. அவர் புத்தி மதிகள் எனக்கு ஏற்றவையாகப் படவில்லை. என் வாழ்வு ஒவ்வொரு அம்சத்திலும், புதுமையாக, அவர் வாழ்வினின்று வேறுபட்டதாக இருக்கவேண்டுமென்று நான் விரும்பினேன். என் மனமென்ற அளவு கோவில் அவர்பால் நான் கொண்டிருந்த பக்தியும் மதிப்பும்வெகுவாக விழுந்துவிட்டன.

என் கலியாணம் நடைபெறப்போகும் நாள் வந்தது. அவர் அப்போது கைக்கொண்ட முறைகள், என் திருமணத்தை அவர் முடிவுசெய்த விதம், கலியாணத்திற்குப் பிறகு ஒவ்வொரு சமயத்திலும் அவர் மேற்கொண்ட ஆசார வழக்கங்கள். புராதனப் பண்பாடு என் மனத்தில் வெறுப்பையும் சலிப்பையும் தூண்டின. என் இளமை பொருந்திய உள்ளம் அவர் பிடியை மீறித் துள்ளியது. அவரை மீறி ஒவ்வொரு காரியத்தையும் நான் செய்யத் தொடங்கினேன். என் மனைவியின் பாவனைகளிலும், நடை உடைகளிலும் நாகரிகத்தைப் புகுத்தினேன். அவளை எனக்குச் சரி நிகர் சமானமான நிலையில் வைத்து என் நண்பர்களும் உறவினர்களும் ஆச்சரியப் படும்படி நடத்த ஆரம்பித்தேன். என் தந்தை எப்போதாவது எனக்குப் புத்திமதி சொல்லி என்னை மாற்ற முயன்றால் அவர் மீது எனக்கு அளவிறந்த கோபம் உண்டாயிற்று. "அப்பா உங்கள் தலை முறை வேறு. எங்கள் தலை முறை வேறு. உங்கள் பழக்கங்களை எங்களுக்குப் போதிக்காதீர்கள். நாங்கள் அதைப் பின்பற்ற வேண்டுமென்றோ மதித்து உணர வேண்டு மென்றோ சொல்லாதீர்கள்." என்றே சொல்லி விட்டேன். பெரியவர்களுடைய பழக்க வழக்கங்களைப் பகிரங்கமாகப் பிரசங்கங்களில் கண்டித்தேன். பத்திரிகைகளில் நவ நவமான கட்டுரைகள் எழுதினேன். என் தந்தை அவைகளையெல்லாம் அமைதியான புன்சிரிப்புடன் ஏற்றுக் கொண்டபோது என் மனம் அமைதியிழந்து கொந்தளித்தது. 'இவரையா ஒரு காலத்தில் என் வழிகாட்டியென்றும், இருளில் விளக்கு என்றும் எண்ணினேன்! அவர் என் முன் செல்ல வேண்டியவர் அல்ல; அவருக்குத்தான் நான் சொல்லித்தர வேண்டியவைகள் இருக்கின்றன' என்ற எண்ணம் என்னை ஆட்கொண்டது. என் நண்பர்கள் முன்னிலையில் அவரைப் பற்றிப் பேசுவதற்குக்கூட எனக்கு வெட்கமாக இருந்தது. அவருடைய கொள்கைகள் என் பரிகாசத்துக்கு ஆளாயின.

எனக்கு முப்பத்தைந்து வயதாயிற்று. என் முதல் பெண் பதினொன்று வயதைக் கடந்து விட்டாள். இன்னும் நாலைந்து வருஷங்களில் அவளுக்கு மணம் செய்து வைக்க வேண்டிய பொறுப்பை லேசாக உணர ஆரம்பித்தேன். என் மற்றக் குழந்தைகள் ஒவ்வொருவராக வளர ஆரம்பித்தார்கள். எனக்கு அடுத்த தலை முறை என் பின் முன்னேறி வருவது போன்ற உணர்வு என்னை ஆட்கொண்டது. நான் முதுமையை நோக்கிச் செல்வதை உணர்ந்தேன். முற்றி முதிர்ந்து என் வீட்டில் இருந்த தந்தையை நான் கொஞ்சம் கவனித்து நோக்கத் தொடங்கினேன். சின்னஞ் சிறு வயதில் நான் என்முன் கண்ட என் தந்தை அவர் வயதை நான் இப்போது அடைந்திருந்தேன். அவர்என்னை நடத்தியவிதம், எனக்குச் செய்தவை, என்பால் ஆற்றிய கடன், இவைகளை நான் இப்போது எவ்வளவு செய்கிறேன்? என் மனம் சற்றே பின்னிட்டது. தந்தையின்-வாழ்க்கை-அவர் காட்டிய வழி-பின் பற்றிய கொள்கைகள், அனைத்தும் தவறா? அல்லது ஓரளவுக்குஅவைகளைநான்மதிக்கவேண்டியது தான் சரியா? என் மனம் சஞ்சலம் அடைந்தது. என்னையறியாமல் என் அடி அவர் சுவட்டில் பதிந்து முன்னேறத்தொடங்கியது.

நான் நாற்பத்தைந்து வயதை எட்டினேன். என் பெண்ணுக்குக் கலியாணம் ஆகிவிட்டது. பிள்ளைகள் வளர்ந்து விட்டார்கள். என் தலை முறை முதுமையை எட்டத்தொடங்கிவிட்டது. என்பெண்கள், என் பிள்ளைகள்முதுகு மறைந்த பின் என்னைப்பார்த்துச் சிரிப்பதை நான் கவனிக்கத் தவறவில்லை. என் பிள்ளை ஒரு நாள் "அப்பாவுக்கு அதெல்லாம் புரியவும்புரியாது. பிடிக்கவும் பிடிக்காது. அவர் காலத்துப்பழக்கங்களையேதான் அவர் விடாப் பிடியாகப் பிடித்துக்கொண்டிருப்பார்" என்று சொன்னான். என் மனம் திடுக்கிட்டது. அவனிடம் என் நிழலையே காண்கிறேனோ? அவன் பேச்சு என் பேச்சின் எதிரொலியா? என்குழந்தைகள், நவநவமான பழக்கங்களைத் தொடர்ந்த போது எனக்கு அவை ஏறுமாறாகத் தென்பட்டன. அவைகளை அமைதியுடன் ஒதுக்கினேன். என் நிலை அவர்கள் சில சமயம் என்னை மீறிய போதுகூடத் தடுமா வில்லை. நான் புன்சிரிப்புடன் அவர்களைத் திரு முயன்றேன். ஆனால் என் மனம் ஊசலாட என் கண் முன் நின்ற தந்தையின் அவர் பெருமை எனக்குப் பன் பெருகித் தோற்றமளித்தது. அவர் செய்த அளவில் நான் என் குழ

செய்ய முடியவில்லையே? அநுபவத்தில் திளைத்த அவருடைய கொள்கைகளில் மெருகிட்ட மேன்மை என் பேச்சிலும் கொள்கைகளிலும் ஒளிர வில்லையே? தந்தை வாழ்க்கையில், அவர் அடைந்த முன்னேற்றம், சாதித்த சாதனைகள், அவைகளில் ஒரு பங்கையேனும் நான் சாதிக்க முடியுமா? என் மனம் என்னையே பயமுறுத்தியது. என்னுடனேயே வாதித்தது தந்தை என்னைக் காட்டிலும் பன் மடங்கு உயர்ந்தவர் என்ற எண்ணம் என் மனத்தில் நிரம்பியது பெரும் பாலும் அவர் கொள்கைகள் சரியானவை; அனுபவ வாயிலாக எழுந்த உண்மைகள் என்று உணர்ந்தேன்.

வாழ்க்கையின் ஒவ்வொரு ஆண்டு எல்லையை, ஒன்றன்பின் ஒன்ருகக் கடந்தேன். முதுமை என் உடலில் பரவியது. முதிர்ந்த நரைத்த தலைமயிர், தளர்ந்துபோன நரம்புகள், உறுதி குன்றிய உறுப்புகள் இவைகளுடன் என் மனமும் முதிர்ந் தது; என்மேல் மட்டும் நான் வைத்திருந்த நம் பிக்கை தளர்ந்தது; என் கொள்கைகளிடம் நான் கொண்டிருந்த உறுதி குன்றியது. அறுபது வயதை எட்டிவிட்டேன். என் பின் இரண்டு தலைமுறைகள் வளர்ந்துவிட்டன. புதியன புகுந்துவிட்டன; கழிந்த பழையதில் நானும் ஒருவன் என்று உணர்ந்தேன். வீட்டின் முன் வாயிலில் அமர்ந்திருந்த என் தந்தை மறுபடி என் கண்முன் நின்ற தெய்வமாகத் தோன்றினர். அவர் புத்திமதிகள் ஒவ்வொன்றும் பொன்மொழி களாகத் தோன்றின. அலைமேல் அலைமோதி, சுழற்காற்றிலும் சூறையிலும் சிக்கித் தத்தளித்து, தடுமாறித் திசை தப்பி நின்ற கப்பல் கரைமேல் நின்று ஒளி வீசிய ஸ்தம்பத்தை நோக்கி, ஆவ லுடன் முன்னேறுவதைப்போல என் மனம் அவர் காட்டிய வழியை ஆவலுடன் பின்பற்றி யது. அவர் வாழ்ந்த வாழ்க்கை, கைக்கொண்ட கொள்கைகள், இவை மதிப்பிடமுடியாத பொக் கிஷம் என்று அறிந்தேன். அவர் கூறுது கூறிய புத்திமதிகள், செயலால் உணர்த்திய வழிமுறை கள், இவைகளைப் போற்றிப் பணிந்தேன்.

என் மனம் அவருக்கு அஞ்சலி செய்தது. அவர் பாதம் படிந்த புழுதியில் என் சிரம் சாய்ந்தது. அவர் நிழலில் என் மனமும் செயலும் லயித்தன, பிஞ்சுவயதில் நான் தொடங்கின வாழ்க்கை, அப் போது என் கண்முன் நின்ற நானறிந்த தெய்வம். இன்றும் அவரே என் தெய்வம் என்று நான் அறிகிறேன். அவர் ஆற்றிய அளவு என்னுல் என் கடமைகளை ஆற்ற முடியவில்லை. அவர் ஆராய்ந்து அறிந்து உணர்ந்த அளவு என்னுல் வாழ்க்கையைப் படித்தறிய முடியவில்லை. என் சுவட்டில் அவர் அடிச்சுவட்டின் உறுதி இல்லை. இவைகளை நான் உணராமல் இல்லை. இவைகளை நான் கவனிக்காமல் கண்களை மறைத்துக்கொள்ள வும் தயாராக இல்லை.

என் தந்தை என்னைக்காட்டிலும் பன் மடங்கு மேலானவர். அவர் என்றும் என் முன் நின்று வழிகாட்ட வேண்டியவர். அவருக்கு முன் செல்ல நான் விரும்பவில்லை. நான் தவறு செய்யக்கூடியவன். அதைத் திருத்தக் கூடிய பெருந்தகை, அவர் இருக்கும் வரை நான் அதைப்பற்றிக் கலங்கவேண்டியதில்லை.

என்னைப் பரிகசிக்கும் என் பிள்ளைகள் நாளை என் வார்த்தைகளை ஆராய்ந்து நோக்க நினைக்க லாம். முதுமை படரத்தொடங்கும் போது என் சொற்களை, செய்கைகளை மதிக்கத்தொடங்க லாம். எனக்கு அது புதியது அல்ல.

இன்று என் பிள்ளைகளை ஆச்சரியத்தோடு அண்ணுந்து பார்க்கும் என் பேரப்பிள்ளைகள் நாளை அவர்களை உதாசீனம் செய்து விடலாம். எனக்கு அது புதுமையாகாது.

ஆனுல் நான் உணர்ந்ததை அவர்களும் உணர்வார்கள். வாழ்க்கை ஒரு வளையம். ஏறு வாயில்களில் முன்னேறும் போது இறங்கும் படிகளின் வழியே ஒரு நாள் அவர்கள் வரா மல் இருக்க முடியாது. முதல் எங்கயோ முடி வும் அங்கேதான். மாசறியா மனத்தின் பண்பை, முற்றிய மனம் அடைந்து தேறி நிற்கும் போது வாழ்வை வெற்றிகாமாக முடித்து விட்ட பெருமையில் அது திளைத்து விடுமோ என்னவோ யார் கண்டது?



# கட்டிடம் கட்டுவதின் கிரயத்தை சிக்கனமாக்குங்கள்




## ப்ரீகாஸ்ட் கான்கிரீட் வீடு

பூரண சித்திரங்களுடன் கூடிய 72 பக்கங்கள் கொண்ட "ப்ரீகாஸ்ட் கான்கிரீட் வீடு" எனும் பிரதி எவரும் சுலபமாய் புரிந்து கொள்ளும் வகையில், எளிதான முறையில், கான்கிரீட் போல் கல்களினுலும், முன்கூட்டியே கான்கிரீட்டினுல் செய்யப்பட்ட இதர பாகங்களாலும் சிக்கனமாக வீடுகள் கட்டும் முறையை விளக்குகிறது. இதில் உள்ள மதிப்பு விவரங்களைக் கொண்டு உங்களுடைய புதிய வீடு கட்டுவதற்கு என்ன சிலவு ஆகுமென நிர்ணயிக்க உதவும். இப்புத்தகத்தில் எஸ்டேட் தொழிலாளர்களுக்கும் சிப்பந்திகளுக்கும் வீடு வசதிக்கான பிளான்களும் திட்டங்களும் விவரிக்கப் பட்டிருக்கின்றன. இதுவும் அன்றி எஸ்டேட்களுக்கு சாதாரணமாய் தேவையாயிருக்கும் சாக்கிடை சுத்திகரினிகள், தடுப்புசுவர்கள் மதில் சுவர்கள், வேலிகள் விளக்குகம்பங்கள் முதலியவை பற்றி விவரமாய் சித்திரங்களுடன் விளக்கியிருக்கிறது.

தி காங்கிரீட் அஸோஸியேஷன் ஆப் இந்தியா 9, மவுன்ட் ரோடு, மதராஸ். என்ற விலாசத்திற்கு எழுதுங்கள்.

தயவு செய்து "ப்ரீகாஸ்ட் கான்கிரீட் வீடு" புத்தகத்தின் என்னுடைய பிரதியை எனக்கு அனுப்புங்கள். இதன் விலையும், தபால் செலவிற்குமாக ரூ. 4/6/— எம். ஓ/. போஸ்டல் ஆர்டர் மூலமாக அனுப்பியிருக்கிறேன். **C K**

பெயர்..............................................

விலாசம்............................................

....................................................

செக்குகள் பெற்றுக் கொள்ளப்பட மாட்டா.

**தி அஸோஸியேடட் சிமெண்டு கம்பெனீஸ் லிமிடெட்.**

இவர்களின் வியாபார மானேஜர்கள்

**தி சிமெண்டு மார்க்கெட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லிட்.**

SISTA'S CMI. 115

# டில்லித் தபால்

கே. ஸ்ரீநிவாஸன்

தேசபக்தர்கள் யார் என்பதைப்பற்றி
அந்தக் காலத்திலேயே சர்ச்சை
ந்ததுண்டு. மக்களுடைய பணம் இன்ஷு
ன்ஸ் மூலம் கம்பெனிகளுக்குப் போய்ச்சேர்
து; அதை ஜாக்கிரதை செய்வது இன்
ரன்ஸ் சட்டத்தைத் திருத்துவதுமூலம்
சியம் என்று முடிவுசெய்து பலத்த
பைச் சகித்துத் திருத்தச் சட்டத்தை
அசெம்பிளியில் உருவாக்கிய மன்
பமூர்த்தி அந்தக் காலத்துச் சட்ட
என். என். சர்க்காரைப்பற்றிச்
ரீ சர்க்கார் பெரிய தேசபக்தர்.
இடத்தில் வீற்றிருக்கிறார்."
ற்குக் காரணமும் உண்டு.
பொதுஜனப் பிரதிநிதிகள்
போடுவது பிரிட்டிஷ்
வதுமாதிரி இன்ஷு
த்திலும் செய்தால்
செய்வதாகப் பய

யைப்பற்றிய
அடாடா!
கமானவ
ஜனசங்
என்
தேச
ள

செய்து பிறகு அரசியல் துறையில் பிரவேசித்
தார், தம்முடைய மாகாணமான வங்கா
ளத்திலேயே அரசியலில் நல்லபேர் எடுத்து,
பிறகு இந்திய அரசியல் நிர்ணய சபையில்,
அல்லாடி, அம்பேத்கார் முதலிய மேதை
களுடன் சாஸனம் உருவாக்குவதில் அரு
சேவை செய்தார். பிறகு ம திய சர்க்
தொழில்மந்திரி பதவியைத் தம்
யைக் கைப்பிடிக்க வேண்டி
செய்தார். அந்தச் சமயந்தான் பிர
லியாகத் ஒப்பந்தம் ஏற்பட்டிருந்தத
ஒரு தலைப்பட்ட ஒப்பந்தம், இந்தி
கள் அவதி நிவர்த்தி, அவர்கள் இழந்த
துக்கு நஷ்ட ஈடு முதலிய இந்திய-
தான் பிரச்னைகள் தீர்வதற்கு ஒ
ஷரத்துக்கள் கொண்டிருந்தால்
ஒப்பந்தம் ஒழிசல் என்று கக்ஷியி
டாக்டர் முகர்ஜி.

* * *

டாக்டர் முகர்ஜி பார்லிமெண்டி
நாளில் சத்தியமூர்த்தி செ
சேவையைச் செய்து வந்தார். பே
எழுத்துச் சுதந்திரத்தை, சர்க்கார்
செய்கிறது, உஷார் என்று
சர்க்கார் தரப்பில் சமீப காலத்தில் வ
வரும் திமிர்தண்டத்துக்கு மாற்றாக இருந்
வந்ததுடன் தேசநலன் என்ற விஷய
களில் சுய-கக்ஷி நலங்களை உதறித்தள்ள
வர். அவரை விசாரணையின்றிச் சிறை
வைத்து, அவர் நோய்வாய்ப்பட்டதை
ந்திரமாக வைத்து, அவர் சிறையில் தே
போகமானது இந்திய சர்க்காருக்
நீர் சர்க்காருக்கும் பெரிய தலைகுனி
டர் முகர்ஜி தம் வாழ்க்கையி
சட்டத்தில் தேச நலம்பற்றி
இருந்ததுடன் தம் வயதுக்
நத்துடன் நடமாடினார்.
நக்கு ஓரிரு தட
ங்கள் ஏற்ப

* * *

வருமுன் காப்போன் வந்த பின் காப்போ
னில் பிந்திய ரகத்தைச் சேர்ந்தவர்
கள் இந்திய சர்க்கார். சிலமாதங்களுக்கு முன்
டாக்டர் முகர்ஜி காஷ்மீரைக் குறித்து வட்ட
மேஜைப்பேச்சுகள் நடத்த வேண்டும் என்று
பிரதமர் நேருவுக்குப் பல கடிதங்கள் எழுதிய
பொழுது நேரு அப்துல்லாவைக்கலந்த பிறகு
கேவலம் ஒரு எதிர்ப்புக் கக்ஷியினருடன்
பேச்சு வார்த்தைகள் நடத்துவதா என்று
வாளாவிருந்தார். காஷ்மீரில் அப்துல்லா
ஒரு கழைக்கூத்தன் வித்தை நடத்துகிருர்
ன்பது தெரிந்த விஷயம். ஆனுல் அதிலும்
வில் உள்ள ஹிந்துக்களுடைய அபிப்பி
புகார்களுக்குச் செவி சாய்த்திருக்க
பிரஜா பரிஷத் என்ன ஸ்தாபனம்,
நசுக்கி விடலாம் என்று காஷ்மீர் சர்க்
எண்ணியிருக்கலாம். ஆனுல் சென்ற
தங்களில் நடந்த கிளர்ச்சியில் பல்லா
ஹிந்துக்கள் பங்கெடுத்துக்கொண்டு
சென்று வெளி வந்தது பரிஷத் பூச்
காண்பிக்கவில்லை என்பதைத் தெளி
யிருக்கிறது.

மு சத்தியாக்கிரகமும் இந்திய ஜன
- ஹிந்து மகா சபை - ராம்ராஜ்யப்
கூட்டு இயக்கமும் பாகிஸ்தானில்
யுண்டு மாதிரி கிடைத்தன துஷ்பிர
கு. தவிர, இந்த இயக்கம் காஷ்
ள்ள முஸ்லிம்களிடையேயும் இந்தி
ாக்கத்தைப்பற்றிச் சந்தேகத்தைக்
ப்பி விட்டிருக்கின்றன.

காஷ்மீரப் பிரச்னையைத் தம் அளவு கடந்த
ர்ஷை வாதத்தால் நேரு பேசிக் கலக்கினுர்.
திய யூனியனுடன் இணங்கிய காஷ்மீரத்
வருங்கால அந்தஸ்தைக்காஷ்மீர்மக்களே
ன் நிர்ணயம் செய்யவேண்டும் என்
ரு சொல்லாமல் இருந்திருந்தால்
ாழுது பொது ஜன வாக்கெடுப்பு
ச்னைகள் எழுந்திருக்காமாட்டா.
தாபனத்திலும் நியாயம் கி
வறுவழியும் இல்லைஎன்று விளங்
பொழுது இந்தியாவும்
ச்னையைத் தீர்த்துக்
இல்லை. இங்கி

கள் காஷ்மீரத்தைத் துண்டாகக் வேண்டும்
என்கிருர்கள்.

ஜம்முவில் நடந்த சத்தியாக்கிரகம் சுதா
வாக ஷேக் அப்துல்லாவின் தலைமையில் நம்
பிக்கை உள்ளவர்களைக்கூடக் கொஞ்சம்
கல கலக்க வைத்து விட்டது. சமீபத்தில்
அப்துல்லா ஸ்தாபனத்தைச் சேர்ந்த ஒரு
பிரபலஸ்தர் பொதுக் கூட்டத்தில்
குழப்பத்தை வெளியிட்டுக் கைதியாகு
''ஜம்மு ஹிந்துக்கள் காஷ்மீர் இந்தி
வுடன் ஐக்கியம் ஆகவேண்டும் என்கி
கள். பாகிஸ்தானிகள் கில்கிட்—பூன்ச்
களுடையது என்கிருர்கள். இந்த இ
டையும் ஒழித்துத்தொலைத்துவிட்டு ந
அக்கடா என்று காஷ்மீரப்பள்ளத்த
தனி ராஜ்யமாக்கிக் கொள்
என்ருர் இவர்.

சில சமயங்களில் அப்துல்
சுயேச்சைப் பைத்
பது உண்டு. ஜம்மு மி
பிரதேசம், அதுமட்
சேர்க்கப்பட்டால்,
வம்தான். ஆகவே
சந்தேகம் ஒழியவே
உணர்ந்துதான்
தன் சத்தியா
வேண்டுகோ
பிரதமரின்
தற்கு
இந்திய